ஸ்ரீ:

# கங்காதேவியின் 'மதுராவிஜயம்'

மொழி பெயர்ப்பாளர் & தொகுப்பாசிரியர் :

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர்

வெளியீடு :

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமத் வரவரமுனயே நம:

# கங்காதேவியின் "மதுரா விஜயம்"

[தமிழ் மொழிபெயர்ப்பு]

*தொகுப்பாசிரியர்-மொழிபெயர்ப்பாளர்:*
*ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்.*

*வெளியீடு:* ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

*214, கீழை உத்தர வீதி (விக்ரம சோழன் திருவீதி)*
*ஸ்ரீரங்கம், திருச்சி-620006. ☎: 0431-2434398.*
**www.srivaishnavasri.com**

**2.9.2010**
**(விக்ருதி ஆண்டு, ஆவணி-17ஆம் நாள், ஸ்ரீஜயந்தி)**

விலை ரூ.200/- தபால் செலவு தனி

## நூல் விளக்கம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | கங்காதேவியின் "மதுராவிஜயம்"- |
| தலைப்பு | வரலாறு |
| தொகுப்பாசிரியர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர். |
| வெளியீட்டு நாள் | 2.9.2010 |
| தாள் | 18.Kg. Maplitho. |
| அச்சு | Offset Printing, 12 points |
| அளவு | Demy 1/8 |
| அச்சகம் | ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்,<br>214, கீழை உத்திர வீதி,<br>ஸ்ரீரங்கம், திருச்சி-6,<br>போன்: 0431-2434398.<br>Cell: 09884289887 |
| பக்கங்கள் | 240+20. |
| படிகள் | 1000 Copies |
| விலை | ரூ.200/- |
| உரிமை | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ, ஸ்ரீரங்கம். |
| நூல் கிடைக்குமிடம் | ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்,<br>214, கீழை உத்திர வீதி,<br>ஸ்ரீரங்கம், திருச்சி-6,<br>☎: 0431 - 2435641, 2434398.<br>Cell: 0 98842 89887<br>Website: www.srivaishnavasri.com |



## பொருளடக்கம்

# கங்காதேவியின் 'மதுராவிஜயம்'

## அணிந்துரை: 1.

மதுரைப்பேராசிரியர். முனைவர். இரா. அரங்கராஜன் M.A,Ph.D
28-A, பழங்காநத்தம் அக்ரஹாரம், அக்ரஹாரம் தெரு, மதுரை-3.
தொலைபேசி: 0452-2371124. 25-7-2010.
மதுரை.

திருவாய்மொழிப் பேருரையாளர்களில் வரலாற்று ணர்வு மிக்கவர் ஸ்வாமி நம்பிள்ளை. அவர் அருளிச் செய்த அகலவுரையான ஈட்டில் தாம் வாழ்ந்த காலத்து அரசியல் நிகழ்வுகளையும், சமுதாய ஒழுகலாறுகளையும் பல இடங் களில் பதிவு செய்திருக்கிறார். அவற்றில் பேரரசர்கள், சாமந்தர்கள், பிரமராயர்கள், கிழக்கத்திய ராஜாக்கள், ராஜ பத்னிகள், ராஜசபைகள், அகரம் வைத்த அரசர்கள், பெரும் போர் நிகழ்ச்சிகள், சிறைப்பட்ட சிற்றரசனை முடி கவித்து விலங்கு வெட்டிய அரசியல் நெருக்கடிகள், அடைய வளைந் தானுக்கு உட்பட்ட குடிமக்கள் உயிர் தப்ப ஓடிச்சென்று திருமதிளுக்கு உட்பட்ட கோபுர வாசல்களில் பெரு நெருக் கடியில் உட்புகுந்து எழுப்பிய பேரோலங்கள்-இன்னும் பல செய்திகளைத் தமது பேருரையில் கல்வெட்டாகப் பொறித்து ள்ளார்.

ஆயிரத்தளியில் நடந்த கொடுஞ்செயலைக் கண்ணீர் பெருக்கி விவரித்துள்ளார். திருவரங்கம் பெரியகோயில் மதிற்சுவர்களில் வெட்டியதுபோல் நம்பிள்ளை (வடக்குத் திருவீதிப்பிள்ளை) ஏட்டுச்சுவடிகளின் ஓலைகளில் எழுத் தாணி கொண்டு பதித்துள்ளார். நம்பிள்ளை அருளிய ஈடு முப்பத்தாறாயிரம் உண்மையில் தமிழகத்தின் வரலாற்றை அறிய உதவும் வரலாற்றுச் சான்றாதாரமாகும்(Historical Document). இச்சான்று ஆதாரங்களை கோயிலொழுகு கொண்டு

ment). இச்சான்று ஆதாரங்களை கோயிலொழுகு கொண்டு முதற்கண் ஆய்வு நிகழ்த்தியவர் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ண மாசார்யரே ஆவர். அவர்தம் ஆய்வுக்காகவே நம்பிள்ளை பல செய்திகளை விட்டுச் சென்றார் என்பது அடியேன் கொண்ட முடிவு. நிற்க;

அவரையடுத்து அத்தகைய வரலாற்றுணர்வும் ஆராய்ச்சித் திறனும் கொண்டவர் பிள்ளைலோகஞ்சீயரே ஆவார். முகம்மதியர்களின் படையெடுப்புகளினால் பெரிய கோயில் அவலப்பட்ட அலங்கோலங்களையும் நம்பெருமாள் நாச்சிமார்களோடு திருவரங்கத்தைத் துறந்து 48 ஆண்டுகள் காடுகள் மலைகள் ஆறுகள் உப்பங்கழிகள் இன்னோரன்ன இடர்ப்பாடுகளைக் கடந்து சென்று திருவரங்கத்திற்கு மீண்டெழுந்தருளியது. நம்மாழ்வாரும் அவ்வாறே இன்னல் களை எதிர்கொண்டு திருக்கணாம்பிவரை சென்று திருவாய் மொழிப் பிள்ளையின் பெருமுயற்சியால் திருக்குருகூர் திரும்பியெழுந்தருளிய செய்திகளையும், ஒருங்குதிரட்டி 'யதீந்த்ரப்ரவணப்ரபாவம்' என்ற அரிய நூலில் விவரித்துள்ளார். அவர்தரும் செய்திகளை உற்று நோக்கினால், பிள்ளைலோகஞ் சீயர் அவ்விடங்களுக்கு நேரிற் சென்று களஆய்வு (Field Study) செய்திருப்பார் என்றே தோன்றுகிறது.

நம்பெருமாள் துருஷ்கரின் அழிவுக்குப் பிறகு ஸ்வஸ் தானமான கோயிலில் பூபாலராயன் என்ற தேவாஸனத்தில் திருப்பிரதிஷ்டையான காலத்தையும் பிள்ளைலோகஞ்சீயர் யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் சிறப்பாகக் குறிப்பிடுகிறார். வீரகம்பண்ண உடையார், அவருடைய படைத்தலைவராய் அந்தணர் குலத்தலைவராய் விளங்கிய கோபணார்யர் மற்றும் ராஜபத்னியாகிய கங்காதேவி, அழகியமணவாளன் காணி யாளரான சிங்கப்பிரான் புத்திரரான திருமணத்தூண் நம்பி



மற்றும் உத்தமநம்பி ஆகியோர் முன்னிலையில் நம்பெரு மாளின் பிரதிஷ்டா வைபவம் கோலாஹலமாய் நடத்தப் பெற்றது. இஃது நிறைவேற்றப் பெற்றது (கி.பி.1371) சகாப்தம் 1293, நல்லதோர் பரீதாபி வருஷம் வைகாசி மாதம் பதினேழாம் தேதி ஆகும்.

அப்போது திருப்பிரதிஷ்டையின் நினைவாக சிலாசாஸனம் ஒன்று ராஜமகேந்திரன் திருச்சுற்றின் கீழண்டை வெளிப்புறத்திலே ஏறியருளப்பண்ணப்பட்டது. அது ஸம்ஸ் க்ருத ச்லோக ரூபத்தில் அமைந்துள்ளது. உத்தம நம்பியால் கோபணார்யனுக்கு அது தனியனாக ஸமர்ப்பிக்கப்பட்டது என்று கோயிலொழுகு வாக்யத்தால் தெரிகிறது. அந்த ச்லோகத்தையும் அதன் பொருளையும் இந்நூலின் பக்கம் 72இல் காணலாம். இந்த ச்லோகத்தை ஸ்ரீவேதாந்த தேசிகர் இயற்றியதாக வடகலை மூவாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் கூறப்பட்டிருப்பது பொருந்தாது என்று ஸ்ரீவைஷ் ணவஸ்ரீ கிருஷ்ணமாசார்யர் நிரூபித்திருப்பது குறிப்பிடத் தக்கது.

பிள்ளைலோகஞ்சீயர் தாம் இயற்றிய ''யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தில் மேற்குறித்த சிலாசாஸனத்தை அவ்வாறே எடுத்தெழுதி'' இப்படி, உபயுக்தமும் அருளிச் செய்தாரிறே என்று குறிப்பிடுகிறார். பிள்ளைலோகஞ்சீயர் தாமே அந்த சிலாசாஸனத்தை நேரிற்கண்டு படித்துத் தம்முடைய நூலில் இடம் பெறச் செய்தார் என்பது இந்தக் குறிப்பிலிருந்து பெறப் படுகிறது. ஆனால் இன்று அக்கல்வெட்டை ஒருவரும் படிக்க முடியாதபடி அலட்சியப்படுத்தியுள்ளனர். இன்று சாதாரணச் சிறு கோயில் கும்பாபிஷேக விழாக்களில் பெரிய பெரிய கல்வெட்டுக்களை வடித்துச் சுவர்களில் பதித்து வருகின்றனர். ஆனால் வரலாற்றுப் புகழ் வாய்ந்த மேற்குறித்த சிலாசாஸனத்

தைக் கட்டமிட்டு எழுத்து வரிகள் புலனாகும்படி மை தீட்டிக் காட்ட, நாம் இன்றே ஒரு போராட்டம் தொடங்கவேண்டும்! ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய பிரவர்த்தகர்கள் நினைத்தாகினும் பார்ப்பார்களா! கங்காதேவியின் மதுராவிஜயம் என்ற நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பைச் செய்தவர் ஸ்ரீ. S.திருவேங்கட டாசாரியார் என்ற பேராசிரியர். 1958ஆம் வருடம் இவரிடம் அடியேன் B.T.என்ற ஆசிரியர் பயிற்சிக்கல்வி படித்தேன். அப்போது இந்த நூலை ஒப்படைத்து பிற்காலத்தில் இதன் மஹிமை வெளிப் படும் என்றார்.

அதன்படி 1968ஆம் வருடம் எழுத்தாளர் ஸ்ரீவேணு கோபாலன் என்ற "புஷ்பாதங்கதுரை" திருவரங்கன் உலா என்ற நாவலை எழுத முயன்றபோது அடியேனை பேட்டி கண்டு மதுராவிஜயத்தை வாங்கிச் சென்று குறிப்பெடுத்துக் கொண்டு திருப்பியனுப்பினார். திருவரங்கன்உலா எழுதியபோது அவர் ஜோதிஷ்குடி வரலாற்றை அறியாததால் பிள்ளைலோகாசார்யர் சிவகங்கை அருகிலுள்ள காளையார்கோயிலில் ஒரு காட்டில் உயிர் துறந்தார் என்று எழுதிவிட்டார். பிறகு மற்றொரு சமயம் அவரிடம் விளக்கியபோது புரிந்து கொண்டார்.

அடுத்து கோயிலொழுகு விரிவு நூல்களை ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ ஸ்வாமி பதிப்பித்த சமயம் மதுரா விஜயத்தை அவரிடம் ஒப்படைத்தேன். இன்று அழகிய தமிழில் அரிய ஆய்வு முன்னுரையோடு கங்காதேவியின் மதுராவிஜயம் உங்கள் திருக்கரங்களை அணி செய்கிறது. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ ஸ்வாமியின் பல் திற வெளிப்பாடுகள் இப்பதிப்பில் பளிச்சிடுகிறது. ஸ்ரீஸ்வாமி பல்லாண்டுகள் கோயில் மாநகரில் வாழ்ந்து அரங்கனின் செல்வத்தை அடியார் பெருமக்களுக்கு வாரி வழங்க நம்பெருமாள் திருவடிகளில் வேண்டி நிற்கிறேன்.

***



# அணிந்துரை: 2.

முனைவர்.திருமதி.பிரேமா நந்தகுமார்,
152/91, தெற்கு சித்திரை வீதி, திருவரங்கம்.
தொலைபேசி: 0431-2432959.

25-7-2010
திருவரங்கம்

ஸனாதன தர்மம் என்று உலகெங்கும் புகழ்வீசும் பாரதத்தின் மிகப் பழமையான வேதநெறியான இந்து சமயம், 8ஆம் நூற்றாண்டிலிருந்து இஸ்லாமியப் படையெடுப்புகளினால் கடுமையான தாக்குதல்களுக்கு உள்ளானது. 11,12ஆம் நூற்றாண்டுகளில் இந்துக் கோயில்களை சூரையாடுவதும் அழிப்பதும் தங்களது கடமை என்பதுபோல் இஸ்லாமியப் படைகள் நடந்து கொண்டதை சரித்திரம் அறியும். அக்கிரஹாரங்களும், கோயில்களும் இடிக்கப்பட்டன. பல்லாயிரக் கணக்கில் இந்துக்கள் கொல்லப்பட்டனர். தங்களது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஆயிரமாயிரம் இந்துக்கள் இஸ்லாமிய மதத்தை ஏற்க வேண்டியதாயிற்று.

காகடீய ராஜதானி ஒரு சுடுகாடாக மாறியது. இன்றும் அதைப் பார்க்கும்போது நெஞ்சம் பதை பதைக்கின்றது. இந்த அற்புதச் சின்னங்களையும் சிற்பங்களையும் அழித்திட எப்படி மனம் வந்தது? இப்படியும் த்வேஷமே உயிர்மூச்சானதொரு மதமா? ஆம். ஆப்கானிஸ் தானில் சமீபத்தில்கூட இஸ்லாமியத் தாலிபான்கள் புத்தர் சிலைகளை இடித்திருக்கிறார்கள்.

வேற்று நாட்டைச் சேர்ந்த இந்த வேற்றுமதப் படைகள் அந்தக் காலத்தில் தென்னிந்தியாவில் செய்த அசுரத்தனமான செய்கைகளுக்கு ஓரளவு முற்றுப்புள்ளி வைத்தவர்கள் விஜய நகரப் பேரரசினை ஸ்தாபித்த ஹரிஹரர், முதலாம் புக்கர் ஆகிய இருவருமாவர். இவர்கள் சங்கமர் என்பவரின் மக்கள். இவர்கள்

தவிர, சங்கமருக்கு கம்பணன், மாரப்பன், முத்தப்பன் என்று மூன்று மகன்களும் இருந்தனர். ஐவருமே இந்து மதத்தைக் காப்பதில் ஒருங்கிணைந்து பணியாற்றினர். ஸனாதன தர்மமே உயிர் மூச்சாகக் கொண்ட இந்து மதத்தைக் காப்பாற்றிய இவர்களைப் பஞ்ச நாயகர்கள் என்றே நாம் வணங்கலாம்.

ஹரிஹரருக்கு மக்கட்பேறு இல்லை. அவருக்குபின் புக்கர் அரியணையில் அமர்ந்தார். விஜயநகர சாம்ராஜ்யத்தின் செல்வமும் பெருமையும் பாமினி சுல்தான்களுக்குப் பொறுக்க வில்லை. அதனால் தொடர்ந்து போர். புக்கரின் மகன் குமார கம்பணர் 1371ஆம் ஆண்டு மதுரை சுல்தானைத் தோற் கடித்துப் பெரிய வெற்றியை சாதித்து, இந்து மதத்தைக் காப் பாற்றினார். இதன் காரணமாக புக்கர் ''வேதாந்தமார்க்க ப்ரதிஷ்டாபகர்'' என்று அழைக்கப்பட்டார். மதுரையில் விஜய நகரப் பேரரசு சாதித்த இந்த முக்கியமான வெற்றியை குமார கம்பணரின் மனைவி கங்காதேவி கோர்வையாக எழுதி வைத்தார். அந்த நூலே ''**மதுராவிஜயம்**''.

வடமொழியில் அமைந்துள்ள இந்த சரித்திரம் இன்னும் பரவலாக அறியப்படாததற்குப் பல காரணங்கள். முக்கியமாக மேலைநாட்டினர் எழுதி வைத்த இந்திய சரித்திரத்தையே நாம் கொண்டாடி வருவது; வடமொழியிலிருந்து மாநில மொழி களில் பெயர்க்கப்படாதது; பெண் எழுதி வைத்ததுதானே என்ற ஒரு அலட்சியம் போன்றவைகளைக் கூறலாம். ஆனால் 21ஆம் நூற்றாண்டில் நம்மவர்களுக்கு நமது சரித்திரத்தை உள்ளது உள்ளபடி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டு விட்டது. அதுவும் தென்னிந்திய சரித்திரம் ஆரியர் படை யெடுப்பு எனும் ஒரு பெரிய பொய்யால் ஒடுக்கப்பட்டு, உண்மையாக நடந்த இஸ்லாமிய படையெடுப்பு மறைக்கப் பட்டுள்ளது. 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதமாதா



துயில் நீங்கினாள்; விடுதலை பெற்றோம். 21ஆம் நூற் றாண்டின் தொடக்கத்தில் தென்னிந்தியத்தாய் கண் விழிக்கி றாள். **மதுராவிஜயமும்** தமிழில் மலர்கிறது. இம்மொழி பெயர்ப்பினைச் செய்து உதவிய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ண மாசார்யருக்கு தமிழ் நாட்டின் சரித்திரமே கடமைப்பட்டுள்ளது என்பதில் சந்தேகமில்லை.

இத்தமிழாக்கத்திற்கு தோரணவாயிலாக ஸ்ரீகிருஷ்ண மாசார்யரின் முன்னுரை அமைந்துள்ளது. உலூக்கானின் படை யெடுப்பிலிருந்து அழகியமணவாளனை பிள்ளைலோகா சார்யர் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு செல்லும்போது அவர் ஜ்யோதிஷ்குடியில் பரமபதித்தார். அவரது சீடர்கள் கோழிக் கோடுவரை சென்று, பின்னர் திருமலைக்காடுகளை அடைந் தனர். பல ஆண்டுகள் சென்றபின் விஜயநகர அரசர்கள் வெற்றியைத் தொடர்ந்து மீண்டும் திருவரங்கத்தில் அழகிய மணவாளனை பிரதிஷ்டை செய்தனர். இச்செய்திகளை **மதுரா விஜயம்** கூறுகிறது என்றபின் கங்காதேவியின் பெருமையை எடுத்துக் கூறுகிறார். போர்க்களத்திற்குச் சென்று நேரே நடப்பு களைக் கவனித்த தைரியசாலி. பெண்கள் ஆடை அணிகளில் தான் கவனம் செலுத்துபவர்கள் என்னும் பேச்சை பொய்யாக்கி, இந்தியப்பெண் என்றுமே அறிவுத்திறனை பெருக்கிக் கொள் பவள் என்பதை இந்நூல் தெரிவிக்கிறது அல்லவா?

வரலாறு இருக்கட்டும். மதுராவிஜயம் ஒரு நல்ல காவியமாக இருப்பதற்குக்காரணம் இங்கு காணப்படும் இனிய காதலும்கூட. இது தர்ம காமம். அறவழியே காணும் இன்பம். இதை கங்காதேவி தன் கணவனைப் பற்றி எழுதும் இடங்களில் காண்கிறோம். அன்றைய கால கட்டத்தில் ஒரு ஆண் பல பெண்களைத் திருமணம் செய்து கொள்வது வழக்கமே. அதனால் தன் கணவன்மேல் கங்காதேவிக்குக் கசப்பு இல்லை.

அவள் எழுதுகிறாள்: ''இளவரசனும் அவனுடைய அழகான மனைவிமார்களும் மகிழ்ச்சி மிகுந்ததொரு இல்லற வாழ்வினை மேற்கொண்டு வந்தனர். இவர்களுக்கு இடையே இருந்த காதலைக் கண்டு தேவர்களும் பொறமை கொண்டனர்''.

இன்பவியலைச் சேர்ந்த நீர் விளையாட்டு போன்றவை இந்தக் காப்பியத்தில் விவரிக்கப்படுகிறது. இவை யாவும் உண்மையே. இவற்றைக் காவிய ரசனைக்காக பட்டியலிட்டி ருக்கிறார். அதேபோல இந்துக்களுக்கு முகம்மதியர்களால் நடந்த கொடூரங்களும் உண்மை. அவற்றையும் எழுதி யிருக்கிறார். ஒவ்வொரு செய்யுளும் ஆழ்ந்த சிந்தையைத் தூண்டும். புக்கர் தன் மகன் வீரகம்பண்ணனிடம் கூறுவார்: ''மதுரை சுல்தான்கள் இராவணனுக்கு ஒப்பாவார். நீர் இராம ராகத் திகழ்ந்து மக்களைத் துன்பத்திலிருந்து விடுவிக்க வேண்டும். உலக நன்மைக்காக இந்தச் செயலை நீர் மேற் கொள்ளவேண்டும்''.

இஸ்லாமிய இராவணர்கள் கையில் சிக்கிய நம் கோயில்கள் பட்டபாடு கொஞ்சமோ? ''திருவரங்கத்து அந்தணர்கள் குடியிருந்த வீதிகளில். . . தற்போது முகம்மதி யர்கள், தாங்கள் உண்பதற்காக மாமிசத்தைத் தீயிலிட்டு வாட்டுவதால் எழும் துர்நாற்றமும், மது மயக்கத்தினால் ஒருவருக்கொருவர் கூச்சலிட்டுக் கொண்டு திரியும் முகம்மதி யர்களின் கூட்டமுமே காணப்பட்டது. . . '' போன்ற வரிகள் அன்றைய நிலைமையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இப்படி எத்தனை எத்தனையோ? கங்காதேவி குமார கம்பண்ணரின் வெற்றிக்குப் பிறகு இக்காவியத்தை எழுதி யுள்ளாள். பாரத தேசத்தின் மக்கள் முகம்மதியர்களால் பட்ட துயரங்களை நினைக்கும்போது அவளுக்கு அந்த நிகழ்ச்சி மிகுந்த மனத்துயரை அளித்திருக்கவேண்டும். அதனால்தான் அதிகம் எழுதவில்லை போலும். இத்துயரங்களை வீரகம் பண்ணன் முன்தோன்றிய தேவதை கூறுவதாகக் காண் கிறோம். இப்படிப்பட்ட அகக்காட்சிகளால் இந்திய வீரர்கள் புதிய ஊக்கம் பெற்றனர் என்பது வரலாறு. 20ஆம் நூற் றாண்டின் தொடக்கத்தில் ஸ்ரீஅரவிந்தருக்கும் இப்படியொரு அகக்காட்சி ஏற்பட்டது. அவரை பாரதத்தாய் துயில் எழுப்பி வெள்ளையர் ஆட்சியில் தான்படும் துன்பங்களில் இருந்து தன்னை விடுவிக்கும்படி கேட்டதாக 'பவானிபாரதி' எனும் எழுச்சிமிகு கவியைில் குறிப்பிட்டிருக்கிறார்.



அக்காட்சியின் பின்னர் அவர் தனது உடல் பொருள் ஆவி முழுவதையும் அன்னை பாரதத்திற்கு அர்ப்பணித்து இந்திய விடுதலைப் போரில் மாபெருஞ்சாதனைகள் பல வற்றைப் புரிந்துள்ளார். அன்றும் இன்றும் இப்படி தேசபக்தர்கள் இருப்பதால் நம் நாடும், நம் நாட்டின் விலை மதிப்பற்ற ஸனாதன தர்மமும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அதனால் ''மதுராவிஜயம்'', ''பவானிபாரதி'' போன்ற பதிவுகளை நாம் ஆர்வத்துடன் படித்துத் தெளிவு பெறவேண்டும். இதுவே எளிய தமிழில் மதுராவிஜயத்தை நம் கையில் வைத்துள்ள ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ ஸ்ரீகிருஷ்ணமாசார்யர் அவர்களுக்கு நாம் காட்டும் நன்றியாகும்.

உடையவரின் 1000ஆம் ஆண்டு ஜயந்தியைக் கொண்டாடும் வகையில், வைணவத்தின் பெருமை தழைக்க முயற்சிகள் செய்யவேண்டிய தருணத்தில் இந்நூலை வெளியிடும் ஆசிரியருக்கு என் நன்றிகலந்த வணக்கம்.

***

# அணிந்துரை: 3.

**திரு. வேணுகோபாலன்,(புஷ்பா தங்கதுரை)**
**848, 91ஆவது தெரு, கே.கே.நகர், சென்னை-78.**
**தொலைபேசி-044- 23662331, அலைபேசி: 92831 11632**
**sri.venugopal@gmail.com** 5-8-2010.
**சென்னை**

திரு. அ.கிருஷ்ணமாசார்யரின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது எப்படி? அவர் வெளியிட்டுள்ள புத்தகங்கள் மூலம் தான் அவரைப்பற்றி தெரிந்து கொண்டேன். பின்னர் திருவரங்கம் சென்றபோது அவரை நேரில் சந்தித்தேன். என்ன ஆச்சரியம். என்னைப் பார்த்ததும் 'புஷ்பாதங்கதுரை நீங்கள்தானே' என்று கேட்டார். வெகு சுவாரஸ்யமாகப் பேசினார். அவர் சொந்த வரலாற்றையும் சிறிது அறிந்து கொண்டேன். இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனிலிருந்து பணி ஓய்வு பெற்றவர். ஸ்ரீவைஷ்ண வத்திற்குத் தொண்டாற்றவேண்டும் என்னும் உறுதியுடன் விச்வரூபம் எடுத்துவிட்டார். நான் எழுதிய 'திருவரங்கன்உலா'தான் என்னை ஏற்கெனவே அவரிடம் அறிமுகப்படுத்தியிருந்தது. முதல் சந்திப்பில் தொடங்கிய எங்கள் நட்பு பின்வந்த ஆண்டுகளில் நீடித்துக் கொண்டே வந்தது.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயப் புத்தகங்களைப் பதிப்பிப்பதோடு அவர் பணி முடிவுறவில்லை என்பதையும் அறிந்து கொண்டேன்; வைணவத்தில் தொலைதூரக்கல்வி நடத்துகிறார் என்பது என்னைப் பெரிதும் கவர்ந்தது. ''கோயிலொழுகு'' புத்தகம் எனக்குக் கிடைத்த விதத்தை நான் திருவரங்கன் உலாவில் குறிப்பிட்டிருக்கிறேன். பின்னர் இந்தப் புத்தகத்தை வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வந்தன. ஆனால் திரு. கிருஷ்ணமாசார்யர் என்ன செய்தார்? அசுர வேகத்தில் இறங்கி கோயிலொழுகின் அத்தனை விஷயங்களையும் திரட்டி அதிசயம்! அற்புதம்! என்று சொல்லும் அளவுக்கு வெளியீடு செய்துள்ளார். கோயிலொழுகைப் பல பாகங்களாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் தகுந்த தலைப்புகள் கொடுத்து அழகிய தமிழில் எளிய நடையில் எழுதியிருக்கிறார் இவர். இப்படிக் கொண்டு வருவதன் கஷ்டங்களை முழுவதுமாக உணர்ந்தவன் நான்.



அத்துடன் அவர் விடவில்லை. கல்வெட்டுகளில் காணப்படும் திருவரங்கன் கோயில் தொடர்பான அத்தனை செய்திகளையும் தேர்ந்தெடுத்து எழுதியுள்ளார். ஆர்க்கியலாஜிகல் வெளியீடுகளைத் தேர்ந்தெடுத்து விளக்கமளித்துள்ளார். பழங்காலம் பற்றிய உதிரியாகக் கிடைத்த சில விளக்கங்களைக் கண்டு, விவரித்துள்ளார். இந்த விஷயத்தில் இனி சொல்வதற்கோ, செய்வதற்கோ வேறு ஒன்றும் இல்லை என்று சொல்லும் அளவுக்கு இதுகாறும் 16 அழகிய புத்தகங்களை எழுதி வெளியிட்டுள்ளார். இதில் காணப்படும் விஷயங்களைக் கொண்டு ஒளி ஒலி நிகழ்ச்சி யாகக் கோயிலுக்கு வரும் யாத்திரிகர்களுக்குக் காட்டி பார்ப்பவரை பழமையில் உலாவ விடலாம்! தேவஸ்தானமும் அரசாங்கமும் இந்தச் செயலில் இறங்க வேண்டும்.

இன்னொரு விஷயம்: கங்காதேவி எழுதிய **மதுரா விஜயம்** என்பதை விரிவாக எழுதி ராணியையும் அவரது கண வரையும் தம் மானசீகக் கண்களில் வசீகரமாக வரும்படி எழுதி யுள்ளார். இதற்கு உதவிய டாக்டர் திருவேங்கடாசாரி அவர்களையும் நன்றியுடன் நினைக்கிறார். காவிரி நதி பாய்ந்தோடுமாப் போலே, யானை முகப்புப் பட்டயம் அணிந்து கம்பீரமாக புறப்பட்டு வருமாப்போலே இந்த வடமொழிக் காவியத்தை மொழி பெயர்த்தும், அவ்வளவு அழகாகவும், கம்பீர நடையிலும் படிப்பவர்க்குச் சட்டெனப் புரியும்படியும் எழுதியிருக்கிறார். இப்படி ஒரு அருமையும் பெருமையும் வாய்ந்தவர் இவர். இவரது சீரிய செயல்களை ஸ்ரீவைஷ்ணவ உலகம் நன்றாக ஏற்றுக் கொண்டு விட்டது. இவரது அழகு மிளிரும் இந்தப் புத்தகங்களை ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ண வனும் நிச்சயம் படித்து உணர்ந்து கொள்வான் என்று நம்புகிறேன். இந்த அடியவனுக்கு இவர் எழுதிய இந்தப் புத்தகங்களைப் பற்றி எழுதக் கொடுத்து வைத்தது பெரும் பாக்கியமே! இதனால் திருவரங்கன் மகிமையை மீண்டும் ஒரு பெரிய சுற்று அனுபவிக்கும்படி வாய்ப்பு ஏற்பட்டது. எல்லாம் திருவரங்கன் செயல்!

***

# முன்னுரை:

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ.அ.கிருஷ்ணமாசார்யர்,
214, கீழை உத்தர வீதி, ஸ்ரீரங்கம். திருச்சி-6.
தொலைபேசி: 0431-2434398.

6-8-2010.
திருவரங்கம்.

14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தென்னிந்தியப் பகுதியை அரசாண்டு வந்த மன்னர்கள் முகம்மதியர்களுடைய படையெடுப்பை எதிர்கொள்ள இயலாது தோல்வியைத் தழுவினர். தென் இந்தியப் பகுதி முழுவதும் (இராமேச்வரம் வரை) முகம்மதியர்களுடைய ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டி ருந்தது. செவுன மன்னனான ராமச்சந்திரதேவ் என்பானுடைய மேலாண்மைக்கு உட்பட்டிருந்த சந்திரகிரி கோட்டை கி.பி. 1295ஆம் ஆண்டு நிகழ்ந்த அலாவுதீன் கில்ஜியின் படையெ டுப்பின் போது வீழ்ந்தது. கி.பி. 1314ஆம் ஆண்டு ராமச் சந்திரதேவ்-இன் மரணத்திற்குப் பின் விரிந்து பரந்து அமைந் திருந்த டில்லி சாம்ராஜ்யத்துடன் அந்தப் பகுதி இணைக்கப் பட்டது.

கி.பி. 1311-14ஆம்ஆண்டுகளில் மாலிக்காஃபூர் பெரும் படையுடன் தெற்கு நோக்கிப் படையெடுத்து துவார சமுத்ரம், வாரங்கல், தென்மதுரை ஆகிய பகுதிகளில் புகுந்து ஆங்காங் கிருந்த திருக்கோயில்களை இடித்துப் பெரும் செல்வத்தை கொள்ளையடித்துச் சென்றான். இவ்வாறு நிகழ்ந்த படையெடுப் பால் நிலை குலைந்து நின்ற மன்னர்கள் அந்தந்தப் பகுதிகளில் அரசாண்டு வந்தபோதிலும் அவர்களுக்கு மற்றோர் பேரிடி காத்திருந்தது. வடக்கே கில்ஜி வம்சத்தினருக்குப் பிறகு, டில்லியை துக்ளக் வம்சத்தவர்கள் ஆண்டு வந்தனர். மீண்டும் 1323ஆம் ஆண்டு தொடங்கிய துக்ளக்கின் படையெடுப்பின் போது தெற்குப் பகுதியில் ஆண்டு வந்த மன்னர்கள் வெற்றி கொள்ளப்பட்டதோடு மட்டுமல்லாமல் அவர்கள் ஆண்ட



பகுதிகள் டில்லி சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக மாற்றம் பெற்றன. காகடீயர்களுடைய வாரங்கல் கோட்டை, ஆந்திர கடலோரப் பகுதிகள், மதுரை, மாபார் என்று அழைக்கப்பட்டு வந்த கேரளக்கடலோரப் பகுதி ஆகிய அனைத்தும் இந்தப் படை யெடுப்பின்போது வீழ்ச்சியுற்றது.

கம்பிலா என்பான் கம்பிலி நாட்டை ஆண்டு வந்தான். இவன் முதலாம் யாதவ ராமச்சந்திராவின் படைத்தலைவனாய் இருந்து வந்தவன். ஹொய்சாளர்களுக்கும், கம்பிலி ராஜ்யத் திற்குமிடையே ஓயாது போர் நிகழ்ந்து கொண்டேயிருந்தது. கி.பி. 1313ஆம் ஆண்டு மாலிக்காஃபூர் படையெடுப்பின் போது ராமச்சந்திர தேவ் பிணைக்கைதியாக டில்லிக்குக் கொண்டு செல்லப்பட்டான். இதனால் சினங்கொண்ட கம்பிலா முகம்மதி யர்களுக்கு எதிராக வெகுண்டு எழுந்தான். அவர்களுக்கு எதிராகப் போர் தொடுக்கவும் செய்தான். அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்காஃபூரால் கம்பிலா நாட்டை வெற்றி கொள்ள இயலவில்லை.

கம்பிலாவை ஆண்டு வந்த கம்பிலராயன் காகடீய மன்னனான பிரதாபருத்ரதேவனின் வீழ்ச்சிக்குப்பிறகு அவனிடம் பணிபுரிந்து வந்த ஹரிஹரர், புக்கர் ஆகிய இருவரு க்கும் அடைக்கலமளித்தான். முகம்மது பின்துக்ளக்கின் உறவின னான பஃஹுதீன் என்பான் மன்னனுக்கு எதிராக கிளர்ச்சி செய்தான். அவனை குதாஸ்ப்சாகர் என்னும் ஊரில் வெற்றி கொண்டான் முகம்மதுபின் துக்ளக். அந்தப் போரில் தோற்ற பஃஹுதீன் கம்பிலராயனிடம் அடைக்கலம் புகுந்தான். இதனால் டில்லி பாதுஷாவின் பெரும் சினத்திற்கு ஆளானான் கம்பிலராயன். பலமுறை கம்பிலாமீது டில்லி பாதுஷா படை யெடுத்து வந்தபோதும், அவனை வெற்றி கொள்ள இயல வில்லை. ஆனால் கி.பி. 1327ஆம் ஆண்டு "ஹோசா கோட்டை" முற்றுகையின் போது கம்பிலராயா இறந்தான். அதன் விளைவாக கம்பிலராயாவின் மகன்கள், மந்திரிகளான ஹரிஹரர், புக்கர்

ஆகியோர் டில்லிக்குப் பிணைக்கைதிகளாக அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கே அவர்களை கட்டாய மதமாற்றம் செய்து முகம்மதியர்களாக ஆக்கினான் துக்ளக்.

கம்பிலாவின் வீழ்ச்சிக்குப் பிறகு அங்கேயிருந்த பஃஹுருதீன் அந்த இடத்தைவிட்டு நீங்கி ஹொய்சாள மன்ன னான மூன்றாம் வீரவல்லாளனிடம் சரண் புகுந்தான். ஆனால் டில்லி பாதுஷாவின் படைபலத்திற்கு அஞ்சி, தன்னிடம் அடைக்கலம் புகுந்த பஃஹுருதீனை முகம்மதுபின் துக்ளக்கிடம் ஒப்படைத்துவிட்டான் மூன்றாம் வீரவல்லாளன். இதனால் பெருமகிழ்ச்சி கொண்ட முகம்மதுபின்துக்ளக் வீரவல்லாள னுடைய துவார சமுத்திரத்தின்மீது படையெடுத்திடாது டில்லியை மீண்டும் சென்றடைந்தான். வடக்கே பெஷா வரிலிருந்து தெற்கே ராமேச்வரம்வரையும், மேற்கே துவாரகா விலிருந்து கிழக்கே பூரிஜகன்னாத்வரையும் இந்த நாட்டை ஆண்டு வந்தான் முகம்மது பின்துக்ளக்.

தான் வெற்றி கொண்ட மிகுந்த பரப்பளவு கொண்ட சாம் ராஜ்யத்தை ஒரு நிலைப்படுத்தி தன் கட்டுப்பாட்டின்கீழ் வைத்துக் கொள்ள முகம்மதுபின்துக்ளக்கினால் இயலவில்லை. கி.பி. 1329ஆம் ஆண்டு பஞ்சாபில் மூண்ட கலவரத்தை ஒடுக்க வேண்டி முகம்மதுபின் துக்ளக் அங்கு சென்றிருந்தபோது தெற்கே தெலுங்கானா பகுதியில் முசுநூரி பிரலோயநாயக்-இன் தலைமையில் டில்லி பாதுஷாவிற்கு எதிரான எதிர்ப்புத் தோன்றியது. பிரலோயநாயக்கின் எதிர்ப்புக்குரல் வலுப்பெற்றது. ஆந்திர கடற்கரைப் பகுதி மக்களும் வெகுண்டனர். மூன்றாம் வல்லாளதேவனின் ஒத்துழைப்புடன் கம்பிலியை ஆண்டு வந்த டில்லி பாதுஷாவின் பிரதிநிதியோடு போர் தொடுத்தான் சோமதேவன் என்பான். கம்பிலாவை ஆண்டு வந்த சுல்தானின் ஆட்சிப் பகுதிகளுக்குட்பட்ட அனகொண்டா, ராயச்செரு, முடுகாலு ஆகிய பகுதிகள் சோமதேவன் என்பானுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளாக மாற்றம் பெற்றன.



நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே கம்பிலாவை ஆண்டுவந்த பாதுஷாவின் பிரதிநிதி அவனுக்கு தான் கம்பிலா பகுதியை நிர்வஹிப்பதற்கு இயலாத நிலைமையில் இருப்பதாக செய்தியனுப்பினான். இவ்வாறு எழுந்த நிலைமையை சரிசெய் வதற்காக தன்னால் மதமாற்றம் செய்யப்பட்ட கம்பிலாவில் பணி புரிந்து வந்த ஹரிஹரர்,புக்கர் ஆகிய இருவரையும் கம்பிலா விற்கு மீண்டும் அனுப்பி வைத்தான் முகம்மதுபின்துக்ளக்.

ஹரிஹரரும், புக்கரும் கம்பிலாவிற்கு வருகை தந்த போது வீரவல்லாளனும், சோமதேவனும் தக்க பதிலடி கொடுத்தனர். ஹரிஹரரும், புக்கரும் தாங்கள் எதிர்கொண்ட தோல்வியின் காரணமாக காடுகளிலே மறைந்து வாழ்ந்து வந்தனர். அங்கே பம்பாபதி திருக்கோயிலில் இருந்து வந்த ச்ருங்கேரி மடாதிபதியான வித்யாரண்யரால் அவர்கள் இந்துக் களாக மீண்டும் மதமாற்றம் செய்யப்பட்டனர். முகம்மதியர்களை எதிர்த்து போராடுவதற்கும், அறவழி நின்று நாட்டு மக்களை காப்பாற்றுவதற்கும் உறுதி பூண்டனர் ஹரிஹரரும், புக்கரும். வீரவல்லாளன் மற்றும் சோமதேவனோடு நட்புறவு கொண்டனர். துங்கபத்ரை நதிக்கரையில் அனகொண்டாவை தலைநகராகக் கொண்டு விஜயநகர சாம்ராஜ்யத்தை வித்யாரண்யருடைய ஆசியுடன் நிறுவினர் ஹரிஹரரும், புக்கரும். க்ஷத்ரிய குலத்தைச் சார்ந்த சங்கமனின் குமாரர்கள் ஹரிஹரரும், புக்கரும் ஆவர். (முதலாம் புக்கரின் மகனான வீரகம்பண்ணரே மதுராவிஜயத்தின் கதாநாயகன் ஆவான்.)

தெற்கே டில்லி பாதுஷாவின் பிரதிநிதியாக மதுரையை ஆண்டு வந்த ஜலாலுதீன் டில்லி பாதுஷாவிற்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினான். தான் டில்லி பாதுஷாவிற்கு உட்பட்ட மன்னன் அல்ல என்று அறிவித்ததோடு மட்டுமல்லாமல் 'மதுரை சுல்தான்கள்' என்ற வம்சாவளியைத் தோற்றுவித்தான். ஹரி ஹரரும், புக்கரும் இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்தி முகம்மதி யருடைய ஆட்சியைத் தெற்குப்பகுதியிலிருந்து நீக்கிடுவ

தற்கான முயற்சிகளை மேற்கொண்டனர். காஞ்சிபுரம் மற்றும் தொண்டைமண்டலம் பகுதிகளை சம்புவராயர்கள் ஆண்டு வந்தனர். ஸ்ரீசைலம் பகுதியை கொண்ட வீடு ரெட்டி வம்சத்தவர்கள் ஆண்டு வந்தனர்.

வித்யாரண்யருடைய ஆசியுடன் கி.பி.1336ஆம் ஆண்டு நிறுவப்பட்டது விஜயநகர ராஜ்யம். ஹரிஹரரும், புக்கரும் தங்களது படைபலத்தை பெருக்கிடுவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். முதற்கட்டமாக புக்கர், ஹொய்சாள சாம்ராஜ்யத்தின்மீது படையெடுத்தார். கி.பி. 1340ஆம் ஆண்டு ஒரு சிறு பகுதியைத்தான் அவரால் விஜயநகர ராஜ்யத்துடன் இணைத்துக் கொள்ள முடிந்தது. ஆனால் மூன்றாம் வீரவல்லாளன் தான் இழந்த பகுதியை மீட்டுக் கொண்டான். கி.பி. 1342ஆம் ஆண்டு மதுரை சுல்தானோடு நடந்த போரில் மதுரை சுல்தானான ஜியாஜுதீனால் கண்ணனூரில் (தற்போதைய சமயபுரத்தில்) மூன்றாம் வீர வல்லாளன் கொல்லப்பட்டான்.

இதுவே தக்கதருணம் என்ற எண்ணம் கொண்ட புக்கர் Gooty, பெனுகொண்டா, கொசாப்பட்டினம், துவாரசமுத்ரம் மற்றும் முலுபாகல் பகுதிகளை விஜயநகர ராஜ்யத்துடன் இணைத்துக் கொண்டார். மூன்றாம் வீரவல்லாளனுக்குப் பிறகு, அரியணை ஏறிய நான்காம் வீரவல்லாளன் துவாரசமுத்ரத்தைத் துறந்து, காடுகளில் தஞ்சம் புகுந்தான். புக்கர் தனது மகனான குமார கம்பராயரை (கம்பணரை) கோலார்ப்பகுதிக்கு அரசப் பிரதிநிதியாக நியமித்தார். அவரும் முலுபாகலைத் தலை நகராகக் கொண்டு விஜயநகரமன்னனின் பிரதிநிதியாக ஆண்டு வந்தார். முதலாம் ஹரிஹரர் அவருடைய சகோதரனான மாரப்பராயனுடன் இணைந்து தார்வார் மற்றும் கோகர்ணத்துக்கு இடைப்பட்ட பகுதிகளை வெற்றி கொண்டார். கி.பி. 1345ஆம் ஆண்டு புக்கர் துளுவ நாட்டுடன் போரிட்டு வென்றார். இத்தகைய வெற்றிகளின் விளைவாக விஜயநகர ராஜ்யம் பரந்து விரிந்து சாம்ராஜ்யமாக உருப்பெற்றது. கிழக்கே பாகநாடு தொடங்கி



கொங்கணம் துளுபகுதிகள் விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஆளுமைக்குக்கீழ் கொண்டு வரப்பட்டன.

விஜயநகர சாம்ராஜ்யத்தை விரிவுபடுத்துவதில் வீர கம்பண்ணன் பங்கு குறிப்பிடத்தக்கதும், போற்றத்ததுமாகும். வீர கம்பண்ணர் நிகரற்ற படைவீரராகவும் விளங்கி வந்தார். தன் தந்தையுடன் இணைந்து பல போர்களில் பங்கு கொண்டார். கி.பி. 1342ஆம்ஆண்டு கோலார் பகுதியில் ராஜப் பிரதிநிதியாய் செயல் பட்டபோது தனது நிர்வாகத் திறமையை வெளிப்படுத்தினார். கி.பி. 1352-53ஆம் ஆண்டுகளில் தொண்டை மண்டல சம்புவ ராயர்கள்மீது படையெடுத்து சம்புவராயர்களை வெற்றி கொண்ட பின்பு, மீண்டும் அவர்களுக்கு தொண்டை மண்டலத்தை ஆளும் உரிமையை அளித்தார். தன்னுடைய தந்தையின் ஆணைக்கு இணங்க, கி.பி. 1360ஆம் ஆண்டு மீண்டும் தொண்டை மண்டலத்தின்மீது படையெடுத்து மூன்றாம் சம்புவராயரைப் போரிலே வென்று காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்துவந்தார். கி.பி. 1371ஆம் ஆண்டு மதுரையை நோக்கிப் படையெடுத்து, அப்போது நிகழ்ந்த மிக கோரமான போரில் மதுரை சுல்தானான குர்பத் ஹஸன்காங்க் என்பானை வீழ்த்தி, தெற்கே ஆட்சி புரிந்து வந்த முகம்மதிய மன்னர் களுடைய ஆதிக்கத்திற்கு ஓர் முடிவு கட்டினார்.

**மதுராவிஜயம்** என்னும் இந்தக் காவ்யத்தில் வீர கம்பண்ணருடைய பிறப்பு, வளர்ச்சி, திருமணம்,புக்கர் பிறப்பித்த ஆணை, போர் புரிவதற்கான ஆயத்தங்கள், சம்புவ ராயரோடு நிகழ்ந்த போர் பற்றிய வர்ணனை, மழைக்காலத்தில் தன் காதலிமார்களோடு கூடியிருந்த அனுபவங்கள், தர்ம தேவதையின் தோற்றம், திருத்தலங்களின் அவலநிலை, மதுரை சுல்தானோடு நடந்த போர் வர்ணனை, போரிலே சுல்தான் மாண்டது போன்ற நிகழ்ச்சிகள் காப்பியப்பாங்கில் வீரகம்பண்ணருடைய மனைவியான கங்காதேவியால் வர்ணனை செய்யப் பட்டுள்ளது.

மதுரை சுல்தான்களை வீழ்த்தியபிறகு முலுபாகலுவிற்கு திரும்பிவந்த வீரகம்பண்ணர் கி.பி. 1374ஆம் ஆண்டு இறந்தார். புக்கருடைய மரணத்திற்கு முன்பாகவே வீரகம்பண்ணர் இறந்து பட்டதால், புக்கருக்குப் பிறகு இரண்டாம் ஹரிஹரர் அரியணை ஏறினார். இவர் புக்கர்-கௌராம்பிகா தம்பதியருக்குப் பிறந்த வராவார். முகம்மதியருடைய ஆட்சியினால் நிலை குலைந் திருந்த தமிழ் மக்களை நிமிர்ந்து வாழச் செய்தவர்கள் விஜயநகர மன்னர்களாவர். அதற்கு வித்திட்டவர் வீரகம்பண்ணர். இடிந்து பாழ்பட்ட கோயில்களைப் புனர்நிர்மாணம் செய்தவர் வீரகம்ப ண்ணர். செஞ்சியிலிருந்து அழகியமணவாளனை மீண்டும் திருவரங்கத்திற்கு கொண்டு வந்து சேர்த்தவர்கள் வீரகம்பண் ணரும், செஞ்சி மன்னனான கோபணார்யனும் ஆவர். **மதுரா விஜயம்** என்னும் இந்தக் காவ்யம் காளிதாஸரின் ரகுவம்ச காவ்யத்திற்கு நிகரானது. இயற்கை வர்ணனைகளிலும், பதப் பிரயோகங்களிலும் ரகுவம்சத்திற்கு நிகரான பெருமை பெற்றது. எளிய ஸம்ஸ்க்ருதச் சொற்களைக் கொண்ட இந்தக் காவ்யம் ஒரு வரலாற்று ஆவணமாகும்.

கி.பி. 1976ஆம் ஆண்டு தொடங்கி, தினமணிக்கதிரில் ஸ்ரீவேணுகோபாலனால் எழுதப்பட்டு வெளிவந்த **'திருவரங்கன் உலா'** மற்றும் அதன் தொடர்ச்சியாக வெளிவந்த **'மதுரா விஜயம்'** ஆகிய இரு நாவல்களையும் படித்து மகிழ்ந்த பல்லாயிரக் கணக்கான வாசகர்களில் அடியேனும் ஒருவன். மதுராவிஜயம் என்னும் காவ்யத்தைப் பற்றியும் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த டாக்டர். திருவேங்கடாசார்யரைப் பற்றியும் நாவ லாசிரியர் திரு. ஸ்ரீவேணுகோபாலன் குறிப்பிட்டுள்ளார். கோயி லொழுகு 2ஆம் பகுதி வெளிவந்த பிறகு மதுரைப் பேராசிரியர். ஸ்ரீ.உ.வே. அரங்கராஜன் ஸ்வாமி தம்மிடமிருந்த திருவேங்கடா சார்யருடைய மதுராவிஜயம் ஆங்கிலமொழி பெயர்ப்பு நூலை அடியேனிடம் தந்து இதன் தமிழாக்கத்தைப் பாஞ்சஜன்யம் இதழில் வெளியிடலாமே என்று அன்புக் கட்டளையிட்டார்.



அவருடைய விருப்பத்திற்கிணங்க, பாஞ்சஜன்யம் 2005, டிசம்பர் இதழ் (79) தொடங்கி 2010, ஜூலை இதழ்வரை (134) மதுராவிஜயத்தின் மொழிபெயர்ப்பு வெளி வந்தது.

தஞ்சை நேஷனல் பவர் பிரஸ் உரிமையாளர் திரு. ரகுராமன் என்னை ஒருநாள் சந்தித்து தஞ்சை சரஸ்வதிமஹால் நூல் நிலையத்தில் இடம் பெற்றிருக்கும் மதுராவிஜயம் பற்றிய திறனாய்வு நூல் ஒன்றின் பிரதியைத் தந்தார். அவருடைய தந்தையார் அமரர். நேஷனல் A.ராமசாமி ராஜாவின் சுயசரிதை 'முயற்சி திருவினையாக்கும்' என்ற தலைப்பில் வெளி வந்துள்ளது. அதன்பிரதி ஒன்றினையும் என்னிடம் தந்தார். "முயற்சி திருவினையாக்கும்" என்ற நூலில் வீரகம்பண்ண ருடைய படையெடுப்பு பற்றியும், அவருடன் வந்த க்ஷத்திரியப் படைவீரர்களைப் பற்றியும் சில குறிப்புகள் காணப்பட்டன. அவை படையெடுப்பிற்குப் பிறகு நிகழ்ந்த சில வரலாற்று நிகழ்வுக ளாகும். "வீரகம்பண்ணர் தம்முடன் பல படைப்பிரிவுகளை அழைத்து வந்தார். தற்காலத்தில் கூர்க்கா படைப்பிரிவு, சீக்கியப் படைப்பிரிவு, தமிழகப்படைப்பிரிவு என்று இருப்பதைப் போல அவை அமைந்திருந்தன. அப்பிரிவுகளில் அஞ்சாநெஞ்சம் படைத்த ஆற்றல்சால் மாவீரர்கள் நிறைந்த படையாகப் புகழ் பெற்று விளங்கியப் படை க்ஷத்திரிய ராஜுக்கள் படைப்பிரிவு ஆகும்.

ஆந்திர மாநிலம் குண்டூர், போச்சம்பள்ளி என்னும் பகுதியில் வாழ்ந்து வந்த ராஜுக்கள் என்ற க்ஷத்திரிய அரச மரபைச் சார்ந்தவர்கள்தாம் அந்த படைப்பிரிவினர். கம்பண்ண உடையார் மதுரையை தன்வயப்படுத்திக் கொண்ட பின்னர் தன்னுடைய நம்பிக்கைக்குரிய படைப்பிரிவான ராஜுக்கள் படையை ஓர் இடத்தில் தங்க வைத்தார். அது பாளையம் (படைவீடு) என்று அழைக்கப்பட்டது. அவ்வாறு முகம்மதியப்படைகளை முறி யடித்து முதன்மையான பெருமை படைத்த அந்த ராஜுக்கள் தங்கியிருந்த பாளையம்தான் தற்காலத்தில் தமிழகத்து நகரங் களுள் புகழுடன் விளங்குகின்ற நகரமாகிய ராஜபாளையம் ஆகும்.

இந்த ராஜுக்கள் க்ஷத்திரிய வம்சத்தைச் சேர்ந்தவர்களாதலால் அந்தக் காலகட்டத்திலேயே அந்தணர்களுக்குச் சமமாக மதிக்கப் பட்டு வந்தனர். பூணூல் அணியும் உரிமையும், பல்லக்கு, வாள், குதிரை முதலியவற்றை வைத்துக் கொள்ளும் உரிமையையும், பொது இடங்களிலும், கோயில்கள் போன்ற ஸ்தலங்களிலும், அரசு நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கும் உரிமையையும் பெற்றிருந்தனர். காலப்போக்கில் அந்த மரபினர் ஏனைய மக்களோடு நெருங்கிப் பழகிக் கலந்து அனைவரையும் ஆதரித்தும் உதவிசெய்தும் ஒன்றி வாழத் தொடங்கினர். ஆனால் தங்களுக்குரிய தனித் தன்மையையும், தன்மானத்தையும், உரிமைகளையும், பழக்க வழக்கங்களையும் விட்டுவிடாமல் போற்றிக் காத்து வந்தனர். அதேபோல் இன்றும் ஆந்திரம், கர்நாடகம், மஹாராஷ்டிரா, குஜராத் போன்ற மாநிலங்களில் எல்லோராலும் மதிக்கத்தக்க சமுதாயமாக பெருமளவில் வாழ்ந்து வருகின்றார்கள்.

இத்தகைய ராஜுக்கள் மரபினைச் சேர்ந்த பல பிரிவினர் தங்களின் ராஜவம்சத்தார் வாழ்ந்து வந்த ராஜபாளையத்தைவிட்டு புறப்பட்டுத் தமிழகத்தில் உள்ள பல ஊர்களுக்கும் சென்று விவசாயம், வியாபாரம் போன்ற பல தொழில்களைச் செய்து வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் ஒரு பிரிவினர் தஞ்சை மாவட்டத்தில் பல ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள்'' என்ற இந்தக் குறிப்புகள் தமிழகத்தில் வீரகம்பண்ணருடைய படையெடுப்பிற்குப் பிறகு நடந்தவற்றைத் தெரிவிக்கின்றன.

பிராம்மணர்களுடைய பெரும்பாலான கோத்ரங்களான ஆத்ரேய கோத்ரம், பாரத்வாஜ கோத்ரம், காச்யப கோத்ரம், கச்யப கோத்ரம், கௌண்டின்ய கோத்ரம் ஆகியவை மன்னர் களுடைய மற்றும் குறுநில மன்னர்களுடைய கோத்திரங்களாகக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட கோத்ரத்தைச் சேர்ந்தவர்கள் பிராம்மணர்களாகவும், க்ஷத்ரியர்களாகவும் இருக்க முடியுமா? என்பதற்கானத் தெளிவினை ''முயற்சி திருவினையாக்கும்'' என்ற நூலைப் படித்தபிறகு பெற்றேன்.



ஒரு ரிஷியின் வம்சத்தவர்கள் அந்த ரிஷியின் பெயரைக் கொண்ட கோத்திரத்தில் உதித்தவர்களாகக் கொள்ளப் படுகின்றனர். அதே சமயம் அந்த ரிஷியைக் குருவாகக் கொண்டு கல்வி மற்றும் வில்வித்தையைப் பயின்றவரும், அந்த ரிஷியின் பெயரைக் கொண்ட கோத்திரத்தை முன்னொட்டாகக் கொண்டனர். அதனால்தான் உதாரணத்திற்கு பாரத்வாஜ கோத்ரத்தைக் கொண்டவர்களாக பிராம்மணர்களும் க்ஷத்ரியர்களும் உள்ளனர்.

க்ஷத்ரியர்கள் குருவினுடைய கோத்ரத்தைத் தமது கோத்ரமாகக் கொண்டனர் என்னும் செய்தி என்னுடைய கேள்விக்கு விடையாக அமைந்திருந்தது. முன்னுரையில் அமைந்துள்ள பல குறிப்புகள் தெலுங்கு மொழியில் முதலில் வெளிவந்து அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த ஆசிரியர்களுடைய குறிப்புகளாகும். இந்தக் குறிப்புகள் திரு. ரகுராமன் அளித்த புத்தகத்தில் காணப்பட்டன. அவருக்கு என்னுடைய நன்றி உரித்தாகுக. இந்த நூல் வெளிவருவதற்கு தூண்டுகோலாய் அமைந்த தோடு மட்டுமல்லாமல் திரு. ஸ்ரீவேணுகோபாலன் எனப்படும் புஷ்பாதங்கதுரையும், மதுரைப் பேராசிரியர் ஸ்ரீ.உ.வே. அரங்க ராஜன் ஸ்வாமியும், திருமதி. பிரேமா நந்தகுமார் அவர்களும் கருத்தாழமிக்க அணிந்துரையை அளித்துள்ளனர். அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூல் வெளிவருவதற்கு பல்வகையிலும் உதவி புரிந்த திரு. ராஜன், R.N.R. Printers, கணிப்பொறி உதவியாளர்கள் திரு. வேங்கடகண்ணன், திருமதி. குமுதவல்லி ரமேஷ், திருமதி. திலகம் அழகேசன், செல்வி. சித்ரா, அச்சுக்கூடப் பணியாளர் திரு. கார்த்திகேயன், அடியேனுடைய மணாட்டுப் பெண் திருமதி. வித்யா, பிழைதிருத்தம் மற்றும் அலுவலகப் பொறுப்பை மேற்கொண்ட அடியேனுடைய ஜ்யேஷ்ட குமாரன். திரு. வாசுதேவன், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ S.T.ரங்கராஜன் ஸ்வாமி ஆகியோருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

***

# கங்கா தேவியின் மதுராவிஜயம்

தமிழாக்கம்: ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்

## நூல் அறிமுகம்:

கி.பி.1323ஆம் ஆண்டு நடைபெற்ற உலூக்கானுடைய படையெடுப்பின்போது அழகியமணவாளனும் உபய நாய்ச்சிமார்களும் பிள்ளைலோசார்யர் மற்றும் அவர்தம் அந்தரங்க சிஷ்யர்களால் எழுந்தருளப் பண்ணப்பட்டு சென்றபோது மதுரைக்கு அருகாமையில் ஆனைமலைத் தொடரின் அடிவாரத்தில் அமைந்துள்ள ஜ்யோதிஷ்குடி (கொடிக்குளம்) என்ற ஊரில் பிள்ளைலோகாசார்யர் பரமபதிக்க நேர்ந்தது. அதன்பிறகு அவருடைய சிஷ்யர்கள் அழகிய மணவாளனை அழகர்கோயில், நத்தம், திண்டுக்கல், பழனி, பொள்ளாச்சி, பாலாக்காடு வழியாக, கோழிக்கோட்டிற்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்றனர். கோழிக் கோட்டில் ஓராண்டு காலம் தங்கியிருந்து அங்கிருந்து திருக்கணாம்பி என்னும் ஊரைச் சென்றடைந்தனர்.

பிறகு திருநாராயணபுரத்தில் பலஆண்டுகள் எழுந்தருளியிருந்து கி.பி. 1343இல் வீர வல்லாளன் மரணத்திற்குப் பிறகு, திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருப்பதைக் காட்டிலும் ஹரிஹரர் புக்கர் ஆட்சியின் கீழ் உள்ள திருமலை, யாராலும் எளிதில் ஊடுருவ முடியாத பகுதி யாக இருந்ததால், அழகியமணவாளன் திருமலைக் காடுகளில் திருமணத்தூண் நம்பி, திருத்தாழ் வரைதாஸர் போல்வாரால் பாதுகாக்கப்பட்டு வந்தார். திருமலைக் காடுகளிலே பல ஆண்டுகள் குகைகளிலும், பாதாள நிலவறைகளிலும்

அழகியமணவாளனை இவர்கள் பாதுகாத்து வந்தனர். பிள்ளைலோகாசார்யருடன் சென்ற சிஷ்யர்களில் அழகிய மணவாளன் திருப்பதி காடுகளில் எழுந்தருளி யிருந்தபோது எஞ்சியவர் மூவரே ஆவர். அவர்கள் திருத்தாழ்வரைதாஸர் மற்றும் அவருடைய நெருங்கிய உறவினர் இருவர் மட்டுமே.

அதன் பிறகு திருமலையில் தற்போதைய ரங்க மண்டபத்தில் அழகியமணவாளன் எழுந்தருளியிருத்தார். கோபணார்யன் என்ற செஞ்சிநாட்டுச் சிற்றரசனுடைய உதவி யினால் அழகியமணவாளன் செஞ்சியில் சில காலம் எழுந் தருளியிருந்தார். அதன் பிறகு புக்கரின் புதல்வரான வீர கம்பண்ண உடையார் மற்றைய குறுநில மன்னர்கள், படைத் தலைவர்கள் ஆகியோருடைய உதவியுடன் ஒரு சிறு படை யுடன் தெற்கு நோக்கிப் படையெடுத்தார். அவ்வாறு தெற்கு நோக்கிப் படையெடுப்பதற்கு முன்னோடியாக தொண்டை மண்டலத்தை ஆண்டு வந்த சம்புவராயர்களை வெற்றி கொண்ட பின்னர் தெற்கு நோக்கிப் படைபலம் பொருந்திய **மதுரை சுல்தான்களை வெற்றி கொண்ட வரலாறே மதுரா விஜயம் என்னும் இந்த நூலில் காவிய வடிவில் கூறப் பட்டுள்ளது.**

அழகியமணவாளனும் உபயநாய்ச்சிமார்களும் திருவரங்கத்திற்கு மீண்டும் எழுந்தருளியநாள் பரீதாபி ஆண்டு வைகாசி 17. அவ்வாறு எழுந்தருளுவதற்கு முன்பு கண்ணனூர் என்று அழைக்கப்பட்டு வந்த சமயபுரத்தில் நடந்த போர் அதன் பிறகு மதுரையில் சுல்தான்களை வெற்றி கொண்ட வரலாற்றின் விரிவே மதுரா விஜயம் என்னும் நூல்.

பெரும்பாலும் மேல்நாட்டு யாத்ரிகர்களுடைய குறிப்பு களையே கொண்டு எழுதப்பட்ட தென்னிந்திய வரலாற்றில், நடந்த நிகழ்ச்சிகளை தெளிவுபடுத்திய பெருமை **'கோயி லொழுகு'**, **'மதுராவிஜயம்'** ஆகிய நூல்களையே சாரும்.



இந்தியத் தொல்லியத்துறையின் சார்பில் வெளியிடப் பட்ட கல்வெட்டுகளும், ஆராய்ச்சியாளர்களான Dr.S.கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார், திரு.நீலகண்ட சாஸ்த்ரியார், திரு.சேது ராமன், திரு. ஹரிராவ், திரு.K.V.ராமன் ஆகியோருடைய ஆய்வுக் கட்டுரைகளும், தென்னிந்தியத் திருக்கோயிலின் வரலாற்றை ஒழுங்குபடுத்துவதற்கு பேருதவி செய்தன. திருவரங்கம் கோயில் வரலாற்றினை தெளிவுபட அறிந்து கொள்வதற்கு மதுராவிஜயமும் துணைசெய்துள்ளது என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். மதுராவிஜயம் என்ற காவியம் ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்துள்ளது. அதன் தமிழ் மொழிபெயர்ப்பே இந்தநூல்.

சிருங்கேரி சங்கராசார்யாராகிய ஸ்ரீவித்யாரண்யரின் அருளாசியால் கி.பி.1336இல் ஹரிஹரரும், அவனது தம்பி புக்கரும் விஜயநகர சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். துங்க பத்திரை நதிக்கரையில் விஜயநகரம் தலைநகரமாக ஸ்தாபிக்கப் பட்டது. அவ்வூரிலுள்ள விருபாக்ஷ தேவர் (பரமேஸ்வரர்) விஜயநகர மன்னர்களின் குலதெய்வமாவார். புக்கனுடைய அரசியாரின் பெயர் தேவாயி. இவர்களுக்கு பெரிய கம்பண்ணன், சிறிய கம்பண்ணன், சங்கமன் என்ற மூவர் பிறந்தனர்.

''கம்பண்ணனின் மனைவி கங்காதேவி வடமொழி யில் வல்லவள். தன் கணவன் கம்பண்ணன் தென்னாட்டு திக் விஜயத்தில் வெற்றியடைந்ததைப் போற்றும் வகையில் **மதுரா விஜயம்** என்ற வடமொழிக் காவியத்தை எழுதி உள்ளாள்''. *(பாண்டியர் வரலாறு-N.சேதுராமன்)*

இவள் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்தவள். குமார கம்பண்ணன் என்ற அரசரின் பட்டத்து ராணியாக விளங்கியவள். விஜயநகர சாம்ராஜ்யத்தைத் தோற்றுவித்த ஹரிஹரர், புக்கர் என்ற சகோதரர்களில் புக்கரின் மகன் கம்பண்ணன்.

கம்பண்ணன் செய்த அரிய செயல்களையும், போர்களையும் ஒரு சிறு காவிய வடிவில் கங்காதேவி இயற்றி வைத்தாள். அப்படி அவள் செய்தது அந்நாளில் பெரும் பான்மைக் கவிஞர்களும், அறிஞர்களும் செய்யாத ஒரு தனித் தன்மையான செயல்!

இதற்காக நாம் கங்கா தேவிக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம். அவள் எழுதிய நூலால் அந்நாளைய செய்திகளில் பல நமக்குத் தெரியவந்துள்ளன. வரலாற்று ஆய்வாளர்களுக்கு அவை பேருதவி செய்து உள்ளன.

தென் இந்திய வரலாற்றை அறிந்து கொள்வதற்கு உதவிடும் படியான நூல்களில் முதன்மையான நூல் என்று சரித்திர ஆசிரியர்கள் கங்காதேவியின் மதுரா விஜயத்தைக் குறிப்பிடுகின்றனர். கங்காதேவி மிகவும் புலமை மிகுந்த கவி. வடமொழியில் தேர்ச்சி பெற்றவள். காளிதாஸன், பட்ட பாணர், பாரவி, ஆசாரிய தண்டி, பவபூதி ஆகிய வடமொழி மகாகவிகளின் நூல்களை ஆழ்ந்து படித்தவள். தனது புலமையின் காரணத்தால் அழகாகவும், காவிய மரபுகளுக்கு ஏற்ப கவிதை எழுதும் திறனும் பெற்றவள்.

மதுரா விஜயம் என்று அவள் எழுதிய இந்நூலுக்கு வீரகம்பய்யராய சரிதம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இந்த அரியநூல் கரையான் அரித்த ஏடுகளில் ஒன்றாக மதுரா விஜயம் திருவனந்தபுரத்தில் 1916இல் கண்டுபிடிக்கப் பட்டது. கிரந்த லிபியில் இருந்த இந்த நூல் பின்னர் பிரசுரிக்கப் பட்டது. அதன் பின்னர் 1956ஆம் ஆண்டு அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் வெளியீடாக திரு.கு.திருவேங்கடாசார்யர் இந்த நூலைப் பதிப்பித்துள்ளார். இந்த நூலுக்கு முகப்பாக விளங்கும் நீண்டதொரு முன்னுரை ஆராய்ச்சி குறிப்புகள் பலவற்றை தன்னகத்தே கொண்டுள்ளது. மதுரா விஜயம் நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பும், தேவநாகரி லிபியில் அதன் மூலமும் 1956ஆம் ஆண்டு பதிப்பிக்கப் பட்ட நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் பொதிந்துள்ள செய்திகளை இனிக் காண்போம்.



'மதுரா விஜயம்' என்று தலைப்பிடப்பட்ட இந்தக் காவியத்தை இயற்றியவள் கங்காதேவி, இதன் பாட்டுடைத் தலைவனான வீரகம்பண்ண உடையாரின் மனைவியாவாள். மதுரையின் மீது போர் தொடுத்த விஜயநகரப் படைகளின் தலைவன் வீரகம்பண்ணன். அவன் அவ்வாறு படையெடுத்துச் செல்லும் போது, அவனுடன் கூடச்சென்று படைவீடுகளிலே தங்கியிருந்து, அவ்வப்போது நடந்த போர்களைத் தன் கண்களால் கண்டுகளித்து இந்தக் காவியத்தைப் படைத்துள்ளாள் கங்காதேவி.

கங்காதேவியின் மூதாதையர்களைப் பற்றிய குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் ''தேவி'' என்ற பின்னொட்டு (Suffix) கொண்டு இவள் உயர்குடி பிறப்புக் கொண்ட உத்தம நங்கையாக இருந்திருக்கக்கூடும் என்பது பெறப்படுகிறது. அழகும், அனைத்து குண நலங்களும் கூடியவளாய் விளங்கியவள் கங்காதேவி. வீரகம்பண்ணனுடைய பல மனைவிமார்களில், அவனால் பெரிதும் விரும்பப் படுபவளாக விளங்கியவள் இவள்.

14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிகளில் தலைசிறந்த கவியாகப் போற்றப்படுபவள் கங்காதேவி. மிகச்சிறந்த இலக்கிய அறிவு படைத்தவள் இவளென்றும், வேதவேதாந்தங்களில் பயிற்சி உடையவளாக இவள் திகழ்ந்திருக்கக் கூடும் என்பதும் இவளுடைய காவியம் கொண்டு பெறப்படும் செய்திகளாகும். ஆயிரக்கணக்கான, வடமொழிப் புலமைப் படைத்த கவிஞர்களுள் இவள் காளிதாஸன், பட்டபாணன், பாரவி, தண்டி, பவபூதி, வால்மீகி, வேதவ்யாஸர் ஆகியோருக்கு தனது வணக்கத்தை செலுத்தி இந்தக் காவியத்தைத் தொடங்குவது கொண்டு இவளுடைய பரந்துபட்ட வட மொழியறிவு புலப்படுகிறது.

காவியத்தின் முதற்காண்டத்தில் மேற்குறிப்பிட்ட புலவர்களுக்குப் புகழாரம் சூட்டி மகிழ்கிறாள் கங்காதேவி. கவிதை படைப்போரெல்லாம் கவி காளிதாஸனைப் பின்பற்றி, கவிதை படைக்க வேண்டுமென்று குறிப்பிடுகி றாள். "கவி காளிதாஸனுடைய சொற்களில் உள்ளத்தைப் பறிகொடுத்து அவனுடைய கவிநயத்திற்கு அடிமையாகாத கவிஞர்கள் உலகில் இல்லை"யென்றும் அறுதியிடுகிறாள். (முதலாம் காண்டம் 7-வது ச்லோகம்). பட்டபாணனுடைய சொல் வன்மையும், கருத்து வெளிப்பாடும் தன்னை மிகவும் கவர்ந்துள்ளதாகக் கங்காதேவி அவருடைய கவித்துவத்தைக் கொண்டாடுகிறாள். (முதலாம் காண்டம் 8-வது ச்லோகம்).

கருத்தாழம் மிக்க பாரவியின் படைப்புகள், ஆசார்ய தண்டியின் கவிதை மணம் கமழும் இலக்கியங்கள் ஆகிய வற்றைக் கொண்டாடுகிறாள் கங்காதேவி. (முதலாம் காண்டம் 9-வது ச்லோகம்). மேலும் பவபூதியின், காலத்தால் அழியாத 'உத்தரராம சரித்திரம்' அறிஞர்களுக்கு விருந்தாக, அமுதினைச் சுவைத் திடுவது போல் அமைந்துள்ளதைப் போற்றிப் புகழ்ந்துள்ளாள் (முதலாம் காண்டம் 11-வது ச்லோகம்).



பழம்பெரும் கவிஞர்களான இவர்களைத் தவிர இந்தக் காப்பியத்தின் ஆசிரியையான கங்காதேவியின் காலத்தில் வாழ்ந்த பல புலவர்களை மேலும் அவள் கொண்டாடு கிறாள். (முதலாம் காண்டம் 13 முதல் 16ஆம் ச்லோகங்கள் வரை). கங்காதேவி தன்னுடைய சம காலத்தில் வாழ்ந்த புலவர்களுள் கிரியாசக்தி பண்டிதர் என்பாரைப் பற்றி புகழ்ந்து பாடியுள் ளாள். காப்பியத்தின் தொடக்கத்தில் முதல் மூன்று ச்லோகங் களாலே முறையே விநாயகர், சிவன், பார்வதி, ஸரஸ்வதி ஆகியோருக்கு வணக்கங்களைத் தெரிவித்த பிறகு தன்னு டைய குருவானவரும், ஒப்புயர்வற்ற ஞானம் கொண்டவ ராகவும் திகழ்ந்திருந்த கிரியாசக்தியின் திருவடிகளைத் தொழுது வணக்கம் செலுத்துகிறாள்.

வரலாற்று ஆசிரியரான திரு.T.A.கோபிநாதராவ், "மதுராவிஜயம்" என்ற இந்த நூலின் திருவனந்தபுரம் பதிப்பின் முகவுரையில், விஜயநகர மன்னர்கள் தொடக்கத்தில் சைவ மதத்தைத் தழுவியிருந்தனர் என்று குறிப்பிட்டுள்ளார். சிருங்கேரி வித்யாபீடத்தைச் சார்ந்த ஸ்ரீவித்யாரண்யரின் உதவியுடன், ஹரிஹர், புக்கர் ஆகிய இருவரும், விஜயநகரப் பேரரசை தோற்று வித்த போதிலும் அவர்கள் வேதாந்தக் கொள்கைகளைப் பின்பற் றிய அத்வைத மதத்தைச் சார்ந் திருக்கவில்லை. மாறாக ஸ்ரீகண்ட ஆகமப் பிரிவைச் சார்ந்த கிரியாசக்தி பண்டிதரே விஜயநகர மன்னர்களுக்கு குல குருவாய் அமைந்திருந்தார். மைசூரில் காணப்படும் இரண்டாம் ஹரிஹரர் (கி.பி.1377-1406) காலத்துக் கல்வெட்டு ஒன்று இந்தச் செய்தியை உறுதி செய்கின்றது.

கிரியாசக்தி பண்டிதர் விஜயநகர மன்னர்களுக்கு அந்த சாம்ராஜ்யத்தின் தொடக்க காலத்தில் குலகுருவாய் மட்டும் இருந்திடாமல், அவ்வப்போது ஆட்சி சம்பந்தப்பட்ட முடிவு கள் எடுக்கப்படும் போது தகுந்த ஆலோசனைகளையும்

வழங்கி வந்துள்ளார். கிரியாசக்தி பண்டிதர் வேண்டிக் கொண்டதன் பேரிலேயே ஸ்ரீவித்யாரண்யர், 'ச்ரௌத ஸூத்திரங்களுக்கு' விரிவுரை எழுத முற்பட்டார் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் தோற்றத்திற்குப் பிறகு நாற்பது ஆண்டுகள் கழித்து, அதாவது கி.பி.1376-ஆம் ஆண்டு தொடங்கி சிருங்கேரி மடாதிபதிகள் சாம்ராஜ்யத்தின் குல குருவாக திகழ்ந்து வந்தனர். ஆயினும் கி.பி.1400-ஆம் ஆண்டு வரை கிரியாசக்தி பண்டிதர் பரம்பரையைச் சார்ந்தவர்கள் சங்கம குல மன்னர்களின் மதிப்பிற்குரியவர்களாக இருந்து வந்தனர். இத்தகைய காரணங்கள் பற்றியே கங்காதேவி தன்னுடைய காவியத்தைத் தொடங்கிடும்போது கடவுள் வணக்கத்திற்குப் பிறகு சங்கமகுலத்தவர்க்கு குலகுருவான கிரியாசக்தி பண்டிதருக்கு தன்னுடைய வணக்கத்தினைச் செலுத்துகின்றாள்.

தனது சமகாலத்துப் புலவரான அகஸ்தியரை முதலாவது காண்டம், 14வது ச்லோகத்தில் கங்காதேவி கொண்டாடுகிறாள். இவர் 74 வடமொழி இலக்கியங்களைப் படைத்தவராகக் குறிப்பிடப்படுகிறார். வாரங்கல்லை தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த காகடீய மன்னர்களில் ஒருவரான ப்ராதாபருத்ரன் என்பாருடைய அரசவைப் புலவராக விளங்கியவர் அகஸ்தியர்.

முதலாம் விஜயநகர வம்சாவளியான சங்கம குலத்தைத் தோற்றுவித்த சங்கமன் மற்றும் முதலாம் புக்கர் ஆகியோரும் அகஸ்தியரை ஆதரித்து வந்ததாகவும் அறியப் படுகிறது. அவர் இயற்றிய நூல்களில் 'ப்ரதாபருத்ராயஸோ பூஷணம்' என்ற நூல் தலைசிறந்த நூலாகக் கொள்ளப்படுகிறது. இந்த அகஸ்தியருக்கு, வித்யநாதர் என்றதொரு சிறப்புப் பெயரும் அமைந்திருந்தது. அகஸ்தியர் இயற்றிய 74 நூல்களில் பாலபாரதம், க்ருஷ்ண



சரித்திரம், நலகீர்த்தி கௌமுதி, லக்ஷ்மி ஸ்தோத்ரம், சிவஸ்தவம், லலிதா சகஸ்ரநாமம், மணிபரிக்ஷா, சிவசம்ஹிதை, ஸ்கலாதிகாரம் ஆகிய நூல்கள் தற்போது காணக் கிடைக்கின்றன. இவர் கவி பாடுவதில் மட்டுமன்றி, உரைநடை இலக்கியங்களைப் படைப்பதிலும் வல்லவராக விளங்கினார்.

அகஸ்தியரின் மருமகனான கங்காதரன் நாடக இலக்கியங்கள் படைப்பதில் வல்லவராக விளங்கியதைக் குறிப்பிடுகிறாள் கங்காதேவி. அவ்வாறு இயற்றப்பட்ட நாடகங்கள் 'மஹாபாரதம்', 'சந்திரவிலாஸம்', 'ராகவாப்யுதயம்' ஆகிய மூன்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

மதுராவிஜயத்தில் இந்தக் கங்காதரனை இரண்டாவது வ்யாஸராக கங்காதேவி போற்றிப் புகழ்ந்துள்ளாள். மஹாபாரத்தை எளிமையான சொற்கள் கொண்டு அனைவரும் படித்து மகிழும்படி செய்த இலக்கியப் பணி கங்காதரனைச் சாரும். **(முதலாம் காண்டம் 15-வது ச்லோகம்).**

கங்காதரனின் அறிவுசால் மக்களாகத் திகழ்ந்தவர்கள் விஸ்வநாதனும், நரஸிம்ஹனும் ஆவர். இவர்களில் விஸ்வநாதனை மட்டும் தனது காப்பியத்தில் கங்காதேவி குறிப்பிட்டுள்ளாள். யாது காரணத்தாலோ நரஸிம்ஹனைப் பற்றிய குறிப்புகள் இந்தக் காப்பியத்தில் காணப்படவில்லை. எட்டு அங்கங்கள் கொண்டதாக '***காதம்பரியை***' நாடக வடிவில் வடிவமைத்தவர் இந்த நரஸிம்ஹன்.

அகஸ்தியருடைய சமகாலப் புலவராக திகழ்ந்தவர் விஸ்வநாதன். இவரும் ப்ரதாபருத்ரனுடைய அரசவையை அலங்கரித்தவர். கங்காதேவி, அகஸ்தியர் மற்றும் விஸ்வநாதனுடைய இலக்கியப் பாணிகளைப் பெரிதும் பின்பற்றி தன் காவியத்தைப் படைத்துள்ளாள். அகஸ்தியர் மற்றும் கிரியா

சக்தி ஆகிய புலவர்களால் புதிதாகத் தோற்றுவிக்கப் பெற்ற இலக்கிய மரபுகளைப் பெரிதும் பின்பற்றியுள்ளாள் கங்கா தேவி. மற்றைய வடமொழிப் புலவர்களுக்கு தனது வணக்கத்தைச் செலுத்திடும் கங்காதேவி விஸ்வநாதனை தனது குருவாக கொண்டாடுகிறாள் இந்தக் காவியத்தில்.

அவரை 'கவீஸ்வரன்' என்று கொண்டாடுவதோடு மட்டுமல்லாமல் அவள் தனது குருவான விஸ்வநாதன், நீண்ட ஆயுளோடு வாழ்வாங்கு வாழ்ந்து தன்னை வாழ்த்திட வேண்டுகிறாள்."விஸ்வநாதனுடைய அருட்பார்வையால் என்னைப் போன்றவர்களும், எங்கும் பரந்து நிற்கும் உறுதிப் பொருளின் உணர்வினைப் பெற முடிந்தது" என்று அவருக்கு மேலும் புகழாரம் சூட்டுகிறாள் கங்காதேவி. **(முதலாம் காண்டம் 16வது ஸ்லோகம்)**உணர்ச்சிமிக்க கவிதைகளை பொருட்செறிவோடு இயற்றவல்லவள் கங்காதேவி. வடமொழிக் கவிஞர்களின் இலக்கிய வகைகள் பலவற்றை தனது காவியத்தில் கையாண்டு உள்ளாள்.

புகழ்மிக்க கவிஞர்களின் நடையைக் கையாண்டு காவியம் படைப்பதில் எந்தத் தவறும் இல்லை என்பது அவளுடைய கருத்தாகும். கம்பண்ணனுடைய வீரம் செறிந்த போர்களை வர்ணிப்பதில் முழுநோக்குக் கொண்ட இந்தக் காவியத்தில் கவிதைநயம் என்பது இரண்டாவது இடத்தையே பெறுகின்றது. அவ்வாறான கவிதைநயத்தை மற்றைய புலவர்களுடைய வழிநின்று தருவதில் எந்தத் தவறும் இல்லை என்பது அவளுடைய எண்ணமாகும். அனைத்து இலக்கியக் கூறுகளும் தன்னகத்தே அமைந்துள்ளதாகவும், கவிதை நயங்களோடு அமைந்ததொரு காப்பியம் படைப்பது என்பது இயலாத தொன்றாகும்.



பொருள் பொதிந்த சொற்களும், அவற்றின் வழி வெளிப்படும் நுண்உணர்வும், சொற்களின் கட்டமைப்பும் ஒரு கவிதைக்கு அமைய வேண்டிய அடிப்படைக் கூறுகளாகும். முதலாம் காண்டம் 17 ஆம் ஸ்லோகம் தொடங்கி 24ஆம் ஸ்லோகம் ஈறாக மேற்கூறிய கூற்றுக்களைப் பற்றிய தனது கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளாள் கங்காதேவி.

## மதுராவிஜயம் என்ற காப்பியத்தின் வரலாற்று முக்கியத்துவம்

வரலாற்று உணர்வு இந்தியர்களிடையே மிக மிகக் குறைந்த அளவிலே இன்றும் காணப்படுகிறது. தென்னிந்திய வரலாற்றினை உள்ளபடி ஆராய்ந்து எழுதுவதில் பல இடர்ப்பாடுகளை ஆராய்சியாளர்கள் எதிர்நோக்க வேண்டியுள்ளன. பெரும்பாலும் கல்வெட்டுகள் மேலை நாட்டு யாத்திரிகர்கள் எழுதிப்போந்த குறிப்புகள், ஆங்கிலேயர்களுடைய நாட்குறிப்புகள், கிறிஸ்துவப் பாதிரிமார்களுடைய கடிதங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் தென்னிந்திய வரலாறு படைக்கப்பட்டுள்ளது. குறிப்பாக 18ஆம் நூற்றாண்டு தொடங்கி கல்வெட்டுகளின் துணைகொண்டு பெரும்பாலான ஆய்வுகள் மேற்கொள்ள இயலவில்லை. இருண்ட வானில் தோன்றும் ஒளிர்விடும் தாரகைகள் போல் ஸ்ரீரங்கம் கோயில் கணக்கர்களால் எழுதப்பட்டு வந்த **'கோயிலொழுகும்'**, கங்காதேவியின் **'மதுராவிஜயம்'** என்ற நூலும் தென்னிந்திய வரலாற்றை எழுதுவோர்க்கு பெரிதும் துணை புரிகின்றன.

உலக வரலாற்றிலேயே பாரம்பரியமிக்கதும், பழம் பெருமை கொண்டதுமான நாகரிகம் படைத்தது பாரதத் திருநாடு. ஆயினும் இதன் தொன்மையை விவரிக்கும்

வரலாற்று நூல்கள் மிக மிகக் குறைந்த அளவிலேயே படைக்கப்பட்டுள்ளன. இந்தக் கூற்றினை சற்று ஆராய முற்படுவோமானால் அதன் உண்மை நன்கு புலப்படும். தொன்மையானதும், குறிப்பிடத்தக்கதுமான வரலாற்று நூல் என்று கொண்டாடப்படும் கல்ஹணருடைய '**ராஜதரங்கிணி**' என்ற நூல் காஷ்மீர் தேசத்திய மன்னர்களைப் பற்றிய குறிப்பு களைத் தெரிவிக்கின்றது. பாணருடைய '**ஹர்ஷசரிதம்**' என்ற நூல் ஓரளவிற்கு வரலாற்றுச் செய்திகளைத் தெரிவிக்கக் கூடிய நூலாக அமைந்தபோதிலும் அவற்றில் ஓர் ஒழுங்குமுறை காணப்படவில்லை. நம் நாட்டில் தோன்றிய பழம்பெரும் நூல்களில் வரலாற்றுச் செய்திகள் பல ஆங்காங்கே தெரிவிக்கப் பட்டிருந்த போதிலும் அவற்றை முறையாகத் தொகுத்து இந்திய வரலாறு எழுதப் படவில்லை. திரு.கே.எம். முன்ஷி அவர்கள் பாரதீய இதிஹாஸ ஸமிதியினரால் வெளியிடப் பட்ட '**இந்திய வரலாற்று நூல்களின் வரிசை**' என்ற தொகுப்புகளில் இதுபற்றி ஆராய்ந்துள்ளார்.

இலக்கியங்களைக் கொண்டு மட்டும் அனைத்து வரலாற்று உண்மைகளையும் பெற இயலாது. அவற்றில் ஆங்காங்கே சிறிய அளவில் சில குறிப்புகள் மட்டுமே காணக் கிடைக்கும். கல்வெட்டுகள், மற்றைய ஆதாரபூர்வமான செய்திக் குறிப்புகள் ஆகியவற்றின் அடிப்படையில் நிலை நாட்டப்பட்ட வரலாற்றுப் பேருண்மைகளுக்கு வலிமை சேர்த்திட இலக்கியங்களில் காணக்கிடைக்கும் குறிப்புகளைக் கொள்ளலாம்.

15-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தென்னிந்திய வரலாற்றைத் தெளிவாக தெரிவித்திடும் வரலாற்று நூல் என்ற பெருமையை '**மதுராவிஜயம்**' பெற்றுள்ளது. பல்வேறு



கோணங்களிலிருந்தும் நோக்கும்போது 'மதுராவிஜயம்' என்ற காவியத்தைப் படைத்த கங்காதேவியினை தென்னிந்திய வரலாற்றை முறையாகத் தெரிவிக்க முற்பட்ட 'வரலாற்றுப் பேரறிஞராகக்' கொள்ளலாம். இந்தக் காவியத்தின் வழி விஜயநகரப் பேரரசின் விரிவாக்கத்தினையும், அந்தப் பேரரசு எவ்வாறு தென் தமிழ் நாட்டில் நிலைகொண்டது என்பதும் விவரிக்கப்பட்டுள்ளன.

இந்தக் காப்பியத்தின் ஒன்பது காண்டங்களும் எவ்வாறு கம்பண்ண உடையார், மதுரை மாநகரை முகம்மதி யர்களுடைய பிடியிலிருந்து விடுவித்துத் தனது ஆட்சிப் பரப்பின் கீழ் கொண்டுவந்தார் என்பதை எடுத்துரைக்கின்றன.

***முதலாம் காண்டத்தில்,***

1) கங்காதேவியின் சம காலத்தில் வாழ்ந்த புலவர் களைப் பற்றிய குறிப்புகள்,

2) கம்பண்ணருடைய தாய், தந்தையர் மற்றும் புக்கர், ஹரி ஹரர் பற்றிய செய்திகள், புக்கருடைய குண நலன்கள் ஆகியவை,

3) புக்கருடைய மனைவியின் பெயர் ''தேவயீ'' என்ற வரலாற்றுக் குறிப்பும், *(புக்கரின் பிரதான பட்டமஹிஷியின் பெயர் 'தேவயீ' என்பது இந்த நூல்வழி மட்டுமே பெறப்படும் செய்தியாகும். வேறு வரலாற்று நூல்கள் இந்தக் குறிப்பினைத் தெரிவிக்கவில்லை.)*

4) விஜயநகரப் பேரரசின் தலைநகரான ஹம்பியைப் பற்றிய வர்ணனை, (Paes, Nicolo Conti, Abdur Razaak *ஆகியோ ருடைய குறிப்புகளோடு ஒப்பிடுவதற்கு குறிப்புகள் உதவு கின்றன.)* விஜயநகரத்தின் ஒரு பகுதி பம்பை - ஆகியவை

குறிப்பிடப்பட்டுள்ளன.

*இரண்டாம் காண்டத்தில்,*

புக்கர் - தேவயீ தம்பதியினருக்குப் பிறந்த (முதலாம்) குமார கம்பண்ணருடைய பிறப்பும், அவனுக்குப் பின் பிறந்தவர்களான கம்பண்ணன் (இரண்டாம்) மற்றும் சங்கமன் ஆகியோ ருடைய பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளன.

*மூன்றாம் காண்டத்தில்,*

1.) கம்பண்ணருடைய இளமைக்கால நிகழ்ச்சிகள்,

2)அவன் உரியபருவம் அடைந்தபின்பு கங்கா தேவியைத் திருமணம் புரிந்த நிகழ்ச்சி,

3). வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கீழ்க்கண்ட நிக ழ்ச்சிகள்:

அ) தமிழ்நாட்டில் அப்போது நிலவியிருந்த அரசியல் சூழ்நிலையைப் புக்கர் தனது படைத்தலைவர்களுடனும் மந்திரிமார்களுடனும் கலந்தாலோசிப்பது, ஆ) புக்கர், தனது மகனான கம்பண உடையாரை காஞ்சி மீது படையெடுத்து அதை ஆண்டு கொண்டிருந்த சம்புவராயரை வெற்றி கொண்டு அந்தப் பகுதியை ஆட்சி செய்து வருமாறு பணித்தல், இ) புக்கர் கம்பண்ண உடையாரைத் தொண்டை மண்டலத்தின் மீது படை யெடுத்து அதை வெற்றிகொண்ட பிறகு மதுரையை நோக்கிப் புறப்படுமாறு ஆணையிடுதல் - ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன.

*நான்காம் காண்டத்தில்,*

1) சம்புவராயர் ஆண்டுவந்த தொண்டை மண்டலத்தின் மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தல்,



2) விஜயநகரப் படைகளின் எண்ணிக்கை, அதன் பிரிவுகள்,

3) விஜயநகர மன்னர்களின் நண்பர்களான சோழன், கேரளநாட்டு அரசன் மற்றும் பாண்டியன் ஆகியோரைப் பற்றிய குறிப்புகள்,

4) ஹம்பியிலிருந்து விஜயநகரப் படை காஞ்சியை நோக்கிப் புறப்படுதல்,

5) இவ்வாறு புறப்பட்ட படை 'முலுபாகுலு' என்னும் ஊரில் முகாமிட்டிருக்கும் நிகழ்ச்சி, அதன்பிறகு 'விரிஞ்சிபுரம்' என்னும் நகர்நோக்கிப் புறப்படுதல்,

6) படைவீட்டினை முற்றுகையிடுதலும், சம்புவராயர் களோடு போரிடுதலும்,

7) போரிலே சம்புவராயர் அடைந்த தோல்வியும், கம்பண்ண உடையாரால் சம்புவராயர் கொல்லப்படுதல்-ஆகியவையும் கூறப்பட்டுள்ளன.

*ஐந்தாம் காண்டத்தில்,*

கம்பண்ண உடையார் நீதி வழுவாமல், தொண்டை மண்டலத்தின் வளப்பத்தைப் பெருக்கி நல்லாட்சி புரிந்தமை கூறப்பட்டுள்ளது.

*ஆறு மற்றும் ஏழாம் காண்டங்களில்,*

வரலாற்று செய்திகள் யாதும் குறிப்பிடப் படவில்லை.

*எட்டாம் காண்டத்தில்,*

தென் தமிழகத்தில் முகம்மதியர்களுடைய படை

யெடுப்பிற்குப் பிறகு நிலவியிருந்த சமய, சமுதாயச் சூழ்நிலை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

***ஒன்பதாம் காண்டத்தில்,***

முகம்மதியர்களோடு மேற்கொள்ளப்பட்ட போர், மதுரை சுல்தான்களுடைய அழிவு, அதன்பிறகு மதுரையை வெற்றிகொண்ட நிகழ்ச்சிகள் - ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன.

இனிவரும் பகுதிகளில் மேற்குறிப்பிடப்பட்டுள்ள செய்திகளின் அடிப்படையில் வரலாற்று நிக்ழ்ச்சிகள் எவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளன என்பதைக் காண்போம்.



மதுராவிஜயத்தின் 6 மற்றும் 7ஆம் காண்டங்களில் எத்தகைய வரலாற்று குறிப்புகளும் காணக் கிடைக்கவில்லை என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அந்தக் காண்டங்களில் மன்னர்கள் தமது மனைவிமார்களுடன் காதல் வயப்பட்டுப் புரிந்திடும் விளையாட்டுகள், குறும்புகள் விரிந்த அளவில் பேசப்படுகின்றன.

காஞ்சிபுரத்தை வெற்றிகொண்ட பிறகு தெற்கு நோக்கிப் படையெடுப்பதற்கு மன்னருக்கு கால அவகாசம் தேவைப் பட்டதால் அந்தக் காலக்கட்டத்தில் மன்னனுடைய அந்தப்புர வாழ்க்கை இந்தப் பகுதியில் இடம்பெற்றிருக்கக்கூடும். மேலும் சம்புவராயரை வென்றபிறகு கம்பண்ண உடையார் காஞ்சியில் நிலையானதொரு



ஆட்சியை ஏற்படுத்த முயன்றதையும், குடிமக்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்ய முற்பட்ட தையும் இந்த நிகழ்ச்சிகளின் மூலம் கங்காதேவி தெரிவிக்க முற்பட்டு உள்ளாள்.

கம்பண்ண உடையாருக்கு எதிராகக் காஞ்சி மண்டலத்தில் எந்த உள்நாட்டுப் போரும் நிகழவில்லை. மாறாக மதுரையை நோக்கி படையெடுத்த கம்பண்ண உடையாரின் படையில் தொண்டை மண்டலத்திலிருந்து போர் வீரர்கள் பலர் இடம் பெற்றிருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது.

இந்தக் காவ்யத்தில் இயற்கைக்கு அப்பாற்பட்டதும், தெய்வீகத்தன்மை வாய்ந்ததுமான சில நிகழ்ச்சிகள் விவரிக்கப் பட்டிருப்பினும், காவ்யத்தில் விவரிக்கப்பட்டுள்ள சரித்திர நிகழ்வுகளுக்கு அவை எந்த 'நம்பிக்கையற்ற தன்மையையும்' ஏற்படுத்தவில்லை. இந்த நூலில் விவரிக்கப்பட்டுள்ள பெண் தெய்வத்தின் தோற்றம் கவி தான் விவரிக்க விரும்பிய செய்திகளுக்கு வலுவூட்டுவதற்காக மேற்கொண்டதொரு 'காவ்ய யுக்தியாகும்'.

ஹர்ஷருடைய 'நாகநந்தம்' என்ற நூலில் 'ஜிமுத வாஹனன்' என்பானுக்கு ஒரு பெண் தெய்வம் போர்வாள் ஒன்றைத் தந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோன்றே மதுராவிஜயத்திலும் வீரகம்பண்ண உடையாருக்கு முன் தோன்றிய பெண் தெய்வத்தை தர்மத்தின் உருவாகக் கொள்ளலாம். மதுரை சுல்தான்கள் நாட்டை ஆண்டுவந்த காலத்தில் தர்மத்திற்கு பெருத்ததொரு வாட்டம் ஏற்பட்டது. ஆங்காங்கே மக்கள் துன்புறுத்தப்பட்டனர். கோயில்களில் இருந்த வழிபாட்டிற்குரிய விக்ரஹங்கள் உடைக்கப்பட்டன. கோயில்கள் பாழ்படுத்தப் பட்டன. குடிமக்கள் அனைவரும்

அச்சத்துடன் வாழ்க்கையை நடத்திவந்தனர். இத்தகைய தொரு சூழ்நிலையில் தர்மமே ஒரு பெண் தெய்வத்தின் உருக்கொண்டு நாட்டில் அமைதியை நிலை நாட்டிடவும், நன்னெறிகள் தழைத்திடுவதற்குமான செயல்களை மேற் கொண்டிடுமாறு வீரகம்பண்ண உடையாருக்கு கூறியதாக இந்தக் காவ்யத்தில் உருவகப்படுத்தப்பட்டுள்ளது.

வரலாற்று ஆசிரியர்கள் இத்தகைய நிகழ்ச்சிகள் வரலாற்றுப் பேருண்மைகளை வெளிப்படுத்துவதாகக் கொள்வ தில்லை. 13 மற்றும் 14ஆம் நூற்றாண்டுகளில் நடந்த நிகழ்ச்சி களின் அடிப்படையில் இயற்றப்பட்ட இந்தக் காவ்யம் இவ் வாறான சிறு மரபு மீரல்களை தன்னகத்தே கொண்டிருந்த போதும், அக்காலத்திய வரலாற்றினை வெளிப் படுத்தும் மிகச் சிறந்த நூலாக மதுராவிஜயம் இன்று அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

14ஆம் நூற்றாண்டு தென்னிந்திய வரலாற்றை முதன் முதலில் எழுதிய பெருமை கங்காதேவியையே சாரும். பிற்கால வரலாற்றுஆசிரியர்களுக்கு இவளே கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்து வருகிறாள்.

### *வீரசம்புவராயன்: (சம்புவரையர்கள்)*

மதுரையின் மீது படையெடுப்பதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகளின் விரிவோடு இந்த நூல் தொடங்குகிறது. மது ரைக்கு செல்லும் மார்க்கத்தில் இடைப்பட்டதான பகுதியாகத் தொண்டைமண்டலம் இன்றும் விளங்குகிறது. வீரகம்பண உடையார் மதுரைமீது படையெடுத்துச் சென்றபோது, தொண்டை மண்டலத்தைச் சம்புவராயர்கள் ஆண்டுவந்தனர். கி.பி.1336ஆம் ஆண்டு ஹரிஹரர், புக்கர் ஆகிய இரு சகோ



தரர்களால் தோற்றுவிக்கப்பட்ட விஜயநகர அரச மன்னர் களுடன் சம்புவராயர்கள் நேசக்கரம் நீட்டினார்களா என்பதைப் பற்றி அறிய இயலவில்லை.

விஜயநகரப் பேரரசின் எல்லையை விரிவுபடுத்தும் நோக்கத்தோடுமட்டுமல்லாமல் அனைத்துப் பகுதிகளையும் ஒருகுடைக்கீழ் கொண்டுவருவதையும் முக்கியக் குறிக் கோளாக சங்கம குல மன்னர்களான ஹரிஹரரும், புக்கரும் கொண்டிருந்தனர். ஏனெனில் பீஜாப்பூர் சுல்தான்கள் மற்றும் டில்லியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்த முகம்மதிய மன்னர்களும் தெற்குநோக்கி மீண்டும் படை யெடுத்து பல பகுதிகளை அவர்கள் தங்கள் எல்லைக்கு உட் பட்டவையாக மாற்றக்கூடுமானால், அந்த முயற்சி விஜய நகரப் பேரரசிற்கு ஒரு அச்சுறுத்தலை விளைவிக்கும் என்ற எண்ணமும் இந்தப் படையெடுப்பிற்கு அடித்தளமாக அமைந் திருந்தது. ஆகவே, விஜயநகரப் பேரரசின் வளர்ச்சிக்கு மதுரை சுல்தான்களை வெற்றிகொள்ளவேண்டியது அப்போதைய கட்டாயமாக அமைந்திருந்தது.

மதுரை சுல்தான்கள் ஆண்ட பகுதிக்கும் விஜயநகரப் பேரரசின் ஆட்சிகுட்பட்ட பகுதிக்கும் இடையில் அமைந் திருந்தது சம்புவராயருடைய ஆட்சிப்பரப்பிற்குட்பட்ட தொண்டைமண்டலம். ஆகவே அவர்கள் விஜயநகரப் பேரர சருக்குக் கட்டுப்பட்ட குறுநில மன்னர்கள் என்ற நிலையை ஏற்றுக்கொள்ள வேண்டும் அல்லது அவர்கள்அழிக்கப்பட வேண்டும் என்ற ஒரு முடிவிற்கு கட்டாயத்திற்கு விஜயநகர மன்னர்கள் வந்தார்கள்.

மதுரையின்மீது படையெடுத்துச் செல்லும்போது எந்தவிதமான இடையூறுகளும் இருக்கக்கூடாது என்பதே

புக்கருடைய எண்ணமாகும். ஆகவே மதுரையின்மீது படையெடுத்துச் செல்வதற்கு முன்பு தொண்டை மண்டலத்தை விஜயநகரப் பேரரசின் பகுதியாக இணைத்துக்கொள்ள வேண்டும். அதற்கு சம்பவராயர்களை வெற்றிகொள்ள வேண்டும் என்ற கட்டளை வீரகம்பண்ண உடையாருக்கு இடப்பட்டது. இந்தப் படையெடுப்பினை விவரிப்பதற்கு முன்பு சம்புவராயர்கள் எவ்வாறு தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றி ஆட்சிசெய்து வந்தனர் என்பதை முதலில் காண்போம்.

**சம்புவராயர்கள் பற்றிய விரிவான குறிப்புகள்.**

பிற்கால சோழமன்னர்களுடைய ஆட்சிகாலத்தில் பழுவேட்டரையர், சம்புவரையர், மும்முடிப்பல்லவரையர், வணங்காமுடிமுனையதரையர், அஞ்சாதசிங்க முத்தரையர், இரட்டைக்குடை ராஜாளியார், தேவசேனாபதி பூவரையர் போன்ற குறுநில மன்னர்கள் அங்காங்கே சோழப் பேரரசிற்குட்பட்ட பகுதிகளில் ஆட்சிசெலுத்திவந்தனர்.

சிற்றரசர்களுக்கும்,சிற்றரசர்களுக்குச் சமமான சிறப்பு வாய்ந்தவர்களுக்கும் **அரையர்** என்ற பட்டப்பெயர் சேர்த்து அக்காலத்தில் வழங்கப்பட்டது. அவரவர்களுடைய ஊரை மட்டும் கூறி அரையர் என்று சேர்த்துச் சொல்லும் மரபும் இருந்தது.

அந்த நாளில் சிற்றரர்கள்என்றால் பிறப்பினால் மட்டும் 'அரசர்' பட்டம் பெற்று அரண்மனைச் சுகபோகங்களில் திளைத்து வாழ்ந்திருப்பவர்கள் அல்லர். போர்க்களத்தில் முன்ன ணியில் நின்றுபோரிடத் தயார் நிலையில் இருந்த வீராதிவீரர்கள்தாம் தங்கள் அரசுரிமையை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முடியும். எனவே ஒவ்வொருவரும் பற்பல போர்க்களங்களில் போரிட்டுப் புகழுடன் காயங்களையும் அடைந்தவர்களாகவே இருப்பார்கள்.



இந்தச் சம்புவராயர்கள் 13ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் பிற்கால சோழ மன்னர்களின் வீழ்ச்சிக்குப்பிறகு தாங்கள் ஆண்டுவந்த பகுதிக்கு மன்னர்களாக விளங்கி வந்தனர். தற்போதைய வடஆர்க்காடு, செங்கல்பட்டு ஆகிய மாவட்டப் பகுதிகள் இவர்களுடைய ஆட்சிப்பரப்பின் கீழ் 14ஆம் நூற்றாண்டில் இருந்துவந்தன.

சோழர்காலக் கல்வெட்டுகளில் சம்புவரையர்களைப் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. சோழ மன்னர்கள் அவ்வப்போது மேற்கொண்ட படையெடுப்புகளில் சம்புவரையர்கள் முக்கியப் பங்கு வகித்து வந்தனர். எதிரிலிசோழ சம்புவரையர் இரண்டாம் ராஜாதிராஜசோழன் காலத்தில் (கி.பி. 1162-1166) படைத்தலைமை ஏற்று சிங்கள நாட்டு படைத்தலைவனான லங்கபுர தண்ட நாயகனை சோழ நாட்டு எல்லையிலிருந்தும் விரட்டியடித்தான்.

மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சிக் காலத்திற்குப் (கி.பி.1178-1218) பிறகு சோழர்கள் நலிவுற்றனர். சிறிது காலம் சம்புவரையர்கள் பாண்டிய மன்னர்களுக்குக் கட்டுப் பட்டவர்களாக விளங்கி வந்தனர். அதன்பிறகு காடவராயர்களைப் போல சம்புவரையர்களும் தாங்கள் சார்ந்திருந்த குறுநிலப்பகுதிக்கு மன்னர்களாகத் தம்மைப் பறைசாற்றிக் கொண்டனர். சம்புவரையர்கள் குலத்து மன்னனான குலசேகர சம்புவரையனைப் (கி.பி.1278-1304) பற்றிய குறிப்புகளை அக்காலத்திய கல்வெட்டுகளில் காணமுடிகிறது. இவனுக்குப் பிறகு வீரசம்புவரையன் என்று அழைக்கப்பட்டு வந்த ராஜ நாராயண மல்லிநாதன் ஆட்சி பீடத்தில் அமர்ந்தான். குல சேகரனுடைய மகன்களில் ஒருவன் வீரசம்புவரையன். *(இவன் வீரசம்பா என்றும் அழைக்கப்பட்டு வருகிறான்.)*

இந்திய வரலாற்றில் குறிப்பாகத் தென்னிந்தியாவில் இன்னல்கள் மிகுந்த காலக்கட்டத்தில் ஆட்சி செலுத்தி வந்தவன் இந்த வீரசம்புவரையன். வட இந்தியாவில் கில்ஜி யினுடைய ஆதிக்கம் மேலோங்கி நின்றது. தென்னிந்திய வரலாற்றிலேயே முகம்மதியர்களுடைய படையெடுப்பு இவன் காலத்தில்தான் முதன்முறையாக நிகழ்ந்தது.

கி.பி. 1311ஆம் ஆண்டு நிகழ்ந்த மாலிகாஃபூரின் படை யெடுப்பின் போது நிகழ்ந்த பல அட்டூழியங்களை அறிந்தும் தன்னால் ஏதும் செய்ய இயலாத நிலையில் ஒரு குறுநிலப் பகுதியை ஆண்டு வந்தவன் வீரசம்புவரையன். மாலிகாஃபூரின் படையெடுப்பின்போது போரைத் தடுத்து நிறுத்த இயலாது என்ற எண்ணத்தில் வாளாயிருந்தான்-என்பதையே வரலாற்று உண்மைகள் வெளிப்படுத்துகின்றன.

தன்னுடைய ஆட்சிக்காலத்தில் வீரசம்புவரையன் தான தர்மங்கள் பலவற்றைச் செய்து வந்தான். கல்வெட்டுக் குறிப்புகளும், இலக்கியச் சான்றுகளும் இதனைத் தெரி விக்கின்றன. வீரசம்புவரையன்-காஞ்சி ஏகாம்பர நாதருக்குச் செம்பொன் மணிமுடி மற்றும் தேர் ஒன்றினையும், காஞ்சி மாநகரில் பெரிய தொரு துலாபார மண்டபத்தையும் நிர்மாணித்தான் என்று இரட்டையர் உலா தெரிவிக்கின்றது.

''சம்பு குலத்தொருவன் சாத்துகைக் காம் என்றளித்த
சம்பொன் மணி மகுடஞ் சேர்வித்து ''
''..... செம்பதுமை கேள்வன் திருமல்லிநாதனுயர் சம்புபதி
நல்குந் தடந் தேர் போல்''
''.... பரிபல்லவன் சம்பு குலப் பெருமான் வைத்த
துலாபார மண்டபத்தும் '' — இரட்டையர் உலா



காஞ்சிபுரம் அருளாளப்பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்றின்படி இந்த சம்புவரையன் புதிதாகத் தேர் ஒன்றினை ஸமர்ப்பித்தான் என்று அறியப்படுகிறது. இந்த சம்புவரை யனுடைய ஆணையின்பேரில் 'ஞானாத்மா' என்ற தொரு மகான் பத்ர மண்டபம் ஒன்றினை திருவல்லம் திருக் கோயிலில் கட்டி முடித்தார்-என்றும் கல்வெட்டுக் குறிப்பு காணக் கிடைக்கிறது.

சம்புவரையர் ஆட்சியில் முதன்முதலாக வீரசம்பு வரையன் காலத்தில்தான் உலோக நாணயங்கள் வெளியிடப் பட்டன. இவை இவன் இறந்தபிறகும் ஐம்பது ஆண்டு களுக்குச் செலாவணியில் இருந்தன. கல்வெட்டுகளில் இவை 'வீரசம்பன் குளிகை' என்று குறிப்பிடப்படுகிறது. (A.R.E. 24 of 1887)

வீரசம்புவரையனுடைய அவைக்களத்தில், மதியூக மும் நிர்வாகத் திறமையும் மிகுந்த 'வனபீதன்' என்பவர் மந்திரியாகப் பணியாற்றி வந்தார். இவர் ஸம்ஸ்க்ருத மொழியில் நூல்கள் பலவற்றை இயற்றியுள்ளார். வீரசம்பு வரையனுடைய தீரத்தையும் கொடைத் தன்மையையும் இந்த நூல்கள் வழி போற்றியுள்ளார் இவர். வீரசம்புவரையனுக்கு 'நித்ரவாஸன் விஜயீ' என்றதொரு பட்டப் பெயரும் உண்டு. 'உறக்கத்தில் இருக்கும்போதே வெற்றிச் செய்தியைக் கேட்டுக் களிப்பவன்' என்பது இதற்குப் பொருளாகும்.

பினவந்தீச்வரர் கோயில் கல்வெட்டு இந்த சம்பு வரையனை 'நித்ரவாஸன் விஜயீ' என்றே குறிப்பிடுகிறது. இத்தகைய செயல்களால் சம்புவரையர்குல மன்னர்களில் வல்லமை பொருந்திய மன்னனாக வீரசம்புவரையன் விளங்கி வந்தான் என்று கொள்ளலாம்.

## வென்று மண்கொண்ட சம்புவரையன்:

வீரசம்புவரையனுக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்தவன் வென்று மண்கொண்டான் என்று அழைக்கப் பட்டு வந்த ஏகாம்பரநாத சம்புவரையன் ஆவான். இவனுடைய இயற்பெயரைவிட காரணப்பெயரே சிறப்புற்று விளங்கியது. இவனுடைய இயற்பெயரில் ஒரே ஒரு கல்வெட்டு மட்டுமே அமைந்துள்ளது. (A.R.E. 33 of 1933-34)

காகடீய மன்னனின் படைத்தளபதியான முப்பிடி நாயக்கனிடமிருந்து காஞ்சியை மீட்டதால் இந்த சம்புவரை யனுக்கு வென்று மண்கொண்டான் என்ற சிறப்புப் பெயர் நிலை கொண்டது. கேரள மன்னனான ரவிவர்மனிடமிருந்து காஞ்சி நகரைக் கைப்பற்றியவன் முப்பிடி நாயகக்கன்.

*(கி.பி. 1317ஆம் ஆண்டு காகடீய மன்னனான ப்ரதாப ருத்ரன் முப்பிடி நாயக்கன் தலைமையில், பெரியதொரு படையுடன் தெற்கே காவிரி நதிவரை சென்றடைந்தான். இந்தப் படை காஞ்சிநகருக்கு அண்மையில் பஞ்சபாண்டியர் களைத் தோற்கடித்தது. அதன்பின், தெலுங்கு நாட்டைச் சார்ந்த ஆளுநர் ஒருவரை காஞ்சி நகரத்தைப் பரிபாலித்து வரும்படி அமர்த்திச் சென்றான் ப்ரதாபருத்ரன். காகடீய மன்னர்களால் நியமிக்கப் பெற்ற தெலுங்கு ஆளுநரை வென்று மண் கொண்டான் வெற்றிக் கொண்டிருக்க வேண்டும்-என்று திரு. என். வேங்கட்ரமணய்யா தமது* The Early Muslim Expansion in South India *என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.)*

வென்று மண்கொண்டானும், அவனுடைய மகனான ராஜநாராயணனும் வீரசம்புவரையனை அண்ணா என்று அழைத்து வந்தனர். எண் A.R.E. 33 of 1933-34 கல்வெட்டு ராஜ நாராயணன் மல்லநாதனை அண்ணாச்சியார் என்று



பெயரிட்டு அழைத்து வந்ததாகக் குறிப்பிடுகிறது. வென்று மண்கொண்டான் கி.பி. 1322ஆம் ஆண்டு முடிசூடிக் கொண்டான். அவனுடைய ஆட்சியின் முதல் இரண்டு ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க எந்த நிகழ்ச்சிகளும் நிகழ வில்லை.

வென்று மண் கொண்டானுடைய மூன்றாவது ஆட்சி ஆண்டிலிருந்து 14ஆவது ஆட்சி ஆண்டுவரை (கி.பி.1335 - 36) இவனைப் பற்றிய எந்தக் குறிப்புகளும் காணக் கிடைக்க வில்லை. இதற்கான காரணங்களை நாம் எளிதில் கணித்துக் கொள்ளலாம். கி.பி.1323ஆம் ஆண்டு உலூக்கானுடைய படை யெடுப்பினால் தமிழகத்தின் பெரும் பகுதி முகம்மதியர் களுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளாய் மாற்றம்பெற்றன. அந்தப் படையெடுப்பின்போது அவர்கள் புரிந்த அட்டூழியங் கள் தமிழகத்தின் அனைத்துப் பகுதி மக்களையும், குறிப்பாகத் தொண்டைமண்டலத்து மக்களை அச்சம்கொள்ளச்செய்தன.

வென்று மண்கொண்டானுடைய 14ஆம் ஆட்சி யாண்டு கல்வெட்டு ஒன்று (A.R.E.434 of 1903) முகம்மதி யர்களுடைய படையெடுப்பினால் நிகழ்ந்த பேரழிவைப்பற்றி குறிப்பிடுகிறது. வென்று மண்கொண்டானுடைய மைந்த னான ராஜ நாராயணனுடைய ஆட்சிகாலத்திய கல்வெட்டு ஒன்று தமிழகப் பகுதியில் முகம்மதியர்களுடைய படை யெடுப்பின்போது நிகழ்ந்த கொடுமைகளையும், மக்கள் எதிர் கொண்ட இன்னல்களையும் எடுத்துரைக்கின்றது. (A.R.E.203 of 1912).

இதன் விளைவாக நாட்டைத் தொன்றுதொட்டு ஆண்டு வந்த தமிழக மன்னர்களின் எந்தக் கல்வெட்டுகளும் கி.பி.1324-1335 காலப் பகுதியில் பரவலாகக் காணக் கிடைக்கவில்லை. நாட்டில் எங்கும் அராஜகமே ஓங்கி

நின்றது. மக்கள் நிலை குலைந்த வாழ்க்கையை மேற் கொண் டிருந்தனர்; செய்வதறியாது திகைத்து நின்றனர்; அவர் களுடைய இயல்பு வாழ்க்கை பெரிதும் பாதிக்கப் பட்டிருந்தது. தொண்டைமண்டலம் முகம் மதியர்களுடைய ஆதிக்கத்தின்கீழ் எத்தனை ஆண்டுகள் இருந்தது என்பதைப் பற்றிய தெளிவான குறிப்புகள் கிடைக்கவில்லை.

எனினும் கி.பி.1335-36 காலகட்டத்தில் வென்று மண்கொண்டான் ஆட்சிபீடத்தில் மீண்டும் அமர்ந்தான் என்பது உறுதிபட அறியப் படுகிறது. திருச்சி, தஞ்சை, மதுரைப் பகுதிகளில் முகம்மதியர்களு டைய ஆட்சி வேரூன்றியதோடு மட்டுமல்லாமல் மதுரையைத் தலைநகராகக் கொண்டு மதுரை சுல்தான்கள் கொடுங்கோலாட்சி புரிந்துவந்தனர். தென் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளையும் முகம்மதியர் வெற்றி கொண்ட பிறகு, அவர்களது ஆட்சிப் பரப்பளவு மிகுந்திருந்தது. அதன் விளைவாக மதுரையைச் சுற்றியுள்ள பகுதிகளை மட்டும் தன் கட்டுப்பாட்டின்கீழ் கொண் டிருந்ததால் தொண்டை மண்டலப் பகுதியில் சம்புவராயர்கள் மீண்டும் ஆட்சிபீடத்தில் அமர்ந்திருக்கக்கூடும்.

முகம்மதியர்களுடைய படையெடுப்பினால் தொண்டை மண்டலத்திலும், மற்றைய தென் தமிழகப் பகுதிகளிலும் புதியதொரு கலாச்சார மற்றும் பண்பாட்டுச் சீரழிவு நிகழத் தொடங்கியது. இதனால் சமூகத்தில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இந்துப்பெண்கள் எதிர்கொண்ட பலாத்காரப் புணர்வினால் புதியதொரு சந்ததியினர் உருவாயினர். நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்தது. (A.R.E.276 of 1912)

மக்கள் பல்வேறு காரணங்களால் ஓர் கிராமத்தை விட்டு மற்றொரு கிராமத்திற்கு இடம் பெயர்ந்தனர். இதனால் மக்களே இல்லாத பல கிராமங்களும், அதிக அளவில் மக்கள்



தொகை கொண்ட சில கிராமங்களும் உருப்பெற்றன. தஞ்சை, திருச்சி பகுதி களிலிருந்து பெருமளவில் அகதிகளாக மக்கள் தொண்டை மண்டலத்திற்குள் இடம்பெயர்ந்து சம்புவரையர் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகளில் அடைக்கலம் புகுந்தனர். *(இலங்கையில் நடைபெற்று வந்த இடைவிடாத உள்நாட்டுப் போரால் தமிழர்கள், மன்னார்வளைகுடாவைக் கடந்து ராமேஸ்வரம் பகுதிக்கு அகதிகளாக வந்துசேர்ந்தது போல் அந்தக் காலகட்டத்தில் தொண்டை மண்டலத்தைச் சுற்றியுள்ள கிராமங் களிலிருந்து மக்கள் இடம் பெயர்ந்து காஞ்சிபுரம் பகுதியை நோக்கி சென்றனர் என்று அறியப்படுகிறது.)* **(A.R.E.35 of 1933-34)**

தனது 14ஆவது ஆட்சியாண்டில் முகம்மதியர் களுடைய படையெடுப்பால் சின்னாபின்னமாக்கப்பட்ட தொண்டைமண்டலப்பகுதியை வென்றுமண்கொண்டான் திரும்பவும் கைப்பற்றியபோது நாட்டில் அமைதியை ஏற்படுத்திட விரைந்து செயல்படவேண்டியிருந்தது. திருக் கோயில்களைச் சுற்றியிருந்த மடவளாகங்களில் மீண்டும் மக்களைக் குடியிருக்கச் செய்தான்.

அடைக்கலம் தேடி வந்தோர்க்கு இருக்க இடம், உண்ண உணவு, உடுக்க உடை, குடிக்க நீர் போன்ற அடிப்படை வசதிகளை செய்து தருவதற்காகப் பல “அஞ்சினான் புகலி டங்களை” நிறுவினான். மற்ற பகுதிகளிலிருந்து இடம் பெயர்ந்து வருவோர் தங்கி தம் வாழ்க்கையை மீண்டும் தொடங்குவதற்காக சில கிராமங்களை ஒதுக்கீடு செய்தான். ‘கீழ் மின்னல்’ என்னும் கிராமம் அஞ்சினான் புகலிடமாக அறிவிக் கப்பட்டது பற்றியும், அந்த கிராமத்திற்கு மன்னனுடைய மைந்தனான ராஜநாராய ணனுடைய பெயரில் பொன்னின் பெருமாள் என்ற பெயர் சூட்டப்பட்டதையும் ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. (A.R.E.35 of 1933-34)




மேலும், இந்த ஊரை குடியிருப்பாகக் கொண்டு நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தோர், ஒரு தறியில் பணி செய்யும் இருவர்க்கு 1/4 பணமும், அகதிகளாக அடைக்கலம் தேடி வந்தோர் 1/8 பணமும் வரியாகச் செலுத்த வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. தொண்டை மண்டலத்திற்குள் அகதி களாக வந்தவர்களிடம், பரிவுடன் நடந்துகொண்டனர் அரசியல் அதிகாரிகள். அவர்கள் பக்கல் இரக்கம் கொண்ட தோடு மட்டுமல்லாமல் பொருளாதார முன்னேற்றத்திற்கும் வழிமுறைகள் பலவற்றை வகுத்தான் வென்று மண்கொண்டான். கைவினைத் தொழில்களை மேற்கொள்வதற்கும் அவ்வாறு அவர்கள் தொழில்களைச் செய்வதற்குத் தகுந்ததொரு சூழ லையும் உருவாக்கித் தந்தான் இந்த மன்னன். அவர்கள் செலுத்தவேண்டிய வரிவிகிதத்தை மிகக் குறைந்த அளவி லேயே நிர்ணயித்தான். (A.R.E.47 of 1933) முகம்மதியர் களுடைய படையெடுப்பின்போது இடித்துத் தள்ளப்பட்ட கோயில்கள் பலவற்றை மீண்டும் புதுப்பித்தான். (A.R.E.42 of 1921)



இத்தகைய சிறப்பான பணிகளை மேற்கொண்டு மக்களைக் கலாச்சார அழிவினின்றும், பண்பாட்டுச் சிதை வினின்றும் விடுவித்தான் வென்றுமண்கொண்டான். திருச்சி, தஞ்சை, மதுரைப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் சொல்லொணாத் துயருக்கு ஆட்பட்டு வாழ்க்கையைக் கழித்து வந்த ஒரு கால கட்டத்தில், தொண்டை மண்டலத்தில் மக்கள் வாழ்க்கையில் மறுமலர்ச்சியைக் கண்டனர். இந்த மகிழ்ச்சிக்குப் பேருதவி புரிந்தவன் வென்றுமண்கொண்டான். இவனுடைய 17ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று (A.R.E.42 of 1921) காஞ்சி புரம் வீதிகளில் தெருமுனை நாடகங்கள் அரங்கேற்றம் பெற்றதைக் குறிப்பிடுகின்றன. இத்தகைய கேளிக்கை நிகழ்ச்சிகளை மக்கள் அமைதியான வாழ்வினை வாழ்ந்து வரும் காலத்தில்தான் பார்த்து இன்புற இயலும். நாடகக் குழுவினர் இத்தகைய கேளிக்கை நிகழ்ச்சி களை நடத்து வதற்கான அரசு உரிமம் பெற்றிருந்தமையை இந்தக் கல்வெட்டு மேலும் குறிப்பிடுகிறது.

## ராஜநாராயண சம்புவரையரும் இரண்டாம் வென்று மண்கொண்டான் சம்புவரையரும்.

முதலாம் வென்று மண்கொண்டானுடைய மறை விற்குப் பிறகு அவனுடைய புதல்வனான ராஜ நாராயணன் அரியணை ஏறினான். சம்புவரையர்களில் தலைசிறந்த மன்னனாகப் போற்றப்படுபவன் இவன். இவனுடைய ஆட்சி காலத்தில் சம்புவரையர்களுடைய புகழும், பெருமையும் ஓங்கி நின்றது. அவனுடைய ஆட்சிப் பரப்பின் கீழ் வடஆர்க்காடு, செங்கல்பட்டு, தென்னார்க்காடு மாவட் டத்தின் சில பகுதிகள் அமைந்திருந்தன.

கல்வெட்டுகள்வழி பெறப்படும் குறிப்புகளின்படி,

இவன் ஆட்சிபீடத்தில் அமர்ந்தது கி.பி.1338 - 39ஆம் ஆண்டி லாகும். ராஜநாராயணனுடைய மூன்றாம் ஆட்சியாண்டு கல்வெட்டு (A.R.E.33 of 1933-34) ஒன்றில், வென்று மண் கொண்டான் அய்யாச்சியர் (தந்தை) என்றும்; சகலலோக சக்கரவர்த்தி பொன்னின் தம்பிரான் ராஜநாராயண சம்பு வரையன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

வென்றுமண்கொண்டானுடைய மறைவிற்குப் பிறகு எழும்போடன் கங்கையாடி மாடையன் (மாதவராயன்) என் னும் அகம்படிய முதலி (அரண்மனைக் காவல்காரன்) மறைந்த மன்னனுடைய அஸ்தியை கங்கையிலே கரைத்த பிறகு கயாவில் நீத்தார் நினைவுச்சடங்குகளை (கயா ஶ்ராத்தம்) செய்து மீண்டு வந்த பிறகு, குட்டியம் என்னும் கிராமத்தில் ஏகாம்பர நாதருடைய ஆலயம் ஒன்றை நிறுவி னான்-என்று A.R.32 of 1933-34 கல்வெட்டு ஒன்று தெரி விக்கின்றது. ராஜநாராயணன் ஆட்சிப்பொறுப்பில் அமர்ந்த சில ஆண்டுகளில் குறிப்பிடத் தக்க நிகழ்ச்சிகள் எதுவும் நிகழவில்லை. இவனுடைய ஆறாவது ஆட்சியாண்டில் பெருக்கெடுத்து ஓடிய வெள்ளத்தினால் பயிர்கள் அழிந்தன. நிலங்கள் பயிரிடுவதற்குத் தகுதியற்றன வாக மாற்றம் பெற்றன. இவ்வாறு வெள்ளத்தால் பாதிக்கப் பட்ட இடங்களில் நில வரியை ரத்துசெய்தும், தகுந்த உதவி களைச் செய்தும், குடிமக்களை இயற்கையின் சீற்றத்திலிருந்து பாதுகாத்தான் ராஜநாராயணன்.

மதுரை சுல்தான்களுடைய ஆட்சி கி.பி.1323ஆம் ஆண்டு தொடங்கி 1371வரை நீடித்திருந்தது. கி.பி.1323 தொடங்கி கி.பி.1334ஆம் ஆண்டுவரை டெல்லி சுல்தான் களுடைய நேரடி ஆட்சிப்பரப்பில் மதுரை அமைந்திருந்தது. மதுரை சுல்தான்களுடைய ஆட்சிபரப்பில் தென்னார்க்காடு



மாவட்டத்தில் அமைந்துள்ள 'வ்யாக்ரபுரி' எனப்படும் சிதம் பரமும் அடங்கும். மதுராவிஜயத்தில் வ்யாக்ரபுரி எனப்படும் சிதம்பரத்தில் உண்மையிலேயே புலிகள் நடமாடிக் கொண்டி ருந்தன என்ற குறிப்புகொண்டு, சைவர்களால் **கோயில்** என்று குறிப்பிடப்படும் சிதம்பரம் எத்தகையதோர் சீர்குலைவிற்கு உட்படுத்தப்பட்டது என்பதை நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

**(கி.பி.1323ஆம் ஆண்டு நிகழ்ந்த உலூக்கானுடைய படை யெடுப்பிற்குப் பிறகு திருவரங்கம் தொடங்கி பல புனிதத்தலங்கள் சூறையாடப்பட்டன. பெரும்பாலான புனிதத்தலங்களில் குடியிருந் தோர் கொல்லப்பட்டனர். பலர் முகம்மதியர்களுடைய கொடுமைக்கு அஞ்சித் தப்பி யோடினர். அவ்வாறு பாழ்படுத்தப்பட்ட நகரங்களில் சிதம் பரமும் ஒன்றாகும்.)**

இத்தகையதொரு சூழ்நிலையில், சம்புவரையர் களுடைய நாட்டை ஆண்டுவந்த ராஜநாராயணனுக்கும், மதுரை சுல்தான்களுக்கும் நிலவியிருந்த உறவைப்பற்றிய குறிப்புகள் ஏதும் காணக்கிடைக்கவில்லை.

மதுரை சுல்தான்களுக்கும், சம்புவரையர்களுக்கும் எந்தவித மோதல்களும் நிகழவில்லை. இவ்விருவரும் தந்தமக்குள் போர் செய்திடாது அமைதி காத்துவந்தது வரலாற்று ஆசிரியர்களுக்கு புலப்படாத ஒரு புதிராகவே இருந்து வருகிறது. மூன்றாம் வீரவல்லாளனை (கி.பி.1340) கண்ணனூர்ப்போரில் கொன்று அவனுடைய உடலில் வைக்கோலைத் திணித்து, மதுரை கோட்டைவாயிலில் தொங்கவிட்ட நிகழ்ச்சியின் போதுகூட ராஜநாராயணன் எந்தக் குறுக்கீடும் செய்யாது வாளாயிருந்தது அவனுடைய புகழுக்குக் களங்கத்தை விளைவிப்பதாகவே அமைந்துள்ளது.

இவனுடைய ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். இடிக்கப்பட்ட கோயில்கள் மீண்டும் கட்டப்பட்டன. கைத்தொழிலுக்கு அரசின் ஆதரவை அவ்வப்போது தந்து வந்தான். முகம்மதியர்களுடைய படையெடுப்பின்போது அச்சத்தினால் ஊரைவிட்டு இடம் பெயர்ந்த குடிமக்களை மீண்டும் அவரவர்களுக்கு உரிய இடத்தில் குடியமர்த்தினான் இவன்.

இம்மன்னனுடைய 7ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு (A.R.E.203 of 1912) ஒன்று முகம்மதியர்களுடைய படை யெடுப்பிற்கு அஞ்சி திருவொற்றியூர் கோயிலில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஆபரணங்களையும் பொற்காசுகளையும் எடுத்துச் சென்றவர்களுடைய நிலத்தையும், வீட்டு மனை களையும் அரசாங்கம் கையப்படுத்தியதைக் குறிப் பிடுகின்றது.

இவன் சைவ சமயத்தைச் சார்ந்தவனாயிருந்த போதி லும், திருக்கடன்மல்லை போன்ற விஷ்ணு ஸ்தலங்களையும் போற்றிப் பாதுகாத்து வந்தான். அவனுடைய காலத்தில் திருக்கடன்மல்லை ''ஸ்தலசயனப்பெருமாள் கோயில்'', உல களந்த பெருமாள் கோயில் என்று குறிப் பிடப்படுகிறது.

ஜைனப்பள்ளிகளுக்கும், ராஜநாராயண சம்பு வரையன் வரியிலியாக பல கிராமங்களை அளித்து ள்ளான். இவனுடைய ஆட்சிகாலத்தில் வணிகர் களும், தனிகர்களும் மற்றைய பொது மக்களும் அறக்கட்டளைகள் பலவற்றை ஏற்படுத்தி வைத்தனர். திருக்கோயில்களுக்குப் பெருமளவில் நிவந்தங்களை அளித்து வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவனுடைய 16ஆம் ஆட்சியாண்டு (A.R.E.103 of



1932-33) கல்வெட்டு ஒன்று சதுரங்கப் பட்டணம் என்னும் துறைமுகம் ராஜநாராயணப்பட்டணம் எனப் பெயர் மாற்றம் பெற்றதோடு மட்டுமல்லாமல் ஏற்றுமதியை ஊக்குவிப்பதற் காக சில வரிவிலக்குகளை அளித்தமையையும் குறிப் பிடுகின்றது.

செட்டிகள், கைக்கோளர், செக்கு வணிகர், சாலியர் ஆகியோர்களைப் பற்றிய குறிப்புகளும் தறிக்கடமை (A.R.E. No.298 of 1910), பேர்க் கடமை போன்ற வரிவிதிப்புகள் அவனுடைய காலத்திய சிறு தொழில் வளர்ச்சியைக் குறிப் பிடுகின்றன. ஆட்சி பீடத்தில் அமர்ந்த 20 ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி.1359ஆம் ஆண்டு இவனுடைய ஆட்சி முடிவுற்றது.

பொன்னின் பெருமாள், பொன்னின் தம்பிரான் போன்ற சிறப்புப் பெயர்கள் இவனுக்கு அமைந்திருந்தன. (A.R.E.33 of 1933-34) இவனுடைய மறைவிற்குப் பிறகு இரண்டாம் வென்று மண்கொண்டான் ஆட்சிபீடத்தில் அமர்ந் தான். இவன் நீண்ட நாட்கள் அரியணையில் அமர்ந்திருக்க வில்லை. வீர கம்பண்ண உடையாருடைய தலைமையில் தெற்குநோக்கி புறப்பட்ட படையை எதிர்கொள்ள முடியாத இவன், போரிலே மாண்டான்.

### *வீரகம்பண்ண உடையாரும், சவண்ண உடையாரும்:*

வரலாற்று ஆய்வாளர்களான திரு.S.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் போன்றவர்கள் தொண்டை மண்டலத்தை ஆண்டு கொண்டிருந்த முதலாம் வென்று மண் கொண் டானை (கி.பி.1322-1339) வீர கம்பண்ண உடையார் போரிலே வெற்றிக்கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளனர். இது

வரலாற்று உண்மைகளுக்கு முரண்பட்டதாகும். ஏனெனில் கி.பி.1352 ஆம் ஆண்டில்தான் தொண்டை மண்டலத்தில் வீரகம்பண்ண உடையாருடைய முதல் கல் வெட்டு காணப் படுகிறது. (திருவண்ணாமலை தாலுகாவில் இடிந்த நிலையில் காணப்படும் ஆவூர் சிவன்கோயில் மண்டபத்தின் மேற்குப் புற சுவர்களில் அமைந்துள்ள கல்வெட்டு சகம் 1274 நந்தன ஆண்டைச் சார்ந்ததாகும்.) (A.R.E.297 of 1919)

ஆகவே வீரகம்பண்ண உடையாருடைய படையெடுப்பு கி.பி.1352ஆம் ஆண்டிற்கு முன்பு நடைபெற்றிருக்க இயலாது. வென்று மண்கொண்டான், நாட்டில் அமைதி நிலவியிருந்த காலத்தில் இறைவனடி சேர்ந்தான். அவனுடைய மகனான ராஜநாராயணன் தனது தந்தையின் அஸ்தியை எழும் போடன் கங்கையாடி மாடையன் என்பான் மூலம் கங்கை யிலே கரைத்த நிகழ்ச்சியும் அவன் மீண்டுவந்து, குட்டியம் என்ற கிராமத்தில் ஏகாம்பரநாதருடைய ஆலயத்தை நிறுவியதும் முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. (A.R.E. 32 of 1933-34)

ராஜநாராயணனுடைய ஆட்சிகாலம் கி.பி.1359ஆம் ஆண்டுவரை நீடித்திருந்தது என்பதை அவனுடைய 20ஆவதுஆட்சியாண்டு கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது. (A.R.E.36 of 1933-1934) கீழ்மின்னல் ஆதிகேசவப் பெருமாள் கோயிலில் அமைந்துள்ள கல்வெட்டு, எம்பெருமான் கோயில்கொண்டி ருக்கும் கர்ப்பக்ருஹத்தையும், அர்த்த மண்டபத்தையும் ஜெயங்கொண்டசோழபுரத்தைச் சேர்ந்த "நங்கள் பிள்ளை" என்பான் ராஜ நாராயணனுடைய 20ஆவது ஆட்சியாண்டில் திருப்பணி செய்ததாகக் குறிப்பிடுகிறது.

இவனுடைய 11 மற்றும் 12ஆம் ஆட்சியாண்டுகளில் (ஆட்சிகாலம் கி.பி.1359ஆம் ஆண்டுவரை நீடித்திருந்த



காலத்தில்) விஜயநகர வீரகம்பண்ண உடையாருடைய கல்வெட்டுகள் அமைந்திருப்பதைக்கொண்டு ராஜ நாராயணனுக்கும் வீர கம்பண்ண உடையாருக்கும் போர்கள் பலமுறை மூண்டிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொள்ளலாம். வீரகம்பண்ண உடையாருடைய படை யெடுப்பு கி.பி.1351ஆம் ஆண்டு நிகழ்ந்திருக்கக் கூடு மானால் கீழ்க்கண்ட நிகழ்வுகளுக்கு நாம் பதில் தேடியாக வேண்டும்.

**1.கங்காதேவியின் மதுராவிஜயத்தின்படி தொண்டை மண்டலத்தின்மீது வீரகம்பண்ணஉடையார் படையெடுத்துப் போரில் அதனை ஆண்டுவந்த சம்புவராயரை வீரமரணம் அடையச் செய்தான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.**

***2. கம்பண்ண உடையாருடைய சில உறவினர்களும் படைத்தலைவர்களும் சம்புவராய ஸ்தாபனாசார்யர் என்ற பட்டப்பெயரை சூட்டிக்கொண்டுள்ளனர்.*** (சாளுவ மங்கு மற்றும் சவண்ண உடையார் ஆகியோர் இந்தப் பட்டப் பெயர்களைச் சூட்டிக்கொண்டுள்ளனர். 'உதாஹரணமாலா' என்னும் நூலில் சம்பா என்ற சம்புவரையரைப் போரில் சாளுவ மங்கு வெற்றி கொண்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.)

வீரகம்பண்ண உடையாரின் படையெடுப்பின் போதுசம்புவராயர்கொல்லப்பட்டிருப்பின், "சம்புவராய ஸ்தாபனா சார்யர்" என்ற பட்டப்பெயரை எவ்வாறு அவர்கள் சூட்டிக் கொண்டிருக்கக்கூடும்?

மதுராவிஜயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள போரும், சம்புவராயர் கொல்லப்பட்டமையும் இரண்டு அரசுகளுக்கும் (விஜயநகர மன்னர் படைக்கும் சம்புவராயர் படைக்கும்)

ஏற்பட்ட பல போர்களின் முடிவாகும். சம்புவராயர்களை வெற்றி கொள்வதற்கு விஜயநகர மன்னர்கள் பலமுறை படையெடுத்தனர் என்பது இதனால் புலப்படுகிறது.

ஆகவே, கம்பண்ண உடையாருடைய திருவண்ணா மலைக் கல்வெட்டு விஜயநகர மன்னர்களுடைய ஆரம்பகால படை யெடுப்புகளின்போது அதில் படைத்தலைவராகப் பணி யாற்றிய வீர கம்பண்ண உடையாருடைய கல்வெட்டாகக் கொள்ளக்கூடும். (A.R.E.297 of 1919)

விஜயநகர மன்னர்களுக்கு உட்பட்ட உதயகிரி பட்டி னத்தின் ராஜபிரதிநிதியாக முதலாம் கம்பண்ண உடையாரு டைய மகனான சவண்ண உடையார் காலத்திய கல் வெட்டுகள் பல தொண்டை மண்டலத்தில் காணப் படுகின்றன.

(A.R.E.357 of 1928-29; 503 of 1906; 500 of 1906; 8 of 1899; 350 of 1927-28; 213 of 1912; 240 of 1912; 504 of 1906; 523 of 1919; 188 of 1903 *மற்றும் பல கல்வெட்டுகள்.*)

இந்த கல்வெட்டுகளில் ஆட்சியாண்டுகள் குறிப் பிடப்பட்டுள்ளன. தமிழகத்தில் காணப்படும் விஜயநகர மன்னர்களுடைய முதல் கல்வெட்டு செங்கல்பட்டு மாவட்டம் பொன்னேரி தாலுகா, திருப்பாலைவனத்தில் கி.பி. 1350ஆம் ஏற்படுத்தி வைக்கப்பட்ட கல்வெட்டாகும். (A.R.E.357 of 1928-29)

முதலாம் கம்பண்ணணின் மறைவிற்குப்பிறகு அவனுடைய மகனான சவண்ண உடையார் உதயகிரி பட்டினத்தின் ராஜபிரதிநிதியாகப் பொறுப்பேற்றுக் கொண்



டான். "கீழ்க்கடற்கரை தலைவன்" என்ற பட்டப் பெயரையும் சூட்டிக் கொண்டான். மதுரை சுல்தான்களை வெற்றி கொண்டு தமிழகத்தில் மீண்டும் இந்து மன்னர்களுடைய ஆட்சியை நிலைநாட்டவேண்டும் என்ற பெரு நோக்கைத் தன்னுடைய கனவாகக் கொண்டவர் சவண்ண உடையார். மதுரை சுல்தான்களை வெற்றிகொள்வதற்காக வீரகம்பண்ண உடையாரும், சவண்ண உடையாரும் ஒரே நேரத்தில் படையெடுப்பதற்கு திட்டமிட்டிருக்கக்கூடும். தொண்டை மண்டலத்தின் கிழக்கிலிருந்து வீரகம்பண்ணரும், தெற்கி லிருந்து சவண்ண உடையாரும் படை யெடுத்து மதுரை சுல்தான்களை வெற்றிகொள்வதற்கான திட்டத்தை வகுத்து ள்ளனர் என்பதை நாம் வரலாற்று நிகழ்வுகளைக் கொண்டு அறுதியிடலாம். கி.பி.1350ஆம் ஆண்டு பொன் னேரியில் சவண்ண உடையாருடைய முதல் கல்வெட்டு (A.R.E.357 of 1928-29) காணக்கிடைக்கின்றது. அவனுடைய கி.பி.1352-1353ஆம் ஆண்டு தஞ்சை மாவட்டம் செந்தலையில் காணப்படும் கல் வெட்டானது இவன் சம்புவராயர்களுக்கு எதிராக கி.பி.1350-52ஆம் ஆண்டு களுக்கு இடைப்பட்ட பகுதியில் படையெடுப்புகளை மேற்கொண்டிருக்கலாம் என்பதைத் தெளிவு படுத்துகிறது.

கி.பி.1350-51ஆகிய ஆண்டுகளில் சம்புவராயர்கள் மீது விஜயநகர மன்னர்கள் படையெடுப்பினை நிகழ்த்திய போது வீரசவண்ணா அந்தப் போர்களில் பெரும் பங்கு கொண்டுள்ளான். இவனுடைய படைத்தளபதிகளில் ஒருவர் சாளுவமங்கு. *(பின்வரும் பகுதிகளில் வீரகம்பண்ண உடை யாருடைய படைத்தளபதிகளைப் பற்றிய குறிப்புகளில் இவரைப் பற்றிய விரிவான செய்திகள் கொடுக்கப்படவுள்ளன. அங்கே கண்டு கொள்க.)*

1351ஆம் ஆண்டு தொண்டைமண்டலத்தின் மீதான படை யெடுப்பின்போது வீரகம்பண்ணர் அதில் கலந்து கொண்டாரா என்பதைப்பற்றி உறுதிபடக் கூற இயலாது. அவர் ஹொய்சாள வீரவல்லாளனுடைய தலைநகராக விளங்கிய திருவண்ணாமலையில் இருந்துவந்தார் என்ப தற்குக் கல்வெட்டுச் சான்றுகள் அமைந்துள்ளன. (கல்வெட்டு எண். A.R.E.195 of 1936-37). இந்தக் கட்டுரையின் முன்பகுதி களில் குறிப்பிட்டுள்ளபடி வீரகம்பண்ணர் கி.பி. 1352க்குப் பிறகு முலுபாகலுக்குத் திரும்பிச் சென்றிருக்கக்கூடும். வீரசவண்ணர் சம்புவரையர்களை வெற்றி கொண்டபிறகு அவர்களை விஜயநகர மன்னர்களின் மேலாண்மைக்கு ஆட்பட்டவர்களாக இருக்கும்படிச் செய்து, தொண்டை மண்டலத்தின் ஆட்சி பொறுப்பை வீரசவண்ண உடையார் மேற்பார்வையின் கீழ்க் கொண்டுவந்தார் வீரகம்பண்ண உடையார்.

மதுராவிஜயத்தில் தெற்குநோக்கி படையெடுக்கும் போது வீரகம்பண்ண உடையார் விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைநகரிலிருந்து புறப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஜைமினி பாரதத்தின் அறிமுகக் கவிதைகள் சாளுவமங்குவின் வீரச்செயல்களைப் புகழ்ந்து கூறுகின்றன. 'சாளுவமங்கு சம்புவரையர்களுக்கு அவர்கள் ஆண்டுவந்த பகுதியை மீண்டும் அளித்தான். இதனால் அவனுக்கு 'சம்புவராய ஸ்தாபனாசார்யர்' என்ற பட்டப்பெயர் ஏற்பட்டது. 'சாளு வாப்யுதயம்' என்ற நூலில் சாளுவ மங்கு சம்புவரையர்களை போரிலே வென்றபோதும், அவர்களை மீண்டும் ஆட்சியில் அமர்த்தினான்' என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

சம்புவரையர் குல குறுநில மன்னனான ராஜ நாரா யணன் சவண்ண உடையாருடைய ஆட்சிக்குக் கட்டுப்பட்ட



வராகவே தொண்டை மண்டலத்தை ஆண்டுவந்தார் என்பது கல்வெட்டுகள் வழி அறியப்படுகிறது. திருவொற்றியூரில் காணப்படும், கல்வெட்டு ஒன்றில் (A.R.E.240 of 1912) கி.பி.1354-55 ஆண்டுகளில் 48 அகம்படியர்களுக்கு விரச வண்ணா அளித்த தண்டனையைப் பற்றி குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த அகம்படியர்கள் கிராமங்களைக் காக்கும் காவற்படையினரைச் சார்ந்தவர்கள். இவர்களுடைய கவனக் குறைவாலும், திறமையின்மையினாலும் கிராமங்களில் வழிப்பறி கொள்ளைகளும், கலகங்களும் நிகழ்ந்துவந்தன. இந்த அகம்படியர்கள் சம்புவரையர்களின் கீழ்ப் பணிபுரிந்த போது தங்கள் கடமைகளை ஒழுங்காகவே செய்து வந்தனர்.

அகம்படியர்கள் வீரசவண்ண உடையாருக்கு ஆட்பட் டவர்களாகத் தங்களைக் காட்டிக் கொள்ள விரும்பாவில்லை. இத்தகைய செயல்களால் அகம்படியர்கள் வீரசவண்ண உடையாரின் ஆட்சிக்கு எதிராக செயல் பட்டனர். கல்வெட்டு எண். A.R.E. 110 of 1921இன்படி திருக்காரீஸ்வரர் திருக் கோயிலில் எழுந்தருளப் பண்ணப்பட்டிருந்த நாயன்மார் களுடைய உருவச் சிலைகளின் புனிதத் தன்மைக்குச் சிலர் தீங்கு விளைவித்ததாகவும் கி.பி.1367ஆம் ஆண்டு வீரகம்பண்ண உடையாரால் அந்தக் கோயிலில் நாயன்மார் களுடைய சிலைகள் புனர் நிர்மாணம் செய்யப்பட்டதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த நிகழ்ச்சிகளின் மூலம் தொண்டை மண்ட லத்தின் ராஜநாராயணன் ஆட்சிபீடத்தில் இருந்த போதிலும் ராஜநாராயணனுடைய குடிமக்கள் விஜயநகர மன்னனுடைய மேலாண்மையை விருப்பத்துடன் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது தெளிவாகிறது.

கல்வெட்டுகளோ மற்றைய இலக்கியச் சான்றுகளோ தொண்டைமண்டலத்தின்மீது இரண்டாவது முறையாக விஜய நகர மன்னர்களுடைய படைகள் படையெடுக்க நேர்ந்தது என்பதை வெளிப்படுத்தவில்லை.

தொண்டை மண்டலத்தை ஆண்டுவந்த ராஜ நாராயணன் மக்களால் பெரிதும் நேசிக்கப்பட்ட மன்னனாக விளங்கி வந்துள்ளான். கி.பி.1352ஆம் ஆண்டுக்குப்பிறகு சவண்ண உடையாருடைய ஆட்சியின்கீழ் தங்களை உட்படுத்திக்கொள்ள விரும்பாத மக்கள் கலகத்தில் ஈடு பட்டதால் சம்புவரையர்களைப் போரிலே அழித்திட விஜயநகர அரசு அத்தகையதொரு முடிவினை எடுத்திருக்கக் கூடும். சம்புவரையர்களுக்கும் மதுரை சுல்தான் களுக்கும் இடையே நிலவியிருந்த நல்லிணக்கமும் இதற்கு ஒரு காரணமாய் அமைந்திருக்கக்கூடும் என்று ஊகிக்கப்படுகிறது. இதற்கு வலுவான ஆதாரங்கள் இல்லையெனினும், விஜயநகர அரசு சம்புவரையர்கள் மீது இரண்டாவது படையெடுப்பு நிகழ்த்தி யதற்கு வேறு காரணங்கள் ஏதும் அறிய இயல வில்லை.

ஆகவே மதுரை மீது படையெடுப்பைத் தொடங்கு வதற்கு முன்பு இடைப்பட்டிருந்த தொண்டை மண்டலத்தை ஆண்டுவந்த சம்புவரையர்களை அழித்திடவேண்டும் என்று வீரகம்பண்ண உடையார் நினைத்திருக்கக்கூடும். கி.பி. 1371ஆம் ஆண்டுதான் தெற்குநோக்கி வீரகம்பண்ண உடை யாருடைய படைகள் புறப்பட்டுச்சென்றன. கி.பி.1359ஆம் ஆண்டுதொடங்கி 12ஆண்டுகள் தொண்டை மண்டலத்தில் வீரகம்பண்ண உடையார் நல்லாட்சி புரிந்ததுடன் மக்களுடைய அன்பிற்கு பாத்திரரானவராகவும் இருந்துள்ளார்.

இவ்வாறு பல ஆண்டுகள் தொண்டைமண்டலத்தில்



வீரகம்பண்ண உடையார் ஆட்சிபுரிந்ததன் விளைவாக அந்த நாட்டின் மக்களுடைய நன்மதிப்பினைப் பெற்றார். கி.பி. 1359ற்குப் பின் நிகழ்ந்த போரில் ராஜநாராயணனும் அவனுடைய மகனான இரண்டாவது வென்று மண் கொண்டானும் இறந்திருக்கக்கூடும்.

கி.பி.1352ஆம் ஆண்டு நிகழ்ந்த தொண்டைமண்டல முதற்போருக்குப்பிறகு வீரகம்பண்ணர் முலுபாகலில் முகாமிட்டிருந்தார். அடுத்த தொண்டைமண்டலப் படை யெடுப்பு கி.பி.1359இல் நிகழ்ந்துள்ளது. இடைப்பட்ட ஆண்டுகளில் அவர் முலுபாகலிலேயே முகாமிட்டிருந்தார் என்பதும் மதுரா விஜயத்தின்மூலம் அறியப்படுகிறது.

மதுராவிஜயம் மூன்றாவது காண்டத்தில் வீரகம்ப ண்ண உடையார் ஹம்பியில் தன்னுடைய தந்தை யாருடன் சில மாதங்கள் தங்கியிருந்தபிறகு, முலுபாகலுக்கு வந்து சேர்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. "தமிழகத்தில் துருக்கர்கள் இராவணனைப் போல் ஆட்சி செய்து வருகின்றனர். வீரகம்பண்ணரே! நீர் இராமனைப் போன்று அவர்களை அழித்து மக்களுக்கு நல் வாழ்வு அளித்திடுவீர். மக்களை அழிவினின் றும் காப்பாற்றிடுவீர்" என்று வீர கம்பண்ண உடையாருக்கு புக்கர் ஆணையிட்டார். (மதுரா விஜயம் 3ஆவது காண்டம் 43ஆவது ஸ்லோகம்.)

வீரசவண்ண உடையார் ராஜநாராயணனுடைய மறைவு பற்றிய செய்தியை, வீரகம்பண்ணவுடையாருக்கு முறைப்படி அறிவித்தபிறகு தொண்டை மண்டலத்தின் மீதான படை யெடுப்பு தொடங்கப்பட்டிருக்கக்கூடும். கி.பி.1362ஆம் ஆண்டு ராஜநாராயணன் இறந்தான். அதன்பிறகு வீரகம்பண்ண உடையார் நூற்றுக்கும் மேற்பட்ட

யானைப் படைகள், காற்றின் வேகத்தை விஞ்சிடும் குதிரைப்படைகள் மற்றும் காலாட்படை வீரர்களுடன் முலுபாகலுவிலிருந்து புறப்பட்டார். இந்தப் படைகளுக்குத் தலைவராக மாரய்ய நாயக்கர் நியமிக்கப்பட்டார். ஹம்பி யிலிருந்து புறப்பட்ட படைகள் கர்நாடக நிலப்பகுதி யினை 6 நாட்களில் கடந்து முலுபாகலுவைச் சென்ற டைந்தன.

அங்கே சில நாட்கள் தங்கியிருந்தபிறகு தனது பயணத்தை மேற்கொண்டார் வீரகம்பண்ணர். ஒரு நன்னாளில் அங்கிருந்து புறப்பட்ட அவர் தொண்டை மண்டலத்தின் பல பகுதிகளை தன்வசப்படுத்திக் கொண்டார். விரிஞ்சிபுரத்தில்முகாமிட்டிருந்த அவர் காஞ்சீ நகரத்தின் மீது படையெடுப்ப தற்கான தக்க தருணத்தை எதிர்நோக்கி இருந்தார். தொண்டை மண்டலப் படைகளுக்கும் விஜயநகரப் படைகளுக்கும் கடும் போர் நிகழ்ந்தது. வலிமைமிக்க விஜயநகரப் படைகளால் தொண்டைமண்டலப் படைகள் அழிக்கப்பட்டன. பெரும் எண்ணிக்கையில் தொண்டை மண்டல வீரர்கள் தங்கள் ஆயுதங்களை பொகட்டு படைக் களத்தைவிட்டு ஓடினர். நாட்டை ஆண்டுவந்த சம்புவரையன் ராஜகம்பீர மலையில் அமைந் திருந்த ஒரு கோட்டைக்குள் ஒளிந்து கொண்டான்.

காஞ்சீ நகரத்திலேயே சில நாள் முகாமிட்டிருந்த வீர கம்பண்ணர் நெடுதுயர்ந்த சுவர்களை அரணாகக் கொண் டிருந்த ராஜகம்பீரன் மலைக்கோட்டையை தமது படை களுடன் தாக்கினார். மலையின் உச்சியின்மீது அமைந்திருந்த இந்தக் கோட்டைக்கு சென்றடைந்த விஜயநகரப் படை வீரர்கள் சம்புவரையனை வீழ்த்தினர்.

கல்வெட்டு எண். A.R.E. 267 of 1919: வடஆர்க்காடு



வந்த வாசி தாலுக்காவில் மாடம் என்ற ஊரில் அமைந்துள்ள தாடக புரீஸ்வரர் கோயிலின் வெளிகோபுரத்தில் பொறிக்கப் பட்டுள்ளது. சகம்1285 விரோதி கிருத் ஆண்டு (கி.பி.1363) பொறிக்கப்பட்டுள்ள வீரகம்பண்ண உடையார் காலத்திய கல்வெட்டின்படி, குளத்தூர் என்னும் கிராமத்தில் அமைந்து ஞுள்ள திருஅக்னீஸ்வரமுடைய மகாதேவர் கோயிலில் உள்ள ''கந்தாரகுலி மாரய்யநாயக்கன் திருக்கோபுரத்தை'' சோமைய தன்நாயக்கர் குமாரனான கந்தாரகுலி மாரய்ய நாயக்கன் கட்டியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டில் வென்று மண்கொண்ட சம்புவராயரை மாரய்ய நாயக்கர் வெற்றிகொண்டதன் நினைவுச் சின்னமாகக் கட்டப்பட்டது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் வீர புக்கண்ணர், வீரகம்பண்ணர், சோமைய்ய தன் நாயக்கர் ஆகியோரின் புகழ் பாடிடும் வரிகள் பொறிக்கப்பட்டுள்ளன.

கல்வெட்டு எண். **A.R.E.255 of 1934-35** திருக் கோவலூர் திருவிக்ரமன் திருக்கோயில் கருவறைக்கு முன்புள்ள மண்ட பத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள கல்வெட்டு. அழிய அரணிட்ட [அரணை அழித்திட்ட] 'கந்தாரகுலி மாரய்ய நாயக்கன்' நினைவாக ஸ்தானத்தார் ஒன்றுகூடி தென்னந் தோப்பு ஒன்றினைத் திருக்கோயிலுக்கு அளித்தமை குறிப் பிடப்பட்டுள்ளது. மேலும் சம்புவரையரை வென்றி கொண்ட மாரய்யநாயக்கன் திருஇடைகழி நாயனார் திருக்கோயில் கோபுரங்களைப் பழுதுபார்த்தமை இதில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இந்த இரண்டு கல்வெட்டுகள் மூலம், வலிமை மிக்க எதிரியை வீரகம்பண்ண உடையார் படைத்தலைவனான மாரய்ய நாயக்கன் உதவிகொண்டு வீழ்த்தியமை அறியப் படுகிறது.

மதுராவிஜயம் வீரகம்பண்ணருக்கும், சம்புவரை யருக்கும் நடந்த போரில் பின்னவர் கொல்லப்பட்டதாகக்

குறிப்பிடுகிறது. சம்புவரையரின் வீழ்ச்சிக்குப் பிறகு தொண்டை மண்டலம் முலுபாகலுவைத் தலைமையிடமாகக் கொண்ட ஆட்சியாளர் பொறுப்பின் கீழ்க்கொண்டுவரப்பட்டது.

"வீரகம்பண்ணர் சம்புவரையர் மீது போர் தொடுத்து பெற்ற வெற்றிக்குப்பிறகு காஞ்சியைத் தமது இருப் பிடமாகக் கொண்டு தொண்டை மண்டலத்தை ஆண்டுவந்தார். மாரட கனகாரா என்று அழைக்கப்பட்டு வந்த காஞ்சியிலிருந்து நாட்டில் அமைதி தவழ்ந்திடும்படி ஆட்சிசெய்துவந்தார் வீர கம்பண்ணர்" என்று மதுராவிஜயம் நான்காவது காண்டத்தின் முடிவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

காஞ்சிபுரம், திருப்புட்குழி விஜயராகவப் பெரு மாளுக்கு வீரகம்பண்ண உடையார் அளித்த ஆபரணத்தைப் பற்றிய குறிப்பு அந்தக்கோயிலின் கிழக்குப் பகுதி சுவரில் அமைந்துள்ளது. அதில் ராஜகம்பீரன் கோட்டையை படைபலத்தால் வென்ற வீரகம் பண்ணர் அரியணையில் நிலையாய் அமர்ந்து பல நற் செயல்களைப் புரிந்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. (A.R.E.18 of 1899)

***வீரகம்பண்ணர் மதுரை மீது கொண்ட வெற்றி :***

வீரகம்பண்ணருடைய படையெடுப்பிற்கு முன் மதுரை சுல்தான்களுடைய ஆட்சியைப் பற்றிய குறிப்புகள் Khusrau போன்றவர்களுடைய நாட்குறிப்புகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. 'மாபார்' என்று அவரால் குறிப்பிடப்படும் நிலப் பகுதியில்தான் மாலிகாபூர் மற்றும் உலூக்கானுடைய படை யெடுப்புகளின்போது அதிக அளவில் கொள்ளை, மற்றும் கோயில் இடிப்புகள் நிகழ்ந்தன. டெல்லியிலிருந்து மாபா ருக்குச் செல்லவேண்டு மானால் 12 மாதங்கள் ஆகும் என்று அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார். *(கீழைக் கடற்கரையில் நெல்லூர் தொடங்கி மேலைக் கடற்கரையில் கோழிக்கோடு ஈறாக உள்ள பகுதி அக்காலத்தில் 'மாபார்' என்று வழங்கப்பட்டு வந்தது.)*



மாறவர்மன் குலசேகரனுடைய இரண்டு மைந்தர்கள் முறையே சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் ஆவர். இவர்களில் சுந்தரபாண்டியன் பட்டத்தரசிக்குப் பிறந்தவன். வீர பாண்டியன் மாறவர்மன் குலசேகரனுடைய ஆசை நாயகிக்குப் பிறந்தவன். இவர்களில் வீரம்மிக்கவனாகவும், அறிவுடைய வனாகவும் விளங்கிய வீரபாண்டியனுக்கு இளவரசு பட்டம் சூட்டினான் மாறவர்மன் குலசேகரன். இதனால் வெகுண் டெழுந்த சுந்தர பாண்டியன் தன் தந்தையைக் கொன்றதோடு மட்டுமல்லாமல் பாண்டியமன்னனாகத் தன்னை முடிசூட்டிக் கொண்டான். இதன் விளைவாக வீரபாண்டியனுக்கும் சுந்தர பாண்டியனுக்கும் மதுரைக்கு அண்மையில் போர் நிகழ்ந்தது. இந்தப் போரில் சுந்தரபாண்டியன் தோல்வியைத் தழுவினான். மதுரைக்கு மன்னனாக வீரபாண்டியன் முடிசூட்டிக் கொண்டான். வரலாற்று ஆசிரியர் வாஸாஃப் என்பார் கூற்றின்படி போரிலே தோல்வியைத் தழுவிய சுந்தர பாண்டியன் தமிழ் நாட்டைவிட்டு அகன்று டெல்லியை ஆண்டு வந்த அலாவுதீனிடம் தஞ்சம் புகுந்தான் என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு சுந்தரபாண்டியன் டெல்லி சென்று அல்லாவுதீனிடம் அடைக்கலம் தேடியது கி.பி.1310-ஆம் ஆண்டு ஜூன் மாதம் என்று வாஸாஃப் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கூற்றினை புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியர் திரு.கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியார் பல்வேறு ஆதாரங்களின் அடிப்படையில் மறுத்துள்ளார். 'பாண்டியர் வரலாறு' என்னும் தம்முடைய நூலில் கி.பி.1311-ஆம் ஆண்டின் இடைப் பகுதியில் குலசேகரனுடைய நாற்பத்து நான்காவது

ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டுகள் மதுரைப் பகுதிகளில் காணப்படுகின்றன என்றும், ஆட்சி உரிமை கோரிய சுந்தரபாண்டியன் தனது தந்தையான குலசேகரனை கி.பி.1310-ஆம் ஆண்டின் இடைப்பகுதியில் கொலை செய்திருக்கக் கூடுமானால், மதுரைப் பகுதியில் கி.பி.1311-ஆம் ஆண்டு குலசேகரனுடைய கல்வெட்டுகள் அமைந்திருக்க வாய்ப்பில்லை என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் Amir Khusrau சுந்தரபாண்டியனுக்கும், வீரபாண்டியனுக்கும் இடையே அரசுரிமைப் போராட்டம் நிகழ்ந்ததை மட்டும் குறிப்பிடுகிறாரேயன்றி 'சுந்தர பாண்டியன் டெல்லிக்குச் சென்று அடைக்கலம் தேடினான்' என்று குறிப் பிடவில்லை. ஆயினும் சில வரலாற்று ஆசிரியர்கள் வாஸாஃ பின் குறிப்புகளை முழுமையாக ஆராயாமல், மாலிகாஃபூர் கி.பி.1311-ஆம் ஆண்டு தென்னாட்டின் மீது படையெடுத்தற்கு மூலகாரணம் சுந்தரபாண்டியனே ஆவான் என்று குறிப்பிட் டுள்ளனர். சுந்தர பாண்டியன் டெல்லி சென்று அடைக்கலம் தேடினான் என்று குறிப்பிட்டுள்ள வாஸாஃப், மாலிகாஃபூரின் தென்னாட்டு படையெடுப்பிற்கு சுந்தரபாண்டியன் ஒரு காரணமாக அமைந்தான் என்று குறிப்பிடவில்லை.

தென்னாட்டுத் திருக்கோயில்களில் இருந்த அளவற்ற செல்வத்தைக் கொள்ளையடித்துச் செல்வதே மாலிகாஃபூரின் நோக்கமாய் அமைந்திருந்தது. பாண்டியநாட்டு மன்னர்களி டையே நிகழ்ந்த அரசுரிமைப் போராட்டத்தைப் பற்றி அவன் கவலை கொள்ளவில்லை. டெல்லியிலிருந்து பெரும் படை யோடு புறப்பட்ட மாலிகாஃபூர், யாதவ மன்னர்களுடைய தலைநகரமான தேவகிரியைத் தாக்கினான். அந்த நாட்டின் மன்னனான இராமதேவனின் உதவியுடன் தென்னாட்டுப் படையெடுப்பிற்குத் தேவையான முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டான். இராமதேவன் தன்னுடைய தளவாயான பரசுராமனை, மாலிகாஃபூரின் வழிகாட்டியாகத் தந்து உதவினான்.



வரலாற்று ஆசிரியர் திரு.என்.வெங்கடரமணய்யா தமது "Early Muslim Expansion in South India", (M.U.Historical Series No.17) என்னும் நூலில் ''மாலிகாஃபூரின் தென்னாட்டுப் படையெடுப்பிற்கு எந்த அரசியல் நோக்கமும் இல்லை'' என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் இராம தேவனுக்கும், ஹொய்சாள மூன்றாம் வீரவல்லாள தேவனுக்கும் நிலவியிருந்த பகைமை உணர்ச்சியின் விளைவாக இராமதேவன், ஹொய்சாளரின் தலைநகரான துவார சமுத்திரத்திற்கு மாலிகாஃபூர் சென்றடைவதற்கான அனைத்து உதவிகளையும் செய்து தந்தான் என்றும் தெரிவித்துள்ளார்.

*(இந்திய நாடு அடிமைப்பட்டதற்கு மன்னர் களிடையே நிலவியிருந்த இத்தகையதொரு பகைமை உணர்ச்சியே காரணமாக அமைந்திருந்தது.மாலிகாஃபூரின் தென்னாட்டு படை யெடுப்பு வரை மன்னர்கள் ஒருவருக்கொருவர் போரிட்டு வந்தனர். முடிவில் ஏதோ ஒரு இந்து சமயத்தைச் சார்ந்த மன்னனே இந்த மண்ணை ஆண்டு வந்தான். அந்த மன்னனால் நம்முடைய கோயில் களுக்கு எந்த ஆபத்தும் ஏற்படவில்லை. இந்த நிலைமை கி.பி. 1310 ஆம் ஆண்டு வரை நீடித்திருந்தது. வடஇந்தியாவில் வேரூன்றிய முகம்மதிய மன்னர்களில் 'கில்ஜி' பரம்பரையைச் சார்ந்த அல்லாவுதீன் கில்ஜி காலத்தில் தான் முதல்முதலாக தென்னாட்டின் மீது முகம்மதியர்கள் படை யெடுத்து வந்தனர். அவ்வாறு வந்தவர்களுக்கு இந்து சமயத்தைச் சார்ந்த மன்னர்களே அனைத்து உதவிகளும் செய்து வழியனுப்பி*

*வைத்தனர். இதற்குப் பல காரணங்கள் கூறப்படினும், 'யானை தன் தலையிலே மண்ணை வாரி இறைத்துக் கொள்வதைப் போலே' தென்னாட்டு மன்னர்கள் தங்களது அழிவைத் தாமே தேடிக் கொண்டனர். இந்தச் செயல் கி.பி.14ஆம் நூற்றாண்டில் தொடங்கி கி.பி.18ஆம் நூற்றாண்டில் முடிவுற்றது. 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் சந்தா சாஹிப்பிற்கும், முகம்மது அலிக்கும் நடந்த வாரிசுரிமைப் போராட்டத்தில் முகம்மது அலி ஆங்கிலேயருடைய உதவியையும், சந்தாசாஹிப் பிரெஞ்ச் நாட்டவருடைய உதவியையும் நாடினர். கர்நாடகப் போரின் இறுதியில் முகம்மது அலி வெற்றி யடைந்த போதிலும், கடனாளியான அவனைப் பெயருக்கு மட்டும் ஆட்சியில் அமர்த்தி, ஆங்கிலேயர்கள் இந்திய நாட்டை அடிமை கொண்டனர். இதுவே பாரதத் தாயின் சோக வரலாறு ஆகும்.)*

துவார சமுத்திரத்தை மாலிகாஃபூர் சென்றடைந்த போது மூன்றாம் வீரவல்லாளன், பாண்டிய நாட்டில் இரு சகோதரர் களுக்கும் இடையே நிகழ்ந்து கொண்டிருந்த வாரிசுரிமைப் போராட்டத்தினைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். மதுரையில் ஹொய்சாளர்களுடைய ஆட்சியை நிலைநாட்டுவதற்கு இதுவே தக்கதொரு தருணமென அவன் எண்ணம் கொண்டிருந்தான்.

கி.பி.1311-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் துவார சமுத்திரத்தை சென்றடைந்த மாலிகாஃபூர், செல்லும் வழியிலெல்லாம் இருந்த கோயில்களில் விக்ரஹங்களை உடைத்ததோடு மட்டுமல்லாமல், அந்தக் கோயில்களில் இருந்த அளவற்ற செல்வத்தை அள்ளிச் சென்றான். பெரும் படையோடு வந்த மாலிகாஃபூரை எதிர் கொள்ள இயலாத மூன்றாம் வீரவல்லாளன் அவனிடம் சரணடைந்தான். துவார



சமுத்திரத்தில் இருந்து தெற்கு நோக்கிச் செல்வதற்கான அனைத்து உதவிகளையும் அளித்தான் அவன்.

கி.பி.1311-ஆம் ஆண்டு மார்ச் மாதம் பாண்டிய நாட்டின் வட எல்லையை முற்றுகையிட்ட மாலிகாஃபூரின் படைகளை வீரத்தோடு எதிர்கொண்டான் வீரபாண்டியன். இராமதேவன், மூன்றாம் வீரவல்லாள தேவன் ஆகியோரைப் போலல்லாமல் வீரபாண்டியன், மாலிகாஃபூரை எதிர்த்துப் போரிட்டான். பெரும் படையோடு வந்த மாலிகாஃபூரை எதிர்கொள்ள இயலாத வீரபாண்டியன் 'பிர்துல்' என்னு மிடத்தில் தன்னைச் சூழ்ந்து நின்ற மாலிகாஃபூரின் படை வீரர்களிடமிருந்து தப்பித்துக் காடுகளில் மறைந்து கொண்டான். இதனால் சினம் கொண்ட மாலிகாஃபூர் தற்போதைய சமயபுரம் பகுதியான கண்ணனூருக்கு விரைந்தான்.

கோயிலொழுகின் முதற்பகுதியில் மாலிகாஃபூரின் படையெடுப்பைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அதில் 'டில்லீசுவரன்' என்றே அவன் குறிப்பிடப்படுகிறான்.

''இப்படித் திருவரங்கப் பெருநகரிலே பெருமாள் பரிஜனங்களுடன் வாழ்ந்திருக்கிற காலத்திலே, டில்லீசுவரனான துலுக்கன் ப்ரதாபருத்₃ரனை ஜயித்துத் [இவனே இராமதேவன் ஆவான்] தொண்டை மண்டலம், சோழ மண்டலம் முதலான ப்ரதேசங்களிலே பரவி முற்றிலும் வ்யாபித்து, திவ்யதேசங்களில் பெருமாள்களையும் எடுத்துக்கொண்டு போமளவில்; திருவரங்கத் திருப்பதியிலேயும் வந்து புகுந்து, கோயிலிலே பிரவேஶித்து, வடக்கு வாசலிலே புகுந்து, ஆரியபட்டாள் காவலான வடக்கு வாசலிலே புகுரவர, அவ்விடத்திலே **பஞ்சு கொண்டான்** என்கிற வரிருந்து படைபண்ணி அவர்களை நிறுத்த, பஹுு ஜநங்களாகை யாலே பத்துபேர் விழுந்து பஞ்சு கொண்டானை சரிப்பிடித்து[?]

உள்ளே புகுந்து கருவுகலம் முதலானவைகளையும் கொள்ளை யிட்டு, அழகிய மணவாளப்பெருமாள், சேரகுலவல்லியார் முதலான விக்ரஹங்களையும் எடுத்துக் கொண்டு, ஸர்வஸ் வத்தையும் கொண்டு போகையில்'' ...

## மதுரை சுல்தான்கள்

தெற்கு நோக்கி கி.பி. 1311ஆம் ஆண்டு முதன் முதலாகப் படையெடுத்தவன் மாலிகாஃபூர். இந்துக் கடவுள ர்களுடைய விக்ரஹங்களை உடைப்பதும், திருக்கோயில் களில் சேமித்து வைக்கப்பட்டிருந்த தங்கம் மற்றும் ஆபர ணங்களையும் கொள்ளையடிப்பதுமே அவனுடைய படை யெடுப்பின் முக்கிய குறிக்கோளாய் அமைந்திருந்தது.

அதன்பிறகு கி.பி. 1323ஆம் ஆண்டு உலூக்கான் என்று அழைக்கப்பட்டு வந்த முகம்மது பின் துக்ளக் என்பா னுடைய பெரும் படையெடுப்பு நிகழ்ந்தது. இந்தப் படை யெடுப்பின் விளைவாக மதுரையில் டில்லி பாதுஷாவிற்கு உட்பட்டவர்களாக சுல்தான்களுடைய ஆட்சி நிறுவப் பட்டது. கி.பி. 1334ஆம் ஆண்டுவரை சுல்தானாக ஆட்சி புரிந்து வந்த ஜலாலுதீன் ஆஸன்ஸா என்பானுடைய ஆட்சி காலத்தில் டில்லி பாதுஷாவிற்கு உட்பட்ட ஆட்சியாளர் என்ற நிலையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டான் அவன். மதுரைப் பகுதிக்குத் தன்னை மன்னனாக அறிவித்துக் கொண்டான். இவனுடைய ஆட்சி ஐந்தாண்டுகள் நீடித்திருந் தது. அதன்பிறகு மதுரை சுல்தானாக பலர் தம்மை அறி வித்துக் கொண்டனர். அவ்வாறு அறிவித்துக் கொண்டவர் களில் வலிமை பொருந்தியவனாகிய ஜியாஸுதீன் தம்கானி என்பான் மதுரை சுல்தானாக ஆட்சி பீடத்தில் அமர்ந்தான்.

கி.பி.1323ஆம் ஆண்டு தொடங்கி கி.பி. 1371ஆம்



ஆண்டு ஈறாக நாற்பத்தெட்டு ஆண்டுகள் இவர்களுடைய ஆட்சி நீடித்திருந்தது. இவர்கள் மதுரையை ஆண்ட காலத்தில் மக்கள், குறிப்பாக இந்துக்கள் சொல்லொணாத் துயருக்கு ஆட்படுத்தப் பட்டனர். இந்தக் காலகட்டத்தில் இந்துக்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை இந்திய மற்றும் வெளிநாட்டு வரலாற்று ஆசிரியர்கள் விவரித்துள்ளனர்.

குறிப்பாக Ibn Batuta, the Moorish travellerஇன் யாத்திரைக் குறிப்புகள் மற்றும் Briggs: Ferishta's Mohemedan Power-Vol.I, pp 322-47, Also, Elliot and Dowson, Vol.II-Barni's Tarikh-i-firoz-Shahi, pp 184-185 ஆகி யோருடையை நூல்கள் வழி, இந்துக்கள்மீது முகம்மதியர் இழைத்த கொடுமைகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இவற்றைத் தவிர கங்காதேவியின் மதுராவிஜயமும், முகம்மதியர்களுடைய கொடுங்கோன்மையை விவரிக் கின்றது. ராஜநாராயண சம்புவராயருடைய ஏழாம் ஆட்சி யாண்டு கல்வெட்டுகள் A.R.E.434 of 1903, (Also S.I.I.Vol. VIII), A.R.E. for 1913, page 128, No. 203 of 1913 முசல் மான்கள் நாட்டை ஆண்டு கொண்டிருந்தபோது இருந்த அவல நிலையை விவரிக்கின்றன.

இவற்றில் இபின் பட்டூடாவின் குறிப்புகள் முக்கியத் துவம் பொருந்தியவனவாய்க் கொள்ளப்படுகின்றன. ஏனெனில் அவை அவர்தம் கண்களால் கண்ட காட்சிகளைக் குறிப்பிடுவதாலும், மற்றொருவருடைய அனுபவத்தின் அடிப்படையில் எழுதப்படாத குறிப்புகள்ாகவும் அமைந்து ள்ளதால் இந்தக் குறிப்புகள் உண்மை நிலையைத் தெரி விப்பதாக வரலாற்று ஆசிரியர்களால் கொள்ளப் படு கின்றன.

மதுரை சுல்தானாய் விளங்கிய ஜியாசுதினுடன் இபின்

பட்டூடா பல ஊர்களுக்குச் சென்றபோது இந்துக் களுக்கு எதிரான அட்டூழியங்களை தாம் கண்டபடியே விவரித்து உள்ளார்.

''அடர்ந்த காடுகளின் ஊடே செல்லும்போது ஆங்கிருந்த கடவுள் நம்பிக்கை உடையோர் கைதிகளாக அழைத்து வரப்பட்டனர். அவ்வாறு அழைத்து வரப்பட்ட கைதிகள் அவரவர் மனைவி மற்றும் குழந்தைகளோடு இழுத்து வரப்பட்டனர். இவர்கள் அனைவரும் நான்கு திசை களிலும் முள் வேலிகளால் மூடப்பட்ட மைதானத்தில் அடைத்து வைக்கப்பட்டனர். மூன்றடி உயரத்திற்கு எழுப்பப் பட்ட உயரமான இடத்திலிருந்து அவர்கள்மீது தீப்பந்தங்கள் எறியப்பட்டன.

இவர்கள்மீது முகம்மதியர்கள் தங்கள் கையில் கிடைத்த தீப்பந்தங்களோடு முரட்டுப் போர் நடத்திடுவர். இவர்களுக்கு உதவியாக சுல்தானின் முகம்மதியப் படை வீரர்களும் கலந்து கொண்டு தாக்குதல்களைத் நடத்திடுவர். மறுநாள் காலை அவர்கள் அடைக்கப்பட்டிருந்த இடத்தில் இருந்து நான்கு வாசல்கள் வழியாக அவர்கள் வெளியேற்றப் படுவர். அப்போது அவர்கள் கையில் இருந்த நாணல் செடிகொண்டு கம்பங்களில் பிணைத்திடுவர். அவ்வாறு பிணைக்கப்பட்டவர்களுக்கு முன்பு அவருடைய மனைவி யர் வெட்டிச் சாய்க்கப்படுவர். சிறு குழந்தைகளை இரக்க மின்றிக் கொன்று அவர்களுடைய அன்னையின் மார் பகங்களில் தூக்கியெறிவார்கள். இவ்வாறான படுகொலை நடந்த பிறகு மீதமுள்ள இந்துக்கள் அந்த இடத்தில் கொண்டு வரப்பட்டு, மீண்டும் கொல்லப்படுவர்.''



தாம் கண்ட வேறொரு நிகழ்ச்சியை இபின் பட்டூடா கீழ்க்கண்டவாறு விவரித்துள்ளார்.

''ஒருநாள் சுல்தானோடு உரையாடிக் கொண்டிருந்த போது, சுல்தானுக்கு வலதுபுறம் Gaziயும், இடதுபுறம் நானும் நின்று கொண்டிருந்தேன். அப்போது கடவுள் நம்பிக்கை உள்ள ஒரு இந்துவும், அவனுடைய மனைவியும், ஏழு வயது நிரம்பியிருந்த அவர்களுடைய மகனும் சுல்தான் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டனர். அப்போது அந்த இந்துவினுடைய தலையைச் சீவிக் கீழே விழச் செய்திடுமாறு ஆணையிட்டு சைகை புரிந்தான் சுல்தான். அதன்பின் அவனுடைய மனைவியும், மகனும் இவ்வாறே கொல்லப் பட்டனர். இந்தக் காட்சியை என் கண் கொண்டு காண இயலாத நிலைக்குத் தள்ளப்பட்டேன்'' என்று அவர் குறிப் பிட்டுள்ளார்.

மற்றொரு நிகழ்ச்சியையும் தம்முடைய குறிப்பு களில் இபின் பட்டூடா குறிப்பிட்டுள்ளார்.

''நான் சுல்தானோடு அரசவையில் இருந்தபோது ஒரு இந்துவை பிணைக்கைதியாக அழைத்து வந்தனர். அவன் சில வார்த்தைகளை சுல்தான் முன்பு கூறலுற்றான். என்னால் அவற்றின் பொருளைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அந்த இந்துவை நோக்கி அரசவையில் இருந்த அனைவரும் தங்கள் உடைவாளை உருவிக் கொண்டு பாய்ந்தனர். அப்போது நான் இடத்தை விட்டு எழுந்து தொழுகைக்காகப் புறப்பட்டேன். நான் திரும்பி வந்தபோது இரத்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தான் அந்த இந்து.''

மதுரைச் சுல்தான்களுடைய ஆட்சிக்காலத்தில் மக்கள் மட்டுமில்லாமல் இந்துக்களுடைய ஆலயங்களும் பெரும்

அழிவிற்கு உட்படுத்தப்பட்டன. Amir Khusrau என்னும் யாத்திரிகர் மாலிகாஃபூரின் படையெடுப்பின் போது தமிழகத்தில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளை விவரித்து உள்ளார். (The Tarikh-i-alai of Amir Khusrau (Elliot and Dawson, Vol. III), p.91).

''ப்ரும்மபுரியில் (Brahma'spuri) விலை மதிப்பற்ற தங்கத்தாலான விக்ரஹம் இருந்தது. அந்தக் கோயிலைச் சுற்றிப் பல யானைகள் காவல் காத்து வந்தன. ஓர் இரவில் தாக்குதலை நடத்திய மாலிகாஃபூர் 250 யானைகளைப் பிடித்ததோடு மட்டுமல்லாமல், அந்தக் கோயிலைத் தரை மட்டமாக ஆக்கினான். கோயில் விதானத்தில் விலை மதிப்பற்ற நவரத்தினங்கள் பதிக்கப் பெற்றிருந்தன. அவற்றையெல்லாம் வெகு நிதானத்துடன் பெயர்த் தெடுத்தான் மாலிகாஃபூர். அந்தக் கோயிலில் பணிபுரிந்த அந்தணர்கள் மற்றும் பக்தர்களுடைய தலைகளைச் சீவி எறிந்தான் அவன்''.

''கருவறையிலிருந்த மஹாதேவருடைய லிங்க வடிவி லான சிலையை மாலிகாஃபூரால் பின்னப்படுத்த முடிய வில்லை. அந்தக் கோயிலில் இருந்த நாராயண னுடைய விக்ரஹத்தை இடித்துத் தள்ளினான். மற்றைய கடவுளர் விக்ர ஹங்களும் அடியோடு பெயர்த்து எடுக்கப்பட்டன. அவற்றை வெகு உயரத்தில் தூக்கியெறிந்து கீழே விழும் போது தெரித்து உடைவதைப் பார்த்து ரசித்தான் மாலி காஃபூர்''.

ப்ரஹ்மபுரியைப் போல மற்றைய திருக்கோயில் களும் பெருத்த நாசத்திற்கு உட்படுத்தப்பட்டன. இத்தகைய அழிவுகளைக் குறித்த கல்வெட்டுகள் பல தமிழ்நாட்டில் காணப்படுகின்றன.



திருவரங்கத்திற்கு அண்மையில் சமயபுரம் எனப் படும் கண்ணனூரில் அமைந்துள்ள கல்வெட்டு எண். *162* of 1936-37 போசளேச்வரர் கோயில் கோபுரத்தின் நுழை வாயிலில் அமைந்துள்ளது. ஹொய்சாள மன்னனான வீர சோமேச்வரனால் நிர்மாணிக்கப்பட்ட இந்தக் கோயில் முகம்மதியர்களால் இடிக்கப்பட்டு மசூதியாக மாற்றம் அடைந்தது. அதன்பின்பு வீரகம்பண்ணஉடையார் கி.பி. 1371ஆம் ஆண்டு தெற்கே படையெடுத்து மதுரை சுல்தான் களை வெற்றிகொண்டபோது இந்த இடத்தில் மீண்டும் போசளேச்வரர் கோயில் புனர் நிர்மாணம் செய்யப்பட்டது.

திருப்பத்தூரில் அமைந்துள்ள திருத்தளியாண்ட நாயனார் கோயிலில் முகம்மதியர்கள் முகாமிட்டிருந்தனர். அந்தக் கோயிலைவிட்டு அவர்கள் அகன்றபோது சூறையாடி யதோடுமட்டுமில்லாமல் சிலைகளையும் உடைத்துச் சென்ற னர். அதன் பிறகு நாட்டில் அமைதி நிலவியிருந்த போது காரைக்குடியைச் சார்ந்த விசாலயதேவன் என்பான் இந்தக் கோயிலைப் புனர்நிர்மாணம் செய்தான். மக்களைப் பண்பாட்டுச் சீரழிவிலிருந்து மீட்டான் என்று 1909ஆம் ஆண்டு படியெடுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று குறிப்பிடு கிறது.

திருவொற்றியூர் ஆதிபுரீச்வரர் கோயிலில் அமைந்து ள்ள சகலலோக சக்ரவர்த்தி ராஜநாராயண சம்புவராயர் காலத்திய கல்வெட்டு (A.R.E. 203, of 1912) ஒன்று படை யெடுத்து வந்த முகம்மதியர்கள் கோயில் சொத்தை சூறை யாடிச் சென்றதைக் குறிப்பிடுகிறது. இந்தக் கல்வெட்டில் முகம்மதியர்கள் படையெடுப்பிற்கு முன்பு கோயில் அதிகாரிகள் விலையுயர்ந்த ஆபரணங்கள் மற்றும் பொருட் களை பூமிக்கு அடியில் குழிதோண்டி புதைத்து வைத்தி

ருந்ததாகவும், படையெடுத்து வந்த முகம்மதியர்கள் அவ்வாறு புதைக்கப்பட்டிருந்த பெருஞ் செல்வத்தை அள்ளிச் சென்றனர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மதுரை சுல்தான்களுடைய ஆட்சி காலத்தில் இந்துக்களுக்குச் சொல்லவெண்ணாத கொடுமைகள் இழைக்கப்பட்டன. மக்கள் கூட்டம் கூட்டமாக தாங்கள் இருந்த ஊரைவிட்டு இடம் பெயர்ந்தனர். நாடெங்கும் வேலையில்லாத் திண்டாட்டமும், உணவுப் பஞ்சமும் தலை விரித்தாடியது. விவசாயம் சரிவர நடைபெறாததால் உணவுப் பொருள்கள் விளைவிக்கப்படவில்லை. நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட மண்டபங்களும் தூண்களும் மற்றைய கலைப் பொருள்களும் நாசமடைந்தன. (A.R.E. 276 & A.R.E. 64 of 1916.)

***முகம்மதியர்களால் கோயில்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் மதுராவிஜயத்தில் விவரித்துள்ளபடி:***

மதுரை சுல்தான்களுடைய ஆட்சி காலத்தில் தமிழ் நாட்டில் திருக்கோயில்களின் நிலைமை குறித்து மதுரா விஜயத்தில் கீழ்க்கண்ட குறிப்புகள் காணப்படுகின்றன.

''திருவரங்கத்தில் அரவணைமேல் அறிதுயில் கொள்ளும் அரங்கனது உறக்கம் கலையாதிருப்பதற்காக மேலிலிருந்து விழுந்த கற்களை ஆதிசேஷன் தன் தலைமேல் தாங்கி நின்றான். அந்தத் திருக்கோயிலில் மற்றைய கடவுளர் சிலைகளுக்கு ஏற்பட்ட ஆபத்தை சொற்களால் வர்ணித்திட இயலாது. திருக்கோயிலின் கதவுகளைப் பூச்சிகள் செல்லரித்துக் கொண்டிருந்தன. மஹா மண்டபங்களிலும் தோரண வாயில்களிலும் செடிகள் பச்சைக் கொடியை ஆட்டிக்



கொண்டு இருப்பதைப் போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியிருந்தன.

ஒரு காலத்தில் மிருதங்கத்தின் ஒலி பரவியிருந்த இடத்தில் குள்ள நரிகள் ஊளையிடும் ஓசை பரவியிருந்தது. திருவரங்கனுடைய திருப்பாதங்களை வருடிச் சென்ற காவிரியாறு தன்னுடைய போக்கை மாற்றிக் கொண்டு முகம்மதியர்கள் மேற்கொண்ட அழிவைப் பிரதிபலிப்பதுபோல பல கிளைகளாகப் பிரிந்துப் பாயுமிடங்களிலெல்லாம் வெள்ளப் பெருக்கெடுத்து விளை நிலங்களைப் பாழ்படுத்திச் சென்றது. நாட்டில் அழிவை ஏற்படுத்திய முகம்மதியர்களுக்கு எந்த வகையிலும் தான் சளைத்தவள் அல்ல என்று அறைகூவலிடுவது போல இருந்தது காவிரி நதியின் இந்தச் செயல்.

'மல்லைச் செல்வ வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல்வான்புகைபோய்★ திடவிசும்பில் அமரர் நாட்டை மறைக்கும்' பெருமை பெற்றிருந்த திருவரங்கம் திருவீதிகளில் மாமிசத்தை வாட்டுவதால் ஏற்படும் புகையும் படையெடுத்து வந்த முகம்மதியப் படைவீரர்கள் குடித்துக் கும்மாளமிடும் ஒலியுமே நிறைந்திருந்தன. *(மதுராவிஜயம் 8ஆவது காண்டத்தில் விவரித்துள்ளபடி)*

மதுரையைச் சூழ்ந்திருந்த பசுமை நிறைந்த காடுகள் அழிக்கப்பட்டன. நெடிதுயர்ந்த தென்னை மரங்கள் வெட்டப்பட்டு அவை இருந்த இடங்களில் நீண்ட இரும்புக் கம்பிகள் பொருத்தப்பட்டன. அவற்றில் இரக்கமின்றிக் கொல்லப்பட்ட மனிதர்களின் தலைகள் பொருத்தப்பட்டிருந்தன. *(இபின் பட்டூடாவின் நாட்குறிப்புகளிலும் இந்தச் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.)* நெடுஞ்சாலைகளில்

அமைந்திருந்த கிராமக் குடியிருப்புகளில் ஒலித்துக் கொண்டிருந்த நடன மங்கையரின் சிலம்பின் ஒலி மறைந்து, காதும் மூக்கும் அறுக்கப்பட்டு அந்தணர்களின் அவலக்குரல் ஒலித்துக் கொண்டிருந்தது.

தரையில் இழுக்கப்பட்டு வந்து இரும்புக் கூண்டுகளில் அடைத்து வைக்கப்பட்டபோது அவர்களிட்ட ஓலக்குரல் நெடுஞ்சாலை முழுவதிலும் ஒலித்துக் கொண்டிருந்தது. ஊர்களின் நுழைவில் அமைந்திருந்த தோரண வாயில்களில் இருந்த சிற்பங்கள் ஒரு காலத்தில் பட்டாடை தரித்திருந்தன. ஆனால் முகம்மதியரின் ஆட்சியின்போது அவைகள்மீது சிலந்தியின் வலைகள் பின்னப்பட்டிருந்தன. அரண்மனையில் அந்தணர்களைக் குளிர்ந்த மணம் மிக்க சந்தனத்தை அளித்து வரவேற்ற நிலை மாறி, அரண்மனையெங்கும் துன்புறுத்தப்பட்ட அந்தணர்களின் கண்ணீர்த் துளிகளே வெள்ளமிட்டுக் கொண்டிருந்தன.

அழகான மங்கையர் தாமிரபரணி ஆற்றில் குளித்திடும் போது பெருகி ஓடிய நீரில் அவர்கள் மேனியிலிருந்து கரைந்து வந்த சந்தனம் எங்கும் நறுமணம் பரப்பிக் கொண்டு சென்ற நிலைமாறி, முகம்மதியர்களால் வெட்டப்பட்ட பசு மாட்டின் சிவந்த குருதி நீரில் கலந்து அந்த நீரின் வெண்மை நிறத்தை சிவப்பு நிறமாக்கிக் கொண்டிருந்தது. அழிந்து போன காடுகளில் குடிகொண்டிருந்த ஆந்தைகளின் ஒலியை விட முகம்மதியர்களுடைய இல்லங்களில் கூண்டிலே இருந்த கிளிகள் பேசிய பாரசீக மொழியின் ஒலியே எங்கும் நிறைந்திருந்தது''.

''வ்யாக்ரபுரி என்று அழைக்கப்பட்டு வந்த சிதம்பரத்தில் மனிதர்களுடைய குடியிருப்புகள் அழிந்து பட்டதால் காடுகள் மண்டி ஜீவனுடைய தெருவெங்கும் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. (வ்யாக்ரம் என்றால் ஸ்ம்ஸ்க்ருத மொழியில் புலியைக் குறிக்கும்.) உரிய காலங்களில் மழை பொழியாததால் பூமி தன் வளப்பத்தை இழந்தது. அதனால் விளை பொருட்கள் பயிரிடப்படவில்லை. முகம்மதியருடைய படையெடுப்பினால் கொல்லப்பட்டவர்கள் பலர், எஞ்சியிருந்த சிலரையும் யமன் வாரிக் கொண்டு போனான். கலியரசனுடைய ஆட்சி எங்கும் பரவியிருந்தது. தர்மத்தின் குரல்வளை நெறிக்கப்பட்டது. அடக்குமுறை அவிழ்த்துவிடப்பட்டது. மக்கள் ஏன் இன்னும் உயிர் வாழ்கின்றோம் என்று தமக்குத் தாமே நொந்துகொண்டனர். நாட்டின் இத்தகைய சூழ்நிலை மக்கள் மனத்தை நெருடியது''.

முகம்மதியர்களுடைய படையெடுப்பிற்கு முன்பும் தென்தமிழ்நாட்டில் ஓயாது போர்கள் நிகழ்ந்து கொண்டிரு ந்தன. அவ்வப்போது மக்கள் துன்பத்தை எதிர்கொண்டிருந்த போதிலும் மன்னர்களால் திருக்கோயில்களுக்கும், அந்தணர்களுக்கும் எந்தவித ஆபத்தும் நேரவில்லை. மாறாக வெற்றி கொண்ட மன்னர்கள் திருக்கோயிலுக்குக் காணிக்கைகள் பலவற்றைச் செலுத்தி வந்தனர். ஆனால் முகம்மதியர்களுடைய படையெடுப்பின் விளைவாகத் திருக்கோயில்களுடைய சொத்துக்கள் சூறையாடப்பட்டன. இந்துக்களால் புனிதமாகக் கருதப்பட்ட விக்ரஹங்கள் உடைத்து நொறுக்கப்பட்டன. அந்தணர்கள் துன்புறுத்தப்பட்டதோடு மட்டும் அல்லாமல் அவர்களில் பலர் கொல்லப்பட்டனர். நாடெங்கும் மக்கள் சொல்லொணாத் துன்பத்தினை எதிர் கொண்டிருந்தனர்.

இந்து சமயத்தைச் சார்ந்த மன்னர்கள் மீண்டும் தங்களு

டைய ஆட்சியை நிலைநாட்டி அமைதியைத் தோற்றுவிக்க எழுச்சியடைவார்களா? என்று மக்கள் எதிர் நோக்கியிருந்தனர்.

முகம்மதியர்களுடைய ஆட்சிக்கு எதிரான குரலை முதன் முதலில் எழுப்பியவன் ஹொய்சாள மன்னனான மூன்றாம் வீரவல்லாளன் ஆவான். ஹொய்சாளர்களுடைய தலைநகரமாகிய துவார சமுத்திரத்திலிருந்து தன்னுடைய இருப்பிடத்தை திருவண்ணாமலைக்கு மாற்றிக் கொண்டான் இந்த மன்னன். (கி.பி. 1328-1341) மதுரை சுல்தான்கள்மீது படையெடுப்பதற்கான தக்கதொரு தருணத்தை நோக்கி இருந்தான் இம்மன்னன். (E.C. Vol. XI. Db. 14; Dv. 60. v.Ak. 66. (Also p.71 of Vol IX) Also Sewell: Historical Inscriptions of South India. p. 183) Add.....

கி.பி. 1341ஆம் ஆண்டு கண்ணனூர் குப்பம் என்னும் ஊரில் மதுரைச் சுல்தானானுடன் போர் நிகழ்ந்தது. வீரவல்லாளனுடைய படையில் ஒரு லட்சம், காலாட்படை வீரர்களும், 20 ஆயிரம் முகம்மதிய வீரர்களும், அடிமைகள் பலரும் இருந்தனர். மதுரை சுல்தானுடைய படையில் ஆறாயிரம் படை வீரர்களே இருந்தனர். தற்போதைய குப்பம் என்னும் இடத்தில் மதுரை சுல்தான்கள்மீது படையெடுத்த வீரவல்லாளன் 6 மாத காலம் முற்றுகையிட்டிருந்தான். இதனால் முகம்மதியப் படை வீரர்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் 14 நாட்களுக்கு மட்டுமே போது மானதாய் இருந்த நிலை உருவானது. இந்த நிலையில் முகம்மதிய படைவீரர்கள் சமாதானத்தைக் கோரினர். அதற்கு உடன்பட்ட மூன்றாம் வீரவல்லாளன் குப்பம் நகரத்தின் மையப் பகுதியில் அவனுடைய படைவீரர்களுக்கு இடம் அளித்திட வேண்டும் என்ற நிபந்தனையை விதித்தான்.



அவ்வாறு நகரத்தின் மையப் பகுதியில் வீரவல்லாளனுடைய படைவீரர்கள் தங்கியிருக்கும்போது தங்களால் எந்தப் பாது காப்பும் அளிக்க இயலாது என்று சுல்தானின் படைவீரர்கள் கூறினர். அந்த எச்சரிக்கையைப் பொருட்படுத்தாது வீர வல்லாளன் குப்பம் நகரின் மையப்பகுதியில் படைவீட்டை அமைத்துக்கொண்டான். அப்போது நிகழ்ந்த வஞ்சகப் போரில் வீரவல்லாளன் பிணைக் கைதியாகப் பிடிபட்டான்.

வீரவல்லாளனைக் கொன்ற மதுரை சுல்தான் அவனுடைய இறந்த உடலில் வைக்கோலைத் திணித்து மதுரையில் உள்ள தன்னுடைய அரண்மனையின் வாயிலில் தொங்கவிட்டான். இத்தகைய சோரமான காட்சியை மக்கள் கண்டதால் மதுரையின் கிழக்குப் பகுதிக்கு கோரிப்பாளையம் என்ற பெயர் அமைந்துள்ளது. இவ்வாறு மூன்றாம் வீரவல்லாளன் வஞ்சகமாகக் கொல்லப்பட்ட நிகழ்ச்சிக்குப் பிறகு சுமார் 30 ஆண்டு களுக்கு மதுரை சுல்தான்களை வெற்றி கொள்ளும் அளவிற்குப் பலம் படைத்த மன்னர்கள் இந்தியாவின் தென் பகுதியில் தோன்றவில்லை. கி.பி. 1336ஆம் ஆண்டு ஹரிஹரர் புக்கர் ஆகிய இருவர்களால் விஜயநகர சாம்ராஜ்யம் தோற்றுவிக்கப்பட்டது.

(ஹரிஹரரும் புக்கரும் விஜயநகர சாம்ராஜ்யத்தைத் தோற்றுவிக்க முனைந்ததே ஒரு வியப்பான செய்தியாகும்.

தேவகிரியை ஆண்டு வந்த யாதவ மன்னனான ராமதேவனின் ஆட்சிக்குட்பட்ட சிற்றரசர்களாக மும்முடிச் சிங்கன், அவன் மகன் கம்பிலா ஆகியோர் கம்பிலி நாட்டை ஆண்டு வந்தனர். தேவகிரியை டில்லி சுல்தான்கள் தங்கள் வசப்படுத்திய பிறகு, கம்பிலி நாடானது விரிவு படுத்தப் பட்டது. ஹொய்சாள மன்னனான மூன்றாம் வீரவல்லாள

தேவன், காகடீய மன்னனான பிரதாப ருத்ரன், டில்லி சுல்தானான முகம்மது பின் துக்ளக் ஆகியோரோடு மும்மிடிச் சிங்கனின் மகனான கம்பிலா போரிட்டுக் கொண்டிருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருந்தது. முடிவில் முகம்மதுபின் துக்ளக்கின் படையெடுப்பில் கம்பிலாவும் அவனது மகனும் உயிர் துறந்தனர். கி.பி. 1326/27இல் டில்லி சுல்தானுடைய ஆட்சிப் பகுதியின் ஒரு பகுதியாகக் கம்பிலி கைக்கொள்ளப் பட்டது. கம்பிலா நாட்டின் பொக்கிஷக் காவலர்களான ஹரிஹரர், புக்கர் ஆகிய இருவரும் முகம்மதுபின் துக்ளக்கால் கைது செய்யப்பட்டு டில்லிக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். **அங்கே அவர்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவினர்.** கி.பி. 1329ஆம் ஆண்டிற்குப் பிறகு முகம்மது பின் துக்ளக் வெற்றிகொண்ட இடங்களில் அவனது பிரதிநிதியாக செயல்பட்டு வந்த சுல்தான்களால், ஆட்சிக்கு எதிராக நடைபெற்று வந்த கலகங்களை ஒடுக்க முடியவில்லை.

கம்பிலியின் மேற்பார்வையாளராக இருந்த சுல்தான், அரசிற்கு எதிரான உள்நாட்டுக் கலகத்தை ஒடுக்க இயலாததால் முகம்மது பின்துக்ளக்கின் உதவியை நாடினான். உள்நாட்டுக் கலகங்களை அடக்கி அமைதியை ஏற்படுத்து வதற்காக முகம்மதியர்களாக மதமாற்றம் செய்யப் பெற்ற ஹரிஹரர், புக்கர் ஆகிய இருவரையும் முகம்மது பின்துக்ளக், கம்பிலிக்கு அனுப்பி வைத்தான். கம்பிலி சென்றடைந்த ஹரிஹரரும் புக்கரும் அமைதியை நிலைநாட்டியதோடு மட்டுமல்லாமல் தாங்கள் தழுவியிருந்த இஸ்லாமிய மதத்தைத் துறந்தார்கள்.

அதன்வழி முகம்மதுபின் துக்ளக்கோடு கொண்டிருந்த உறவினையும் உதறித் தள்ளினார்கள். கம்பிலியிலிருந்து



ஹரிஹரரும் புக்கரும் ''கூ$_3$ட்டி'' '(Gooty)யையும் அதனைச் சுற்றியப் பகுதிகளையும் இணைத்துக் கொண்டனர். இவர் களுக்கு ச்ருங்கேரி மடாதிபதியான வித்யாரண்யர் துணை நின்றார். ஹரிஹரரும் புக்கரும் தங்களுடைய ஆசானுடைய ஆணைப்படி கி.பி. 1336ஆம் ஆண்டு விஜயநகர சாம்ராஜ் யத்தை துங்கபத்ரை நதிக்கரையில் அனகொண்டா என்னும் இடத்தில் ஸ்தாபித்தார்கள். விஜய நகரப் பேரரசைத் தோற்று வித்த சங்கமகுல மன்னனான முதலாம் ஹரிஹரர் கி.பி. 1336 முதல் கி.பி. 1357வரை தம்முடைய இளைய சகோதரரான முதலாம் புக்கரோடு அரசாண்டார். அவர் இறந்த பிறகு முதலாம் புக்கர் கி.பி. 1357 தொடங்கி கி.பி. 1377வரை ஆண்டு வந்தார். இவருடைய காலத்தில்தான் முதலாம் புக்கருடைய மகனான குமார கம்பண்ணன், செஞ்சி மன்ன னான கோபணார்யன் மற்று முள்ள பிரதானிகளுடைய துணை கொண்டு மதுரை சுல்தானைப் போரிலே வென்றார்.

## உலூக்கான் படையெடுப்பிற்குப் பிறகு மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சுல்தான்களும், அவர்களுடைய கொடுங் கோல் ஆட்சியும்.

முகமதுபின் துக்ளக்கின் படையெடுப்பிற்கு பின் இந்தியாவின் தெற்குப்பகுதியில் குறிப்பாகத் தொண்டை மண்டலத்தின் சில பகுதிகள், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம் ஆகிய பகுதிகளில் மதுரை சுல்தான்களுடைய ஆட்சி நடைபெற்று வந்தது. இபின் பட்டூடா என்னும் யாத்ரிகர் மதுரை சுல்தானாக ஆட்சிபுரிந்த ஜலாலுதீனுடைய பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். [இவனுடைய ஆட்சிகாலம் கி.பி.1334-1339] ஜலாலுதீனுடைய மகனான இப்ராஹிமுடைய நெருங்கிய நண்பராக இவர் இருந்து வந்தார்.

தெற்கே படையெடுத்துப் பெரும் செல்வத்தை கொள்ளைக் கொண்ட உலுக்கான் டெல்லி சென்றடைந்து முகம்மது பின் துக்ளக் என்ற பெயரில் முடிசூடிக்கொண்டான். தான் வெற்றி கொண்ட தெற்குப் பகுதியை ஆள்வதற்காக ஜலாலுதின் ஹாஸன்ஷா என்பவனை மதுரை ஆளுநராக (Governor) நியமித்தான். சுமார் பதினைந்து ஆண்டுகள் முகம்மதுபின் துக்ளக்கிற்கு அடங்கி ஆளுநராக பணிபுரிந்து வந்த ஜலாலுதின்ஷா அதன்பிறகு தன்னை மதுரைக்கு மன்னனாக பிரகடனப்படுத்திக் கொண்டான்.



தன்னுடைய பெயரிலே நாணயங்கள் வெளியிடவும் செய்தான். முகம்மதுபின் துக்ளக்கின் நம்பிக்கைக்குரிய படைத் தலைவனைப் பதவியைவிட்டு நீக்கினான். வரலாற்று ஆசிரியர்கள் இவனை ஜியாவுதீன் பரானி அல்லது ஸைய்யது ஹாஸன் என்று அழைக்கின்றனர். மதுரை சுல்தானாகத் தன்னை அறிவித்துக் கொண்ட ஜலாலுதின் ஷாவினை பதவியை விட்டு அகற்றுவ தற்காக முகம்மதுபின்துக்ளக்கால் அனுப்பப்பட்ட படை பெருவாரியாகப் பரவியிருந்த தொற்று நோய் பற்றிக் கொண்டதால் மதுரைக்குச் செல்ல இயலவில்லை. ஜலாலுதின் ஷா மதுரைச் சுல்தானாக கி.பி.1340 வரை ஆண்டு வந்தான். மதுரை சுல்தானின் அரசாங்க அதிகாரிகளில் ஒருவனான அலாவுதீன் உடான்ஜி என்பவனால் ஜலாலுதின் ஷா கொல்லப்பட்டான். இவ்வாறு முடிசூடிக் கொண்ட அலாவுதீன் உடான்ஜி கடவுள் நம்பிக்கை அற்றவர் களோடு (Infidels) நடந்த போரில் வஞ்சக மாகக் கொல்லப் பட்டான்.



அவனுக்குப் பிறகு மதுரை சுல்தானாக அரியணையில் அமர்ந்த அலாவுதீன் உடான்ஜியின் மாப்பிள்ளையான குதுப்புதீன் நாற்பதே நாட்கள் அரசாண்டான். அவனும் கொல்லப்பட்டான். அதன்பிறகு ஜியாஸுதீன் தமகானிஷா என்ற குதிரைப்படை வீரன் (Trooper) மதுரை சுல்தானாக முடிசூடிக் கொண்டான். இவன் சுல்தான் ஜலாலுதின் ஹசன்ஷாவினுடைய [மதுரை சுல்தான் வம்சத்தைத் தோற்றுவித்தவன்] மாப்பிள்ளையாவான்.

இவன் காலத்தில்தான் மூரிஷ் யாத்திரிகரான இபின் படூடா தமிழ்நாட்டிற்கு வருகை தந்தார். ஜியாதுதீன் தமகானிஷா ஒரு மனித உருக்கொண்ட பேய் (Fiend in Human form). இவனது ஆட்சியை ஒரு கொடுங்கோலனுடைய ஆட்சிக்கு ஒப்பிட்டுட்டுள்ளார் இபின் பட்டூடா. ஈவு இரக்கமற்ற, கொள்கைப் பிடிப்பற்ற, துரோகம் இழைத்தலையே குறிக் கோளாகக் கொண்ட ஆட்சியாக இவனது ஆட்சி சித்தரிக்கப் படுகிறது. இந்த மன்னன்தான் வீரவல்லாள தேவனைக் கொன்று

அவனுடைய உடலை மதுரை அரண்மனைச் சுவற்றில் காட்சிப் பொருளாக வைத்தி ருந்தான். கி.பி.1342-இல் மதுரையில் பரவியிருந்த தொற்று நோய்க்கு இவன் பலியானான்.

ஜியாதுதீன் தமகானிஷாவிற்குப்பிறகு அவனுடைய மருமகனான நஸ்ருதீன் [கி.பி.1343-1352] மதுரை சுல்தானாக முடிசூடிக்கொண்டான். டெல்லி அரண்மனையில் ஒரு சாதாரண வேலைக்காரனான இவன் தன்னுடைய மாமனான ஜியாதுதீன் தமகானிஷா [1341-1343] இறந்தவுடன் மதுரை சுல்தானாக ஆனான். மூன்றாம் வீரவல்லாள தேவனிடமிருந்து பெற்ற பெரும் செல்வத்தை படைத்தலைவர்களுக்கு கையூட்டாகத் தந்து சுல்தானாக முடிசூடிக் கொண்டான். இவனுடைய ஆட்சிக் காலத்தில் மூரிஷ் யாத்திரிகனான இபின் படூடா மாலத்தீவுகள், சுமத்ரா, ஜாவா வழியாக சீன நாட்டிற்கு பிரயாணமாகச் சென்றான்.

நஸ்ருதீனுக்குப் பிறகு குர்பத்ஹஸன் காங்கு என்பான் மதுரை சுல்தானாக ஆட்சிபுரிந்தான் [கி.பி. 1353 - 71]. இவன் காலத்தில்தான் விஜயநகர சாம்ராஜ்ய படைத்தலைவனான கம்பண்ண உடையார் மதுரையின்மேல் படையெடுத்து அவனை ஆட்சியில் இருந்து அகற்றினார். வீரகம்பண்ண ருடைய மனைவி கங்காதேவி எழுதிய மதுராவிஜயம் என்ற நூலில் சிக்கந்தர்ஷா அப்போது நடந்த போரில் கொல்லப் பட்டதாகக் குறிப்பிப்பட்டிருந்த போதிலும், ஏதோ ஒரு சிறுபகுதியை அவன் கி.பி.1378 வரையிலும் ஆண்டு வந்ததை அவன் வெளியிட்ட நாணயங்கள் வழி அறிகிறோம்.]

கி.பி.1336ஆம் ஆண்டு தொடங்கி, மதுரை சுல்தான் களை வெற்றி கொள்வதற்கான முயற்சிகளை புக்கரும் அவனுடைய படைத் தலைவர்களும் ஈடுபட்டுவந்தனர்.



1352ஆம் ஆண்டு சவண்ணஉடையார் தெற்கே படை யெடுத்து தஞ்சை மாவட்டத்தில் செந்தலை என்னும் ஊரில் ஏற்படுத்தி வைக்கப்பட்ட கல்வெட்டு செய்திகளை முன்னமே குறிப்பிட்டுள்ளோம். வீரகம்பண்ண உடையார் திருவண்ணாமலையில் தங்கியிருந்து தம்முடைய படை பலத்தைப் பெருக்கி யதையும், வீரசம்புவரையர்களை வெற்றிகொண்டதையும் முன்பகுதிகளில் குறிப்பிட்டு ள்ளோம். கி.பி.1359ஆம் ஆண்டு தொண்டை மண்டலத்தில் தம்முடைய ஆட்சியை நிலை நாட்டிக் காஞ்சிமாநகரில் படைவீட்டில் தங்கியிருந்த வீரகம்பண்ண உடையார் படைகளைத் திரட்டும் பணியில் 10 ஆண்டுகள் ஈடுபட்டிருந்தார்.

மதுரை சுல்தானாக குர்பத் ஹஸன் காங்கு என்பான் ஆட்சிபுரிந்துவந்தான். அவன் வடக்கே தௌலதாபாத் என்னும் இடத்தில் பிறந்து வளர்ந்தவன். தென் தமிழ்நாட்டில் அமைந்துள்ள கோட்டைகள், மக்களுடைய பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை பற்றிய முழு அறிவு பெறாதவன். நஸ்ருதினு டைய மரணத்திற்குப் பிறகு (1343 - 1352) மதுரைப் பகுதியை வல்லமை படைத்த மன்னர்கள் ஆளவில்லை. டெல்லி யிலிருந்து உதவியை எதிர் பார்ப்ப தற்கும் அவர்களால் இயலவில்லை.

பாமினி சுல்தான்களுக்கும் விஜயநகர மன்னர் களுக்கும் ஓயாது போர் நிகழ்ந்துகொண்டே இருந்தது. இதனால் மதுரை சுல்தான் பாமினி சுல்தானோடு நட்புறவு வேண்டி நின்றார். அவர்களுடன் சேர்ந்து விஜயநகர மன்னர் களுடைய படைபலத்தை அழித்திட வேண்டும் என்பதே மதுரை சுல்தான்களுடைய எண்ணமாக இருந்தது.

மதுரையை ஆண்ட குர்பத் ஹஸன் பீஜாப்பூர் சுல்தானான ஹஸன் கங்குவின் உறவினன் ஆவான்.

ஆயினும் பீஜாப்பூர் சுல்தானோடு சேர்ந்து விஜயநகர மன்னர்களின் ஆட்சியை ஒடுக்க வேண்டும் என்ற மதுரை சுல்தானுடைய எண்ணம் ஈடேறவில்லை. மதுரையை ஆண்ட குர்பத் மக்களுடைய நன்மதிப்பைப் பெறவில்லை. மாறாக தன்னுடைய முட்டாள் தனமான மிகவும் மோசமான செயல்களால் மக்களுடைய எதிர்ப்பை சம்பாதித்துக் கொண்டான். அவனுடைய அரசவையில் குற்றவாளிகளாக கொண்டு வரப்படும் பெண்களினுடைய ஆபரணங்கள் மீது அவயவங்கள் மீதும் எவ்வித கூச்சமும் இன்றி தன் கைகளை வைத்து அந்தப் புரத்திற்கு அழைத்துச் செல்வான். அவனுடைய மிக மோசமான செயல்களில் இதுவும் ஒன்றாகும். இவனுடைய அநாகரீகமான செயல்களைப் பற்றி வரலாற்று ஆசிரியரான Shams-Siraj-Afif தம்முடைய Tarikh-i-Firoz Shahi என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இந்த நூலை ஆங்கிலத்தில் Elliot and Dowsan ஆகிய இருவரும் மொழி பெயர்த்துள்ளனர்.

இத்தகையதொரு சூழ்நிலையில் வீர கம்பண்ண உடையார் கி.பி.1371ஆம் ஆண்டிற்கு முன்பாக மதுரையை நோக்கி தமது பெரும் படை வீரர்களுடன் புறப்பட்டார். இவருடைய படையில் போர்களத்திலே பழக்கப்பட்ட யானைகள் பெரும் அளவில் இருந்தன. (மதுராவிஜயம் 8ஆவது காண்டத்தில் இது விவரிக்கப்பட்டுள்ளது.) இவருடைய படையில் பெருமளவில் யானைகள் இருந்தமையை Tarikh-i-Firoz Shahi என்ற நூல் குறிப்பிடுகிறது.

''மதுரை சுல்தான்களுடைய படையிலும் போரிலே பழக்கப்பட்ட யானைகள் இருந்தன. இந்த இரண்டு படைகளும் மோதிக்கொண்டபோது வெற்றி யாருக்கென்று எளிதில் நிர்ணயிக்க இயலவில்லை. இந்தப் போர் பல நாட்கள் நடந்தன. மதுரை சுல்தான்களுடைய போர்க்கொடியில் காக்கைச் சின்னம் இடம் பெற்றிருந்தது. கருமையான இந்த காக்கை, கலிபுருஷனுடைய உருவம்போல் தோன்றியது. இந்தக் கலிபுருஷனை வீர கம்பணனுடைய படைவீரர்கள் வெட்டிச் சாய்த்தனர். வீரகம்பண்ணர் தம்முடைய கரத்தில் ஏந்திய வீர வாளைக் கொண்டு எதிரிகளுடைய தலையை சீவினார். அவருடைய கையிலிருந்த வாள் யமனுடைய அவதாரம் போல் தோன்றியது''.

''முகம்மதியர்களுடைய உடலிலிருந்து பெருகிப் பாயும் குறுதியைக் குடித்து மகிழும் பாம்புபோல நெளிந்து சுழன்றது வீரகம்பண்ணருடைய வீரவாள். குதிரைமீது அங்கு மிங்கும் வாளைச் சுழற்றிச் சென்ற வீரகம்பண்ணரால் முகம்மதியப் படைவீரர்களுடைய தலைகள் உருண்டன. வணக்கம் என்பதே அறியாத மதுரை சுல்தானுடைய தலை வீர கம்பண்ணருடைய வாளால் சீவப்பட்டு தரையில் உருண்டோடியது. தலை சீவப்பட்ட மதுரை சுல்தானுடைய ஒரு கையில் வாள் உறுதியுடனும் மற்றொரு கை குதிரையை லாவகமாகப் பிடித்துக்கொண்டிருப்பதையும் கண்ட வீர கம்பண்ண உடையார் திகைப்புற்றார்''.

மதுராவிஜயம் மற்றும் ராமாப்யுதயம் ஆகிய இரு நூல்களும் போர்க்களத்தில் மதுரை சுல்தானுடைய மரணத்தை விவரித்துக் கூறுகின்றன. மதுராவிஜயத்தில் வீரகம்பண்ண ருடைய வீரவாளால் மதுரை சுல்தான் கொல்லப்பட்டதாக குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் ராமாப்யுதயத்தில் சாளுவ மங்குவினுடைய வாளால் மதுரை

சுல்தான் கொல்லப் பட்டதாகக் காணப்படுகிறது.

*(இந்த சாளுவ மங்குவை குண்டு சாளுவையர் என்று கோயிலொழுகு குறிப்பிடுகிறது. அணியரங்கன் திருமுற்றத்தில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் ஏற்படுத்தி வைக்கப் பட்ட தங்கத்தாலான கொடிக்கம்பமும் கொடியேற்றத்தின்போது அழகியமணவாளன் எழுந்தருளும் தங்கத்தேரும், மாலிகாஃபூரினு டைய படையெடுப்பின்போது கொள்ளையடிக்கப்பட்டன. கி.பி.1371ஆம் ஆண்டு அழகியமணவாளன் ஆஸ்தானத்திற்கு மீண்டும் எழுந்தருளியபோதிலும், கொடிக்கம்பம் மற்றும் பலிபீடம் ஆகியன இல்லாமல் இருந்தன. வீரகம்பண்ண உடையாருடன் திருவரங்கத்திற்கு வருகை தந்த சாளுவமங்கு பூர்வம் அணியரங்கன் திருமுற்றத்திலே பாண்டியன் கைங்கர்யமான பொன்னின் திருக்கொடித்தட்டு துலுக்கனழிக்கையில், வெண்கல வார்ப்பாகத் திருக்கொடித்தட்டு பண்ணி நாட்டுவித்தார்; சங்கம குலத்திற்குப் பிறகு விஜயநகர மன்னனாக முடி சூட்டிக் கொண்ட சாளுவ நரசிம்மன் சாளுவ மங்குவின் குலத் தோன்றலாகும்.)*

"அண்டை நாட்டு மன்னனான புக்கர் என்பார் தலை மையில் காலாட் படைவீரர்களும், யானைப் படையும் மதுரையை நோக்கிப் படையெத்தனர். போரின் முடிவில் குர்பக் ஹஸன் கங்குவை சிறை பிடித்தனர். மதுரையிலிருந்த அனைத்து வீரர்களும் அந்தப்புரத்தில் இருந்த பெண்களும், புக்கருடைய படைவீரர்களால் துன்புறுத்தப்பட்டனர்" என்று Shams-Siraj-Afif தம்முடைய நூலில் போர் முடிவினை வேறு விதமாகத் தெரிவித்துள்ளார்.

ஜைமினி பாரதத்தில் சாளுவ மங்கு மதுரைக் கோட்டை வாசல்களை யானைப் படைகொண்டு தகர்த் தெரிந்தார் என்று குறிப்பிடுகிறது. மதுராவிஜயத்தின் கடைசி வரிகளில்



வீரகம்பண்ண உடையார் முகம்மதியப் படை வீரர்கள் மற்றும் அவர்தம் பெண்டிருக்கு தக்க பாதுகாப்பு அளிப்பதாக உறுதி பூண்டார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. போரில் தோற்ற போதிலும் முகம்மதியர்கள் மீண்டும் மதுரையில் தம்முடைய ஆட்சியை நிலைநிறுத்த விரும்பினர். அதற்காக பாமினி சுல்தானுடைய ப்ரதிநிதி மதுரைக்கு அனுப்பி வைக்கப்பட்டார். அவருடைய முயற்சிகள் தோல்வி யுற்றன.

டில்லியை ஆண்டுவந்த Firoz Shahவிடம் மதுரை முகம்மதியர்கள் சென்று முறையிட்டனர். தங்களுடைய பழையகால நடவடிக்கையை மன்னித்து அபயம் அளித்திட வேண்டினர். 'Firoz Shah' டெல்லி பாதுஷாவாக பதவி யேற்றவுடன் தன்னுடைய ஆட்சி மேலாண்மையை ஏற்றுக் கொண்டு பாதுஷாவின் ஆளுமைக்கு உட்பட்ட பகுதியாக மதுரையை அறிவித்திடுமாறு ஓலை அனுப்பினான். ஆனால் குர்பத் ஹஸன் கங்குவை மதுரை சுல்தானாகி டெல்லி பாதுஷாவின் மேலாண்மையை ஏற்றுக்கொள்ளவில்லை. அவருடைய செயலை மன்னிப்பதாகக் கூறிய பாதுஷா மதுரையில் மீண்டும் முகம்மதியர்களுடைய ஆட்சியை நிலைநாட்டுவதில் எந்த ஆர்வமும் கொள்ளவில்லை" என்று Tarikh-i-Firoz Shahi தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

மதுரையில் வேரூன்றியிருந்த சுல்தான்களின் ஆட்சி கி.பி.1371ஆம் ஆண்டு வீரகம்பண்ணருடைய படையெடுப் பால் அகற்றப்பட்டது. Father Heras *தம்முடைய* The Aravidu Dynasty என்னும் நூலில் மதுரையில் சுல்தான்களை வெற்றிகொண்டபிறகு பாண்டிய வம்சத்தைச் சார்ந்த சோமசேகர பாண்டியன் மதுரை மன்னனாக முடிசூட்டப் பட்டான் என்று குறிப்பிட்டுள்ளார். ஆயினும் இதற்கான வலுவான வரலாற்று ஆதாரங்கள் கிடைக்க வில்லை.

வீரகம்பண்ண உடையாரின் படைத் தலைவர்களில் ஒருவர் கோபணார்யன்; செஞ்சிப் பகுதி இவர் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வந்தது. இவர் அந்தணர் குலத்தைச் சார்ந்தவர். திருவரங்கம் பெரியகோயில் இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள கல்வெட்டு (எண்.286, A.R.E.No.55 of 1892) அழகியமணவாளன் ஆஸ்தானம் திரும்பிவந்த வைபவத்தைத் தெரிவிக்கிறது. இந்தக் கல்வெட்டின்படி அழகியமணவாளன் ஆஸ்தானம் திரும்பிய ஆண்டு கி.பி.1371, ஜூன் மாதம் (பரீதாபி வைகாசி 17ம் நாள்) என்று அறுதியிடப்பட்டுள்ளது.

*ஸ்வஸ்திஸ்ரீ: பந்துப்ரியே ஶகாப்தே* (1293)

*ஆநீயாநில ஶ்ருங்கத் யுதி ரசித ஜகத்*
*ரஞ்ஜநாதஞ்ஜநாத்ரே:*
*செஞ்ச்யாம் ஆராத்ய கஞ்சித் ஸமயமத*
*நிஹத்யோத்தநுஷ்காந் துலுஷ்காந் ।*
*லக்ஷ்மீக்ஷ்மாப்யாம் உபாப்யாம்*
*ஸஹநிஜநகரே ஸ்தாபயந் ரங்கநாதம்*
*ஸம்யக்வர்யாம் ஸபர்யாம் புநரக்ருத*
*யஶோதர்ப்பணோ கோபணார்ய: ॥*

(புகழ்நிறைந்த கோபணார்யர் கறுத்த கொடுமுடிகளின் ஒளியாலே உலகை ஈர்க்கும் திருமலையிலிருந்து ரங்கநாதனை எழுந்தருளப் பண்ணி வந்து தன் தலைநகரமான செஞ்சியில் சிறிது காலம் ஆராதித்து, ஆயுதமேந்திய துலுக்கர்களை அழித்து ஸ்ரீதேவி பூதேவிகளாகிய உபய நாய்ச்சிமார்களோடு கூடத் தம்முடைய திருவரங்கப் பெருநகரில் ப்ரதிஷ்டை செய்து, சிறந்த திருவாராதனங்களை மறுபடி தொடங்கி வைத்தார்.)



விஶ்வேஶம் ரங்கராஜம் வ்ருஷபகிரிதடாத்
கோபணோ ஹோணிதேவ:
நீத்வா ஸ்வாம் ராஜதாநீம் நிஜபலநிஹதோத்
ஸிக்த தௌலுஷ்க ஸைந்ய: ।
க்ருத்வா ஸ்ரீரங்கபூமிம் க்ருதயுகஸஹிதாம்
. . . . . . . . . . . . . . . . . . .
ஸம்ஸ்தாப்யாம் ஸரோஜோத்பவ
இவ குருதே ஸாதுசர்யாம் ஸபர்யாம் ॥

(புவிக்கரசனான கோபணன் உலகுக்கரசனான ரங்கராஜனை திருமலைத் தடத்திலிருந்து தன் தலைநகருக்கு எழுந்தருளச் செய்து தன் ஸேனையாலே துலுக்கர் ஸேனையை அடித்து விரட்டியவனாய் ஸ்ரீரங்க நகரை க்ருத யுகத்தில் பிரமனால் ஆராதிக்கப்பட்டபோது இருந்தது போல் ப்ரதிஷ்டை செய்து நல்ல திருவாராதனங்களைச் செய்வித்தான்.)

திருவரங்கம் கோயில் வரலாற்றை விவரித்திடும் கோயிலொழுகில் கோபணார்யனைப் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. கல்வெட்டு எண். A.R.E.52 of 1905இல் சாளுவ மங்குவின் உயர் அதிகாரியாக கோபணார்யன் குறிப்பிடப்படுகிறார்.

''மதுரையின்மீது படையெடுத்துச் செல்லும்போது திருக்கோயில்களை முகம்மதியர்களுடைய பிடியிலிருந்து விடுவித்த பிறகு அவற்றை புனர்நிர்மாணம் செய்யும் பொறுப்பு கோபணார்யனுக்கு அளிக்கப்பட்டதாகக் கொள்ளவேண்டும். வீரகம்பண்ண உடையாருடைய படையெடுப்பின் விளைவால் பரீதாபி ஆண்டு வைகாசி 17ஆம் நாள் அழகிய மணவாளன் மீண்டும் திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். அப்போது திருவரங்கம் கோயிலை நிர்வகிக்கும் பொறுப்பு

கோபாணார்யனிடம் ஒப்படைக்கப்பட்டது. கோபணார் யனுடன் சில படை வீரர்கள் திருவரங்கத்தைக் காத்து வந்தனர்''-என்று திரு.N. வெங்கட்ரமணய்யா என்னும் வரலாற்று ஆசிரியர் கருத்து தெரிவித்துள்ளார்.

வீரகம்பண்ண உடையாருடைய தென்னாட்டு படையெடுப்பின்போது செஞ்சியிலிருந்து எழுந்தருளப் பண்ணப்பட்ட அழகியமணவாளனும் உபய நாய்ச்சிமார்களும் மீண்டும் திருவரங்கத்தை வந்தடைந்தனர்.

*(வடகலை குருபரம்பரை நூல்களில் கோபணார்யன் அழகிய மணவாளனை திருவரங்கத்துக்கு எழுந்தருளப் பண்ணிய பிறகு அங்குள்ளோர் அழகியமணவாளனுக்கு அத்யயனோத்ஸவம் எனப்படும் இராப்பத்துத் திருவிழாவை நடத்தவிடாமல் இடையூறு செய்ததாகவும் அப்போது நிகமாந்த மஹாதேசிகனை திருவரங்கத்துக்கு வரும்படி நியமித்து அவருடைய உதவிகொண்டு உத்ஸவங்களை மீண்டும் தொடங்கியதாகவும் குறிப்பிடப் பட்டுள்ளது. ''திருவரங்கன் உலா'' மற்றும் ''மதுரா விஜயம்'' ஆகிய இரு நூல்களை எழுதிய ஸ்ரீவேணு கோபாலன் அவர்களும், இந்தச் செய்திகளை அடியொற்றியே தமது நாவலை எழுதி யுள்ளார்.)*

"கி.பி.1371ஆம் ஆண்டு திருவரங்கத்தின் நிலை மிகவும் பரிதாபத்துக்குரியதாக விளங்கியது. ப்ரணவாகார விமானம் இடிந்து மூலவருடைய திருமேனியின் மீது மழைத் துளிகள் விழுவதை ஆதிசேஷன் தன்னுடைய பணாம ங்களால் காத்துக் கொண்டிருந்தான்'' என்று மதுராவிஜயம் குறிப்பிடுகிறது. அனைத்து மண்டபங்களும் இடிந்த நிலையில் காணப்பட்டன. திருவரங்கத்தில் வாழ்வோரு



டைய எண்ணிக்கை மிகமிக குறைந்த அளவிலேயே காணப் பட்டது. கலாபத்தின் போது நான்கு திசைகளுக்கும் சென்று ஆங்காங்கே குடிபெயர்ந்த மக்கள் திருவரங்கத்திற்கு உடனடி யாக வருகை தரவில்லை. அவர்கள் மீண்டும் வருவதற்கு சில ஆண்டுகள் ஆயிற்று.

ஆகவே எந்தவிதமான விழாக்களும் நடத்துவதற்கான வாய்ப்புகள் ஏற்படவில்லை. கி.பி.1377ஆம் ஆண்டு விருப் பண்ண உடையாரும், இரண்டாம் தேவராயரும் திருவரங்கத் திற்கு வருகை தந்து துலாபாரம் ஸமர்ப்பித்து அவ்வாறு பெறப்பட்ட பொருள்கொண்டு மண்டபங்கள் புனர்நிர்மாணம் செய்யப்பட்டன. கி.பி.1383ஆம் ஆண்டு விருப்பண்ண உடையார் பெயரில் தொடங்கிவைக்கப்பட்ட சித்திரைத் திருநாளே அழகியமணவாளன் ஆஸ்தானம் திரும்பிய பிறகு நிகழ்ந்த முதல் பெருவிழாவாகும். மேலும் நிகமாந்த மஹா தேசிகன் கி.பி.1369ஆம் ஆண்டே பரமபதித்ததாக குருபரம்பரை நூல்கள் தெரிவிக்கின்றன. ஆகவே அவர் கி.பி.1371ஆம் ஆண்டு எழுந்தருளி அத்யயனோத்ஸவத்தை நடத்தி வைத்தார் என்பது வரலாற்று செய்திகளுக்கு முரண்பட்ட கருத்தாகும்.

***சாளுவமங்கு :***

சவண்ணாவின் படைத்தளபதியான சாளுவமங்கு சம்புவரையர்களைப் போரில் வெற்றிகொண்ட நிகழ்ச்சிகளை முன்பே விவரித்துள்ளோம். பல்வேறு இலக்கியங்களில் சாளுவ மங்குவின் புகழ் பேசப்படுகிறது. ராஜநாத திண்டி மாவின் சாளுவாப்யுதயம், சாளுவ நரசிம்மனின் ராமாப்யுதயம் ஆகிய இரு நூல்களில் சாளுவமங்குவைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

''கல்யாணிநகரத்தை ஆண்டுவந்த குண்டா என்பவருடைய மகன் மங்கு. மல்லிதேவன், மங்கி தேவன் மற்றும் மங்கதா ஆகியோர் குண்டாவின் முன்னோர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர். இவர்களில் குண்டா வீரத்தாலும் குணங்களாலும் சிறந்து விளங்கினான். இந்திரனுடைய அமராவதி நகரைவிட கல்யாணி நகர் பல்வகையிலும் சிறப்புற்று விளங்கியது. ராமதுர்க்கத்தின்மேல் படை யெடுத்து அந்த நாட்டு மன்னனை வெற்றி கொண்டவன் குண்டா'' என்று மேற்கூறப்பட்ட நூல்களில் சாளுவமங்குவின் பரம் பரையைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது.

பில்லாளமர்ரி பினவீர பத்ருடு எழுதிய 'ஜைமினி பாரதம்' என்னும் நூலில் குண்டாவின் வீரச்செயல்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. வீரகம்பண்ணர் பெற்ற அதே மரியாதைகளை சாளுவமங்குவும் பெற்றிருந்தார். இவர் வீரகம் பண்ண உடையாரின் உற்ற தோழராயும் திகழ்ந்துவந்தார். விஜய நகர சாம்ராஜ்யத்தின் சாளுவப் பரம்பரையைத் தோற்று வித்த சாளுவ நரசிம்மனால் எழுதப்பெற்ற ராமாப்யுதயம் என்னும் நூலில் குண்டாவிற்கு புகழாரம் சூட்டியுள்ளான்.

கல்வெட்டு எண்.A.R.E.52 of 1905 தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள தலைவநல்லூர் ஈஸ்வரன் கோயில் மேற்குச் சுவற்றில் அமைந்துள்ளது. இந்தக் கல்வெட்டு கி.பி.1363ஆம் ஆண்டு ஏற்படுத்தி வைக்கப்பட்டுள்ளது. தமிழில் அமைந்துள்ள இந்தக் கல்வெட்டில் கோபண்ண அண்ணார் கட்டளையின்படி சாளுவமங்கு பிறப்பித்த ஓர் உத்தரவைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் கல் வெட்டில் கோபண்ண உடையாரைப் பற்றிக் குறிப்பிடும் போது 'அண்ணார்' என்ற மரியாதைக் குரிய முன்னொட்டு காணப்படுகிறது. தொண்டை மண்டலம் மற்றும் மதுரையில்



நிகழ்ந்த படையெடுப்புகளில் சாளுவ மங்குவின் பங்கு குறிப்பிடத்தக்கது. சம்புவரையர் மீது சவண்ணவுடையார் படையெடுத்தபோது போரில் தோற்ற சம்புவராயனை சவண்ண உடையார் மன்னித்து அவனுக்கு மீண்டும் தொண்டை மண்டல ஆட்சியைக் கொடுத்ததற்கு சாளுவ மங்குவே காரணமாவார்.



சம்புவரைய ஸ்தாபனாசார்யர் என்ற பெயரையும் சவண்ணவுடையார் பெற்றார். ஜைமினி பாரதம், சாளுவாப் யுதயம் மற்றும் ராமாப்யுதயம் ஆகிய நூல்களில் சாளுவ மங்குவே போரிட்டு மதுரை சுல்தானைக் கொன்றனன் என்று குறிப்பிடுகின்றன. ஆயினும் மதுராவிஜயத்தில் வீரகம் பண்ண உடையாரே மதுரை சுல்தானை வாளால் வெட்டி வீழ்த்தியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த வெற்றியைக்கொண்டாடும் முகத்தான், தாமிர பர்ணி நதிக்கரையில் விஜயஸ்தம்பம் ஒன்றினை சாளுவமங்கு நாட்டியதாக ராமாப்யுதயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரையை வெற்றிகொண்டபிறகு திருவரங்கத்திற்குச் சென்று பொன்னி நதி அடிவருடும் திருவரங்கனின் கமலப் பாதங்களை தரிசித்தனன் என்றும், அதற்குமுன்பு காவிரி நதியில் நீராடி ஆயிரம் சாளக்கிராமங்களையும், 16 வகையான தானங்களையும் அளித்தனன் என்றும் இந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

எட்டு திக்கிலும் படையெடுத்து வெற்றிகொண்ட நிகழ்ச்சியை நினைவில்கொள்ளும் வண்ணம் 8 அக்ரஹாரங் களை ஏற்படுத்தி அதில் அந்தணர்களைக் குடியிருத்தி இறை வனுக்குத் தொண்டு செய்தான் சாளுவமங்கு என்று இராமாப் யுதயம் மற்றும் சாளுவாப்யுதயம் ஆகிய இரு நூல்களிலும் கூறப்பட்டுள்ளன. ஆயினும் இதற்கான கல்வெட்டு ஆதார ங்கள் கிடைக்கவில்லை. திருவரங்கம் கோயிலில் 60 ஆயிரம் மடாஸ் தங்கத்தை திருப்பணிகள் மேற்கொள்வதற்கு மூலதனமாக ஸமர்ப்பித்தான் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

திருவரங்கத்தில் மேற்கொண்ட கைங்கர்யங்களைப் போலவே திருமலை திருக்கோயிலிலும் பல கைங்கர்ய



ங்களை மேற்கொண்டார் சாளுவமங்கு. திருவேங் கடமுடை யானுடைய விமானமான ஆனந்த நிலையத்தின்மேல் தங்கத்தால் ஆன கலசத்தைப் பதிப்பித்தான் என்று அறியப் படுகிறது.

சாளுவேந்திரன், கடாரிக சாளுவன், மஹாராஜ, கந்தரகுழி, தக்ஷிண சுரத்ரானா, திரிபுவனராய ஸ்தாபனா சார்யா, சம்புவராய ஸ்தாபனாசார்யா, ஸ்ரீரங்க ஸ்தாபனாசார்யா போன்ற விருதுகளை அவன் பெற்றான் என்றும் இந்த நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### *சோமப்ப தண்டநாயகன் :*

கோபணார்யனுக்கு இணையானதொரு பெருமை படைத்தவன் சோமப்ப தண்டநாயகனும் அவனுடைய மகனும். ஆனால் இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய குறிப் புகள் இல்லை. ஆயினும் கல்வெட்டுகளில் சோமப்ப தண்ட நாய கனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. முலுபாகலுவை தலைமையிடமாகக் கொண்டிருந்த வீரகம்ப ண்ணரின் நம்பிக் கைக்கு உரிய மந்திரியாக திகழ்ந்து வந்தவர் சோமப்பர்.

கோலாரில் காணப்படும் (EC Vol.X, Part - 1, No.222 of Kolar, No.58 of Mulubagal - P.91) கல்வெட்டுகளில் சோமப் பருடைய கல்வியறிவு மற்றும் நிர்வாகத் திறமையை புகழ்ந்து கூறும் சொற்றொடர்கள் காணப்படுகின்றன.

''கம்பண்ணருடைய மந்திரியும், நற்குணங்கள் பல வற்றிற்கு இருப்பிடமானவரும், உயர்ந்ததொரு ஒழுக் கத்தைக் கடைப்பிடிப்பவரும், நேர்மையின் வடிவெனத் திகழ்பவரும், கல்விகேள்விகளில் சிறந்தவரும், நற்செல்வம் படைத்த வரும், அரசியல் ராஜதந்திரத்தை நன்கு அறிந்தவருமான

சோமப் பர்'' என்று இந்தக் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும், அந்தக் கல்வெட்டு கோலார் நகரில் சோமநாதருக்கு மிகச்சிறந்த தொரு கோயிலை சோமப்பர் கட்டியதாகக் குறிப்பிடுகிறது.

''வீரகம்பண்ண உடையாரைக் கொண்டு தான் கட்டி முடித்த கோயிலின் மஹா ஸம்ப்ரோக்ஷணத்தை செய்து முடித்தார். அவ்வமயம் மன்னர் பல கிராமங்களைத் திருக்கோயிலுக்கு தேவதானமாகக் கொடுத்தார். சோமப்பர் ஸம்ஸ்க்ருத மொழியில் வல்லமை பெற்றவராகத் திகழ்ந்தார்'' என்ற குறிப்புகள் கோலார் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. (118 of 1937 EC Vol.10,)

வீரகம்பண்ண உடையாரின் படைப்பிற்குப் பிறகு சோமப்பர் தமிழ்நாட்டில் தங்கியிருந்து அரசு அலுவல்களை மேற்பார்வை யிட்டு வந்தார். அவருக்கு தன்னாயக்கர் என்ற விருது போர்களில் பங்குகொண்டதற்காக வழங்கப்பட்டது அல்ல. போர்க்காலத்தில் அரசாங்க அலுவல்களை மேற் பார்வையிட்டு வந்ததால் அவருக்கு இந்த விருது வழங்கப் பட்டிருக்கக்கூடும். வீரகம்பண்ணருடைய படையெடுப் பிற்குப் பிறகு தமிழ்நாட்டில், சிதைவுற்றிருந்த கோயில்களை புனர்நிர்மாணம் செய்து அதைச் சுற்றியிருந்த திருமதிள்களை ஒட்டிய குடியிருப்புகளை ஏற்படுத்தி வைத்த பெருமை சோமப் பருக்கு உரியதாகும். (A.R. No.34 of 1919)

***கந்தரகுளி மாரய்ய நாயக்கர் :***

சோமப்பருடைய இரண்டு மகன்கள் முறையே மாரய்ய நாயக்கர், தரணி அப்பர் ஆவர். இரண்டாவது மகனான தரணி அப்பர் சில கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறார். சம்புவ ராயர்களுடன் ஏற்பட்ட மோதலில் மாரைய்ய நாயக்கருடைய பெயர் குறிப்பிடப்படுகிறது. ''அழியா அரண் அழித்த'' என்ற முன்னொட்டொடு இவர் குறிப்பிடப்படுகிறார். சம்புவரையர் களை எதிர்த்து வெற்றிகொண்டதன் காரணமாக பெரியதொரு கோபுரம் ஒன்றினை எழுப்பி அதற்கு **கந்தரகுளி மாரய்ய நாயக்க திருக்கோபுரம்** என்று பெயரிட்டான்.



***மதுராவிஜயத்தில் இடம்பெற்றுள்ள சில ஊர்களுக்கான விளக்கம்:***

*1. துக்தவாஹினி அல்லது க்ஷீரதரங்கிணி* - இது பாலாற்றைக் குறிக்கும் சொல்.

*2. கண்டக நானப்பட்டனம்* - முல்வைப்பட்டனம் என்ற முலுபாகலு அல்லது முட்லபாகுலு என்னும் ஊரைக் குறிக்கும். பழமையான கல்வெட்டுகளில் இந்த ஊர் முல்வாயி என்று குறிப்பிடப்படுகிறது.

கோலாரிலிருந்து கிழக்கு மற்றும் வடகிழக்கு திசை களுக்கு இடைப்பட்ட பகுதியில் இந்த ஊர் அமைந் துள்ளது. பெங்களூர்-சென்னை நெடுஞ்சாலையில் முக்லி கண வாய்க்கு முன்னதாக அமைந்துள்ளது. இந்தப் பகுதிக்கு நிகரிலி சோழ மண்டலம் என்ற பெயர் முன்பு வழங்கி வந்தது. கி.பி.1117ஆம் ஆண்டுஹொய்சாள மன்னனான விஷ்ணு வர்த்தனன் கோலார் புரா எனப்படும் கோலார் பகுதி யையும், தலக்கார் பகுதியையும் கைப்பற்றினான். ஹொய்சாள மன்னர்கள் பரம்பரையில் உதித்த வீரசோமேஸ்வரனின் இறப்பிற்குப் பிறகு (கி.பி.1254) ஹொய்சாள சாம்ராஜ்யம் இரு பகுதிகளாக பிரிக்கப்பட்டது.

அப்போது முலுபாகுலு பகுதி வீரசேமேஸ்வரனின் மகனான வீரராமநாதனுடைய ஆட்சிப் பகுதியில் சேர்த்துக் கொள்ளப் பட்டது. மூன்றாம் வீரவல்லாளன் காலத்தில் துவார ஸமுத்திரம் தலைநகரமாக இருந்துவந்த நிலை மாறி அவன் ஹோசூரில் வசித்துவந்தான். விஜயநகர சாம்ராஜ்யத்தின் தோற்றத்திற்குப் பிறகு முதலாம் புக்கராயரின் ஆட்சிக்கு உட்பட்டதாய் முலுபாகலு விளங்கிவந்தது.





மரதக நகரம் - வடஆர்க்காடு மாவட்டத்தில் அமைந் துள்ள விருஞ்சிபுரமே மரதக நகரம் என பெயர் பெற்றிருந்தது என்பது ஒருசாரார் கருத்து. அந்த ஊரில் கோயில் கொண்டி ருந்த மரகதவல்லி பெயரில் இந்த ஊர் அழைக்கப்பட்டு வந்தது போலும் மதுராவிஜயத்தில் காஞ்சிநகர வர்ணனையை அடுத்து மரதக நகர் மிகப்பெரிய நகரமாக விளங்கியது. அங்கே வீர கம்பண்ணர் இருந்து இந்த பூமியை ஆண்டு வந்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகவே மரதக நகரம் என்பது காஞ்சி புரத்தைக் குறிப்பதாகவே கொள்ள வேண்டும்.

**ராஜகம்பீர வளநாடு**-சம்புவராயர்களுடைய மலைக் கோட்டைக்கு படைவீடு என்ற பெயர் அமைந்திருந்தது. இந்த கோட்டை அமைந்திருந்த இடம் ராஜகம்பீரன் என்ற பெயர் பெற்றிருந்தது. இந்தப் படைவீடு குறும்பர்கள் என்று அழைக்கப்பட்டுவந்த மலைவாழ் மக்களின் மன்னராய் விளங்கியவர்களின் கோட்டையாகத் திகழ்ந்துவந்தது. 16 மைல் சுற்றளவு கொண்ட் தாய் விளங்கிய இந்தப் பகுதியில் பல திருக்கோயில்கள் அமைந்திருந்தன. மக்கள் வசிப் பதற்கான மாளிகைகள் பல ஏற்படுத்தப்பட்டிருந்தன. குறும்பர்கள் ஜவ்வாது மலையின் உச்சியில் பெரிய தொரு கோட்டையைக் கட்டியிருந்தனர்.

ஸ்ரீரங்கம்-காவிரி, கொள்ளிடம் ஆகிய இரு ஆறுகளின் மத்தியில் அமைந்துள்ளது. மாலிகாஃபூரினுடைய கி.பி. 1311ஆம் ஆண்டு படை யெடுப்பின்போதும், அதன் பிறகு கி.பி.1323ஆம் ஆண்டு நிகழ்ந்த முகம்மதுபின் துக்ளக்கின் படை யெடுப்பின் போதும் இந்த ஊர் பாழ்படுத்தப்பட்டது. வீர கம்பண்ணருடைய கண்ணனூர் போருக்குப் பிறகு திருவரங் கத்தின் நிலையை மதுராவிஜயம் விவரிக்கின்றது. ***

**மதுராவிஜயம்**
**முதற்காண்டம்**

## 1-16 ஸ்லோகங்களின் மொழிபெயர்ப்பு:

1. கல்பவ்ருக்ஷம் போன்று அனைவருடைய ஆசைகளையும் பூர்த்தி செய்பவரான யானைமுகத்தோனாகிய விநாயகப் பெருமானின் திருவடிகளை சரணடைகிறேன்.

2. அண்டத்தின் உணர்வாக நிலைநிற்கும் பரமசிவனையும் அவனது மனையாளான பார்வதியையும் என்னுடைய அறிவு விசாலமடையும்பொருட்டு பணிந்து நிற்கிறேன். ஒரு ஆணும், பெண்ணும் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்காகப் பிரமனால் படைக்கப்பட்ட சிவன், பார்வதி ஆகிய இருவரையும் மீண்டும் வணங்குகிறேன்.

3. புகழ்மிக்க கவிஞர்களின் நாவில் நடனமிடும் வெள்ளைத்தாமரை மலரில் வீற்றிருக்கும் ஸரஸ்வதி தேவிக்கு என் வணக்கங்கள் உரித்தாகுக. அறிவு என்னும் விண்மதியில் சந்திரன் போல் ஸரஸ்வதி தேவியானவள் விளங்குகிறாள். புகழ்பெற்ற கவிஞர்களின் நாவில் நடனமிடும் ஸரஸ்வதி தேவியானவள் ஆபரணங்களால் இழைக்கப்பட்ட கூண்டிற்குள் இருக்கும் சரிகா பறவையைப் போல் விளங்குகிறாள்.

4. முக்கண்ணனான சிவன், அவன் பக்கத்திலே ஒளிவிடும் தாரகையாக மின்னும் ஸர்வமங்கள பூஷணியான பார்வதி ஆகியோரை ஒத்த ஈடு இணையற்ற அறிவும் ஒளியும் நிரம்பப்பெற்றவரான என்னுடைய குரு க்ரியாசக்திக்கு என் வணக்கங்கள் உரித்தாகுக.



5. ஆதிகாவ்யமான ஸ்ரீராமாயணத்தைப் பாடிய வால்மீகி பகவான் கற்றறிந்தோர் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கச் செய்யட்டும்.

6. கரும்பின் ஒவ்வொரு கணுவிலும் சாறு நிறைந்திருப்பதுபோல வேதவ்யாஸரின் மஹாபாரதத்தின் ஒவ்வொரு ஸர்க்கத்திலும் அறிவுக்கு விருந்தளிக்கும் செய்திகள் நிரம்பியுள்ளன. அவருக்கென் வணக்கங்கள் உரித்தாகுக.

7. காளிதாஸருடைய கவிதைகளுக்கு அடிமையாகாதவர் இவ்வுலகில் உண்டோ? என்றும் வாழும் அவன் கவிதைகள் அமரத்துவம் பெற்றவை.

8. ஸரஸ்வதியின் கரங்களில் இருக்கும் வீணையின் நாதம்போல ஒலிக்கும் பாணபட்டரின் கவிதைகளில் ஈடுபடாதோர் உண்டோ?

9. வகுளமலரை நசுக்கினால் மணம் வீசுவது போல பாரவியின் கவிதைகளை நன்கு அறிந்து அதன் ஆழத்தை அறிந்தோர்க்கல்லவா அந்தக் கவிதைகளின் நயம் புலப்படும்.

10. ஒன்றிஒன்றி இவ்வுலகம் படைத்தானின் பிரிய சகியின் மணிமுடிமேல் ஒளிரும் ரத்னங்கள் போல் அமைந்துள்ளது தண்டியின் கவிதைகள். அந்தக் கவிதைகளாகிய அமிர்தத்தை பருகாதவர் உண்டோ இவ்வுலகில்.

11. பவபூதியின் கவிதைகளை சுவைப்போர் தேவர்களின் உணவாகிய அமிர்தத்தை உட்கொண்டோருக்கு இணையான இன்பத்தை அடைவர். காமதேனுவை ஒத்த கவிதைகளைப் பாடி மகிழ்ந்த பவபூதிக்கு என் வணக்கங்கள் உரித்தாகுக.

12. மந்தார மரத்தின் பூக்களிலிருந்து பெருகும் தேன் கடல்போல வெள்ளமிடுவது போல் கவி கர்ணாமிருதரின் கவிதைகள் அமைந்துள்ளன.

13. சகோரா பறவை சந்திரனின் கிரணங்களைப் பருகிக் களிக்குமாப் போலே கவி திக்கையாவின் கவிதை களை அறிஞர்கள் பருகிக் களிக்கின்றனர்.



14. எழுபத்துநான்கு வகைக் கவிதைகளைப் பாடி யருளிய கவி அகஸ்தியரின் பரந்த அறிவினைக் கண்டுப் பொறாமை கொள்ளாத கவியும் உண்டோ?

15. இரண்டாம் வ்யாஸர் என்று போற்றப்படும் கவி கங்காதரா மஹாபாரதத்தை நாட்டிய நாடகமாக ஆக்கித் தந்தார். அவரை நான் வணங்குகிறேன்.

16. கவிஞர்களுக்கெல்லாம் தலைவனான கவி விஸ்வ நாதனின் புகழ் எங்கும் பரவட்டும். அவருடைய ஒப்பற்ற கருணையால் கங்காதேவியான என் போன்றோரும் நிறை வான அறிவைப் பெறமுடிந்ததல்லவா.

**ஸ்லோகங்கள் 17 முதல் 24 முடிய அக்கால இலக்கியங்கள் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளார் கங்காதேவி.**

17. சிலருடைய கவிதைகளில் உணர்ச்சிகள் கொப்பளிக்கின்றன. சிலருடைய கவிதைகளில் எண்ண அலைகள் வீசுகின்றன. சிலருடைய கவிதைகளிலே நயம் மிளிர்கின்றது. ஆனாலும் இவ்வனைத்தும் ஒருங்கே அமைந்துள்ள கவிதைகள் காணக் கிடைக்கவில்லை.



18. ஒரு முத்துச்சிப்பியின் உள்ளே இருக்கும் ஒரு சிறு அளவு உப்பானது சந்தனக் குழம்பைப் பாழ் செய்வது போல கவிதையின் ஊடே காணப்படும் இலக்கண, இலக்கியப் பிழைகள் அந்தக் கவிதையைப் பொருளற்ற தாக்கி விடுகிறது.

19. ஒரு அழகற்ற பெண் எத்துணை நற்குணங்கள் நிரம்பியவளாய் இருந்தபோதிலும் எவ்வாறு அவள் கண வனால் விரும்பப்படாமல் இருக்கிறாளோ அவ்வாறே இலக்கண, இலக்கியக் குற்றமுள்ள கவிதைகள் கற்றறிந் தோரால் விரும்பப்படுவதில்லை.

20. காட்டில் ஒரு காகமானது சுவையுள்ள மாங்க னியை விரும்பாது புளிப்புச்சுவை கொண்ட எலுமிச்சைப் பழத்தை நாடுவது போன்ற பொல்லாத மனிதர்கள் ஒரு கவிதையின் உள்ளே அமைந்துள்ள தவறுகளைத் தேடிப் பிடிக்க முயற்சிக்கிறார்கள். கவிதைநுவலும் உயர் பொருளைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை.

21. பிறருடைய கவிதைகளைத் திருடித் தான் பாடியதாக எத்தனை நாள்தான் ஒரு கவி பெருமை யடையமுடியும். ஒரு சிறுகல்லின் மீது வண்ணப்பூச்சிட்டு அதை ரத்னக்கல் என்று விற்கமுடியுமா?

22. மரபுவழிக் கவிஞர்களும் இலக்கணமறிந்த அறிஞர்களும் ஆயிரக்கணக்கில் இவ்வுலகில் உள்ளனர். ஆனால் அழகான கவிதைகளை பாடித் தருவார் ஒரு சிலரே.

23. நயமிக்க கவிதைகள் பாடுவோர் புகழுக்கும், பொருளுக்கும் கீழ்த்தர உணர்ச்சிகளுக்கும் இடமளிக்காது படிப்போர் உள்ளத்தில் உவகைப் பொங்கும்படி பாட வேண்டும்.

24. மலரில் இருக்கும் மகரந்தத்தை வந்து சுவைத்திடு என்று தேனீக்கு அந்த மலர் அழைப்பு விடுக்கிறதா? இல்லை. அதுபோல நல்ல கவிதையைச் சுவைப்பதற்கு அனைவரும் முன் வருவர்.

**25-42 ஶ்லோகங்களின் மொழிபெயர்ப்பு:**

இந்த ஶ்லோகங்களில் தனது கணவர் வீரகம்பண்ண உடையாரின் தந்தையாரான புக்கரின் பெருமைகளைப் பேசி மகிழ்கிறாள் கங்காதேவி.

25. ''கற்றறிந்தோர்களே! நான் கூறுவதை உங்கள் உள்ளத்தில் கவனமாகக் கொள்ளுங்கள். நான் இயற்றப் போகும் மதுரை மாநகர் மீதுக் கொண்ட வெற்றியைப் பறை சாற்றும் ''மதுரா விஜயம்'' என்னும் நூலில் எனது கணவரான வீரகம்பண்ண உடையாரின் வைபவத்தை முந்துற முன்னம் உங்களுக்குக் கூற முற்படுகிறேன்''.

26. விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த ஹரிஹரர் என்பாருடைய இளைய சகோதரர் புக்கர். இவர்கள் இருவருடைய ஆணைக்கு உட்பட்டு அவர்களுக்குத் தலைவணங்கி நின்ற சிற்றரசர்கள் பலர்.

27. ஸர்ப்பங்களில் ஆதிசேஷன், மலைகளில் இமயமலை, கடவுளர்களில் விஷ்ணு போன்று இப்பூவுலகில் வாழும் மன்னர்களில் முதன்மை பெற்றவராகப் புக்கர் விளங்குகிறார்.

28. எதிரிகளுக்கு வெப்பத்தை (நடுக்கத்தை) அளிப்பதில் சூரியனுக்கு ஒப்பானவர், தன்னை அண்டியவர்களுக்குத் தண்ணொளியைத் தரும் சந்திரனைப் போன்றவர், ஸமுத்திரத்தின் ஆழம்போன்ற அறிவு படைத்தவர். மேரு மலையைப் போன்ற உறுதி படைத்தவர் புக்கர்.



29. தம்முடைய அறிவுகூர்மையினால் மந்திரிகள் தெரிவிக்கும் கருத்துக்களை ஆராய்ந்து பார்ப்பதிலும், தம்முடைய வாள்வலியால் படைத்தலைவர்களுக்கு துணை நிற்பதிலும் வல்லமை படைத்தவர் புக்கர். போரில் தம்முடைய ஒப்பற்ற புஜபலத்தால் படைத்தலைவர்களுக்கு உறுதுணையாய் இருந்துவருகிறார்.

30. மக்களைக் காக்கும் இந்திரன், வருணன், குபேரன் மற்றும் யமன் போன்று அவர் விளங்கி வருகிறார். போர்களில் வெற்றிவாகை சூடி இந்திரனைப்போலவும், நீர் நிலைகளைப் பாதுகாப்பதில் வருணனைப் போலவும், செல்வத்தை வாரிவழங்குவதில் குபேரனைப் போலவும், நடுநிலைமை தவறாது நீதி வழங்குவதில் யமனைப் போலவும் விளங்குகிறார் புக்கர்.

31. புக்கருடைய பெருமை சொற்களுக்கு அப்பாற்பட்டனவாய் விளங்குகின்றது. அவருடைய புகழ் மக்கள் மார்பில் பூசிக்கொள்ளும் சந்தனம் போலவும், காதில் அணிந்து கொள்ளும் முத்து அணிகலன்கள் போலவும், முகத்தில் பூசிக்கொள்ளும் நறுமணப் பொருள்கள் போலவும் அமைந்துள்ளது.

32. தம்மை எதிர்த்த மாற்றார் படைத் தலைவர்களை புஜபலத்தால் வெற்றிகொண்ட புக்கர் பெரும்புகழை அடைந்தார். மந்தார மலையைக் கொண்டு கடலைக் கடைந்து அமுதம் கொண்டது போல் மாற்றார் படைத்தலைவர்களைக்

கொன்றுத் தம் வீரத்தை நிலைநாட்டியுள்ளார் புக்கர்.

33. நற்குணங்கள் பல நிரம்பிய புக்கருடைய புகழ் நீண்ட வட்டம் கொண்ட இப்பூவுலகின்மேல் போர்த்தப்ப ட்ட வெண்பட்டாடைபோல் விளங்குகிறது.

34. புக்கரின் கரத்தில் ஏந்திய வாளானது அவரு டைய அரசியல் எதிரிகளின் மூச்சுக்காற்றை உண்டு வாழ்ந்து கொண் டிருந்தது. சீற்றங்கொண்ட நாகமானது காற்றை உண்டு தன் தோலை அவ்வப்போது நீக்கிக் கொள்ளும் செயல் போலி ருந்தது புக்கருடைய வீரம்.

35. மன்னனின் வலதுகரத்தில் ஏந்திய வாளானது அவனை எதிர்த்துப் போரிட்ட மன்னர்களின் செல்வமாகிய மங்கையின் தலையில் சித்திரம் வரைவது போல் காணப் பட்டது.

36. புக்கரின் அரண்மனையை வந்தடைந்த செல்வத் திருமகள் யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கும் விஷ்ணுவிடம் செல்லாது நாட்டை எந்நேரமும் காத்து நிற்கும் புக்கரின் அரண் மனையிலேயே தங்கிவிட்டாள்.

37. மன்னன் தன் கரங்களால் தானமாக வாரிவழங்கும் செயலாகிய நீர் வார்க்கப்பட்டதால் கலியின் வெப்பம் தாளாமல் உதிர்ந்து போயிருந்த 'தர்மமாகிய' மரத்தின் இலைகள் மீண்டும் துளிர்விட்டன.

38. புக்கரின் வெற்றியாகிய மண்டபத்தின் தூண்கள் போல இவனிடம் தோற்றுப்போன மன்னர்கள் பல இடத்தில் நின்றுகொண்டிருந்தனர். புக்க மன்னரின் காலடியில் தம் தலைகளை வைத்து வணங்கியபோது ஏற்பட்ட தழும்பு களோடு காணப்பட்டனர்.



39. மன்னனின் வீரக்கனலின் தீப்பிழம்புகளால் சூழப்பட்ட எதிரிகளின் புகழ் அதில் கருகி கருமை நிறத்தை அடைந்தன.

40. அரண்மனை மண்டபங்களில் சங்கிலிகளால் கட்டப்பட்டு பிளிறிக்கொண்டிருக்கும் தோல்வியைத் தழுவிய மன்னர்களின் யானைகள் கருமேகங்களை கட்டிப் போட்டாற் போல் காணப்பட்டன. இந்த யானைகள் புக்கரின் வெற்றிப் பாதையில் தடைக்கற்களாக அமைந்திருந்ததால் இந்த நிலை அவற்றிற்கு ஏற்பட்டது.

41. மன்னனின் படைக்குதிரைகள் தம்முடைய கால் குளம்புகளால் நிலத்தைக் கீறிட அதனால் எழுந்த புகை மண்டலமானது திடீரென்று சூரியனை ராகு மறைப்பது போல் தோன்றியது.

42. மன்னரின் அரண்மனையில் குவித்து வைக்கப் பட்டிருந்த ஆபரணங்களையும், பொற்காசுகளையும் காண் போர் குபேரன் அல்லது இந்திரனுடைய செல்வம் இதற்கு இணையாகாது என்று கூற முற்பட்டனர். துரியோதனனுடைய செல்வத்தை புக்க மன்னருடைய அரண்மனையில் காணப் படும் செல்வக் குவியலுக்கு ஒப்பாகச் சொல்லமுடியாது.

**ஸ்லோக எண் 43 தொடங்கி 66 முடிய விஜய நகரத்தின் எழில் வர்ணிக்கப்படுகின்றது.**

43. இவ்வாறு எதிரிகளை வென்று கொண்டுவந்து குவித்த மன்னனின் தலைநகரமான விஜயநகரத்தைக் கற்றறிந்தோர் இந்திரனின் அமராவதிநகருக்கு ஒப்பாகும் என்று கூறத் தொடங்கினர்.

44. சொர்க்கலோகத்தின் புறமே சூழ்ந்திருக்கின்ற

கங்கையைப் போல விஜய நகரமானது துங்கபத்ரை ஆற்றால் சூழப்பட்டுள்ளது. கோட்டைக்கு அரணாக விளங்கும் அகழி போல துங்கபத்ரை அமைந்துள்ளது.

45. விஜயநகரமானது நான்கு பக்கங்களிலும் நெடி துயர்ந்த மதில்களால் சூழப்பட்டிருந்தது. அந்த மதில்கள் சக்ர சாலா மதில்களைப் போன்று உயரங்கொண்டதாய் அமைந் திருந்தது. தாமரை மலரைச் சூழ்ந்திருக்கும் நீர் போல அகழிகள் அமைந்திருந்தன. சூழ்ந்திருந்த மதிள்சுவர் பூமித் தாயின் தொப்புள்கொடி போலக் காணப்பட்டது.

46. ரத்தினமும் மாணிக்கமும் இழைக்கப்பட்ட நெடி துயர்ந்த மாடமாளிகைகள்மீது சூரியனின் கிரணங்கள்படும் போது வானவில்லின் வண்ண விந்தையைக் காணமுடிந்தது. இந்த மாடமாளிகைகள் சுமேரு மலைச் சிகரத்தை ஒத்து இருந்தன.

47. விஜயநகரத்தைச் சுற்றிச் செண்பக, அசோக, நாக, கேச(ரி)மரங்கள் பூத்துக் குலுங்கி நின்றிருந்தன. இதன் விளை வாக ஆண்டின் அனைத்து நாட்களும் வசந்த காலம் போலேத் தோன்றியது.

48. விஜயநகரத்தின் பல பகுதிகளில் அமைந்திருந்த சிறு குன்றுகளை கஸ்தூரி மான்கள் தம்முடைய இருப் பிடமாகக் கொண்டன. அந்தக் குன்றுகளில் வளர்ந்திருந்த கற்பூர மரங்களின் நிழல்களில் அவை ஒதுங்கி இருந்தன. காதல் கடவு ளான மன்மதனின் மறைவிடம்போல் இவை காட்சியளித்தன.

49. விஜயநகரத்தின் பல பகுதிகளில் மணம் பரப்பும் தாமரை மலர்களைக் கொண்ட தடாகங்களும், ஏரிகளும்



அமைந்திருந்தன. இந்த நீர்நிலைகளின் படிக்கட்டுகள் நவரத் தினத்தாலே இழைக்கப்பட்டிருந்தது. அந்தப் படிக்கட்டுகளின் ஓரங்களில் அன்னங்கள் தத்தம் பெடையோடு ஒதுங்கி யிருந்தன.

50. விஜய நகரத்தின் ஓங்கு உயர் மணிமாடங்கள் இலையுதிர் காலத்து வெண்மேகங்கள்போலக் காட்சி யளித்தன. மன்னன் படையெடுத்து வெற்றி கண்ட நாடுகளி லிருந்து கைதேர்ந்த சிற்பிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட பல்வேறு வகைத் தோற்றமுடைத்ததான் மணிமாடங்களைக் கண்ட மக்கள் மன்னனின் வீரத்தைக்கண்டு வியந்தனர்.

51. தென்னாட்டு திலகமென விளங்கும் விஜயநகரம் பூத்துக் குலுங்கும் எழில் கொண்ட பருவ மங்கையைப் போல் தன் அழகெல்லாம் தோன்றக் காண்போர் கவனத்தை ஈர்த்து நின்றது.

52. நீண்டு பரந்து காணப்படும் விஜய நகர வீதிகளில் நற் குணங்களும், நல்லொழுக்கமும் கொண்ட அந்தணர்கள் மற்றும் இசை வல்லுநர்களும் கம்பீரமாக நடையிட்டுக் கொண்டு உலவி வந்தனர். கந்தர்வலோகம் போல காட்சி யளித்த விஜய நகரத்தில் எங்கும் எப்போதும் இசை வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. பௌர்ணமி அன்று உள்ளத்திலே கொள்ளும் இன்ப வெள்ளத்தில் நீராடுவது போல்ஆண்டின் அனைத்து நாட்களிலும் மக்கள் நீராடி மகிழ்ந்தனர்.

53. விஜயநகர வீதிகளில் நடந்து செல்லும் மக்கள் சுமேரு மலையின் உச்சியிலும், அடிவாரத்திலும் உலாவிவரும் நல் உள்ளங்கொண்ட மக்களைப் போல் காணப்பட்டனர். சிவ பெருமானின் முடியைத் தங்களுக்கு இருப்பிடமாகக்

கொண்ட நாகங்களைப் போல் நாகரிகத்தை விரும்பும் இளைஞர்கள் விஜயநகரத்தை தமது இருப்பிடமாக கொண்டனர்.

54. சீரிய பண்புகள் என்ற கடலின் அண்மையில் காணப்படும் நவரத்தினக்கற்களால் ஆன மாலையைப் போலே காணப்பட்டது விஜயநகரம். அனைத்துச் செல்வங்களின் இருப்பிடமாக விளங்கிய விஜயநகரத்தில் மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி என்றும் நிறைந்திருந்தது.

55. சூரியனின் ஒளிவட்ட நிழல் விஜய நகரத்தின் நெடு துயர்ந்த மாடங்கள் மீது படியும்போது அவை அவற்றின் மீது பொருத்தப்பட்ட தங்கத்தினாலான சக்கர வளையங்களாகக் காணப்பட்டன.

56. ஓங்குயர் மணிமாடங்களின் உச்சி மாடியில் விளையாடிக் கொண்டிருக்கும் மகளிர் தங்கள் கைகளால் அடிக்கடி சந்திரனைத் தொட்டு விளையாடினர். அவர்கள் கையிலே வைத்து விளையாடும் முத்தாலான கைப்பந்துகள் போல சந்திரனின் உருவம் தோன்றிற்று.

57. விஜயநகர அரண்மனைகளில் மகளிர் இசைக் கருவி களை இசைத்திடும்போது மழை மேகத்தைக் கண்டு தன் சிறகுகளை விரித்து ஆடும் மயில் கூட்டங்கள் அந்த நிலையை மறந்து ஆடத் தொடங்கின.

58. அரண்மனையின் சுவர்களில் பதிக்கப்பட்டிருந்த பத்ம ராக கற்கள் விஜய நகரத்தைச் சூழ்ந்துள்ள குளிர் மேகங்களால் மாலையில் காணப்படும் பழுப்பு நிறத்தை அவை அடைந்தன.

59. மாலை நேரங்களில் விஜயநகரத்தில் அமைந்துள்ள மாடமாளிகைச் சாளரங்களிலிருந்து வெளிப்படும் நறும்புகை



ஏற்றப்படவிருக்கும் விளக்குகளின் ஒளிக்கு அஞ்சி வெளியேறுவது போல் காணப்பட்டது.

60. நீர் நிலைகளின் படிக்கட்டுகளில் பதிக்கப்பட்டிருந்த ரத்தினங்களின் ஒளி இருளை விரட்டி அடித்தது. அந்த இரவில் சக்ரவாகப் பட்சிகள் ஒன்றையொன்று பிரியாது இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தன.

61. விஜயநகர மகளிரின் தாமரையை ஒத்த முகவொளி கண்டு வெள்கிய சந்திரன் தனது மேனியில் களங்கத்தைத் ஏற்றுக் கொண்டான்.

62. மன்மதன் தனது பாணங்களை ஆடவர்மேல் எய்திட தேவையில்லாது போயிற்று. ஏனெனில் விஜயநகரத்தில் வாழும் அழகிய மாதர்களின் கடைக்கண் பார்வையே ஆடவர்கள்மேல் அம்புகள் போல் பாய்ந்தன.

63. விஜயநகரத்து மாதர்களின் காற்சிலம்பின் ஒலிகேட்டு அன்னங்கள் நடைபயிலத் தொடங்கின. மாதர்களைக் கண்ட வாறே அவை நாணம் கொண்டன.

64. துடியிடை மாதர் வீதிகளில் உலாவும்போது அவர்களுடைய இடுப்பு ஒடிந்து போகும் அளவிற்கு ஸ்தனங்களைச் சுமந்து சென்றனர்.

65. விஜயநகரத்து அழகிய மாதர்களின் ஸ்தனங்களே கனத்திருந்தன. இவற்றைவிட கனமான பொருள்கள் விஜய நகரத்தில் காணப்படவில்லை. அவர்களுடைய தலைமுடி வளைந்தே காணப்பட்டது. மாதர்கள் தம் இடையே மெலிந்த பொருளாக விஜயநகரத்தில் காணப்பட்டது. வேறொரு மெலிந்த பொருள் எங்கும் காணப்படவில்லை.

66. விஜயநகரத்தில் கோயில் கொண்டிருக்கும் விருபாக்ஷர் தமது இருப்பிடமான கைலாயத்தை மறந்தார். விஜயநகரத்தைச் சூழ்ந்திருந்தது பம்பா நதி. குபேரனை ஒத்த செல்வம் படைத்தோர் அந்த நகரத்தில் வாழ்ந்து வந்தனர்.

**ச்லோகங்கள் 67 தொடங்கி 75 ஈறாக புக்கரைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. புக்கரின் மனைவியான தேவாயியைப் பற்றியும் கங்காதேவி குறிப்பிடுகிறாள்.**

67. அமராவதி நகரிலிருந்து ஆளும் இந்திரனைப்போல புக்கர் வலிமைமிக்க மன்னராக விளங்கினார்.

68. நண்பர்களுக்கு உதவி செய்வதிலும், திட்டமிட்டு செயல் படுதலிலும், அரசியல் ராஜதந்திரங்களைக் கையாளுவதிலும் புக்கர் சிறந்து விளங்கினார். மனுவின் மறுபிறப்போ என்று எண்ணுமளவிற்கு அவர் அரசாண்டு வந்தார்.

69. தர்ம, அர்த்த, காம புருஷார்த்தங்களாகிய மூன்றிலும் சிறந்து விளங்கியவராகிய புக்கர் அம்மூன்றினுள்ளும் தர்மத்தையே சிறந்த புருஷார்த்தமாகக் கொண்டிருந்தார். ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களில் ஸத்வம் ஒன்றையே தம்முடைய குணமாகக் கொண்டுள்ள விஷ்ணு வைப் போல அவர் விளங்கினார்.

70. அலம்புரிந்த நெடுங்கைகளாலே வேண்டுவோர்க்கு பொருள்களை வாரி வழங்கி வந்தார். அவருடைய செவிகள் சாஸ்த்ரார்த்தங்களையே கேட்டு வந்தன. அவருடைய முடியை சிவபெருமானுடைய அழகிய பாதங்கள் அலங்கரித்து வந்தன. இவற்றின் விளைவாக அப்பழுக்கற்ற செல்வம் நிரம்பப் பெற்றவராய்த் திகழ்ந்து வந்தார் புக்கர்.



71. விந்திய, மால்ய, அஸ்த மற்றும் ரோஹண மலைகளை எல்லைகளாகக் கொண்ட மன்னர்கள் புக்க மன்னருக்குத் தம் காணிக்கையைச் செலுத்தி வந்தனர். அவருடைய எதிரிகள் எப்போதும் நடுக்கம் கொண்டவர்களாய் இருந்து வந்தனர்.

72. தம் மூதாதையர்கள் வழிவந்த ராஜ்யத்தை எப்போதும் காத்து நிற்பவராய் திகழ்ந்து வந்தார் புக்கர். அவ்வாறு அவர் கடமை தவறாத மன்னராய் விளங்கிய போதிலும் பற்றற்றவராய் திகழ்ந்து வந்தார்.

73. ஸ்ரீமந்நாராயணனை விட்டு அகலாத மஹா லக்ஷ்மியைப் போலவும், தனது உடம்பில் பார்வதிக்கு பாதி இடம் கொடுத்த சங்கரனைப் போலவும் புக்கரானவர் தனது பட்டத்து மகிஷியாகிய தேவாயியைக் கொண்டிருந்தார்.

74. சந்திரனுக்கு மனைவிமார்கள் பலர் இருந்த போதிலும் ரோஹிணியை அவன் ப்ரதான மகிஷியாய்க் கொண்டிருப்பது போல புக்கருக்கு மனைவியர் பலர் இருந்த போதிலும் தேவாயியே அவர்கள் எல்லோரைக் காட்டிலும் புக்கரின் அன்புக்கு உகந்தவளாய் விளங்கி வந்தாள்.

75. வீரமிக்க புக்க மன்னர் விஜயநகரத்தில் தனது மனைவியாகிய தேவாயி உடன் தன் இளமையை பகிர்ந்துக் கொண்டிருந்தார். அன்புக்கு உகந்தவளாகிய அவளுடன் கூடியவராக எப்போதும் காணப்பட்டார்.

(இவ்வாறு 75 ச்லோகங்கள் கொண்ட மதுரா விஜயத்தின் முதற்காண்டம் நிறைவு பெற்றது.)

## இரண்டாம் காண்டம்

**ச்லோகம் 1 முதல் 13 ஈறாக தேவாயி கருவுற்றதும், கருவுற்ற காலத்தில் அவளுடைய ஆசைகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பது பற்றியும் விவரிக்கப் படுகின்றன.**

1. பிரமன் ப்ரபஞ்சத்தின் அண்ட வெளியில் அமர்ந்து இவ் வுலகங்களைப் படைப்பதுபோல் பட்டமகிஷியான தேவாயி தன் வயிற்றில் சங்கம குலத்தின் வாரிசைச் சுமந்து வந்தாள்.

2. இலையுதிர் காலத்தில் தாமரை மலர்கள் நீங்கப் பெற்ற குளத்தில் ஒளிரும் சந்திரனின் ஒளிக்கற்றைகள் போல அவள் வதனம் திகழ்ந்தது. கருவுற்ற காலத்தில் அதிக நகைகளை அரசி அணிந்து கொள்ளவில்லை. மெலிந்த இடையுடன் காணப்பட்ட அவள் சாரா செடி போல மெலிந்து காணப் பட்டாள். கருவுற்றதால் அவள் முகம் வெளிர் நிறத்தை அடைந்திருந்தது.

3. மண்ணையாளும் மன்னனான புக்கரின் மனைவி இம்மண்ணில் விளைந்த உட்கொள்ளக்கூடிய அனைத்துப் பொருள்களையும் உண்டாள். வயிற்றில் வளரும் கருவிற்கு இம்மண்ணையாளுவதற்கான பயிற்சியளிப்பதுபோல் இது காணப்பட்டது.

4. கருவுற்ற காலத்தில் அவளுடைய விருப்பங்களையும் ஈடு பாட்டையும் கண்டோர் அவளுக்கு பிறக்கப் போகும் மகன் வீரச் செயல்களைப் புரிபவனாக விளங்குவான் என்று எண்ணியிருக்கலானார்கள்.



5. விஜயநகரத்தைச் சூழ்ந்து ஓடும் துங்கபத்ரை நதியில் நீராட விருப்பங் கொள்ளாத தேவாயி தாமிரபரணி நதியில் அமிழ்ந்து நீராட விருப்பங் கொண்டாள். அவள் நீராடும்போது அவளுடன் கூடி நீராடும் யானைகள் நீரில் மூழ்குவதால் எழும் அலைகளில் அமிழ்ந்து நீராட விரும்பினாள்.

6. மலைக்குன்றின் உச்சியில் உலாவி வரும் மான்களை கட்டித் தழுவவேண்டும் என்ற ஆசை கொண்ட தேவாயியின் எண்ணம் ஈடேறவில்லை. ஆயினும் அவள் மனத்தளவிலே மால்ய மலையின் உச்சியில் உலாவிவரும் வலிமை மிக்க சிங்கங்களோடு வாழ்ந்து வந்தாள்.

7. மகாவிஷ்ணுவின் அவதாரங்களில் அவனுடைய நீரிடை உதவிச் செயல்களில் ஈடுபாடு கொண்டவளாக இருந்தாள் தேவாயி. ***(இந்த ச்லோகம் முழுமை பெறவில்லை சில பகுதிகள் விடுபட்டுள்ளன. )***

8. பூமியைத் தேராகவும், பிரமனை சாரதியாகவும், ஆதி சேஷனை வில்லின் நாணாகவும், மேரு மலையை வில்லாக வும், ஸ்ரீஹரியை அம்பாகவும் கொண்டு சிவபெருமான் திரிபுர ஸம்ஹாரம் செய்த செயலை நினைவில் கொள்ளும் போதெல்லாம் அவள் சிரித்து மகிழ்ந்தாள்.

9. நாட்கள் செல்லச் செல்ல அவளுடைய தசைமூட்டுகள் சதைப்பிடிப்புக் கொண்டனவாக விளங்கின. அவளுடைய கண்கள் கருமைநிறம் எய்தின. முகம் பொலிவுற்று விளங்கியது. அவளுடைய வயிற்றில் மடிப்புகள் தோன்றின. இவளுடைய இந்த எழில் தோற்றம் மன்னனின் மனதில் மட்டற்ற மகிழ்ச்சியை ஏற்படுத்தியது.

10. அவளுடைய அடிவயிற்றில் காணப்பட்ட மயிர்க்கற்றைகள் வயிற்றிலே வளரும் சிசுவினை பாதுகாக்கும் கருநாகங்கள்

போல தோற்றமளித்தன.

11. அவளுடைய மார்பகத்தில் அமைந்திருந்த கருமைநிறம் கொண்ட முலைத்தடங்கள் அழகுடன் காணப்பட்டன. சக்கர வாக பட்சிகள் உத்பல மலரை தம்முடைய் நீண்ட மூக்கின் அலகுகளிலே தாங்கிக் கொண்டிருந்தது போல் தோன்றியது அவளுடைய இந்தத் தோற்றம்.

12. தேவாயியைக் கார்காலத்து மேகங்கள் போலவும், முத்தைத் தன்னுள்ளே கொண்டிருக்கும் சிப்பியைப் போலவும், சந்திரன் எழுவதற்கு முன்பு தோன்றும் வான்வெளியைப் போலவும் பூமித்தாய் கண்டாள்.

13. இந்திரனைப் போல் விளங்கிய மன்னன் பெரும் செல்வம் படைத்திருந்தான். குடிமக்களின் நன்மை கருதியே அச்செல்வத்தைச் செலவிட்டு வந்தான். குறிப்பிட்ட முகூர்த்தத்தில் முன்னோர்கள் வகுத்த முறைப்படி அரச குடும்பத்தில் பும்ஸவனம் எவ்வாறு கொண்டாடப்பட வேண்டுமோ அவ்வாறு பும்ஸவனத்தைக் கொண்டாடினான்.

**ச்லோகங்கள் 14 முதல் 42 வரை வீரகம்பண்ணரின் பிறப்பும் அவனுடைய இளைய சகோதரர்களான கம்பண்ணர் மற்றும் சங்கமன் ஆகியோருடைய பிறப்பினை எடுத்துரைக்கின்றன.**

14. பார்வதி கார்த்திகேயனை ஈன்றெடுத்தது போல நல்ல தொரு வேளையில் தேவாயி ஆண்மகவு ஒன்றினை ஈன்றெடுத்தாள்.

15. திருப்பாற் கடலில் நிரம்பியிருக்கும் பாலின் வெண்மை போல் அரண்மனையெங்கும் ஒளிவீசியது.

16, பூக்களிலிருந்து மணத்தை அள்ளிக் கொண்டு வந்த



தென்றல் உலகாளப் பிறந்த வீரக்கம்பண்ணரை கண்டு அஞ்சி மென்மையாக வீசத் தொடங்கியது.

17. பஞ்சபூதங்களில் ஒன்றான அக்னி, பிறந்த வீரகம்பண்ணருடைய ஆட்சி காலத்தில் மக்களின் நல்வாழ்வு வேண்டி யாகங்கள் பல நடைபெற இருப்பதை எண்ணி மகிழ்ச்சி கொண்டான்.

18. வானுலகிலிருந்து கற்பக வ்ருக்ஷம் தன் மலர்களை மேகத்தின் ஊடே பொழிந்தன. இனிவரும் காலங்களில் தானதர்மங்களில் சிறந்து விளங்கப்போகும் வீரகம்பண்ணருடன் நட்புக்கொள்ள வேண்டுமென்பதற்காக முன்னதாகவே மலர்க் கொத்தினை அனுப்பி வைத்தது போல இச்செயல் காணப்பட்டது.

19. மதம் கொண்ட யானைகள் தம் கண்களில் பெருகி வரும் மதநீருடன் மகிழ்ச்சி கொண்டு ஆடத் தொடங்கின. எதிரியான சிங்கங்களை வேட்டையாடித் தமக்கு வாழ்வளிக்க ஓர் இளவரசன் பிறந்து விட்டான், என்று அவை மகிழ்வுற்றன.

20. குதிரைகள் பெருத்த குரலில் கனைத்துக் கொண்டு கால்களால் பூமியகைக் கீறின. இளவரசனான வீரகம்பண்ணன் தங்கள் முதுகில்மீது ஏறி விஜய யாத்திரையை மேற்கொள்வான் என்ற எண்ணத்தில் அவை குதூகலித்திருந்தன.

21. விஜயநகரமெங்கும் எக்காளத்தின் ஒலி நிரம்பியிருந்தது. வேதம் வல்ல அந்தணர்கள் வாழ்த்துரைகளாக மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தனர்.

22. மன்னன் தனக்கு மகன் பிறந்தத மகிழ்ச்சியை கொண்டாடும் பொருட்டு தன்னிடம் வருபவர்கள் அனைவருக்கும் சிறந்த பரிசுப் பொருட்களைக் கொடுத்தான்.

23. சிறையில் அடைபட்டிருந்த ஆயிரக்கணக்கான ஆயுட்கைதிகளின் சங்கிலிப் பிணைப்பு நீக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டனர். இவ்வாறு காலியான சிறைக்கூடங்களில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் எதிரிகளரன முகம்மதியர்களை அந்த சிறைகளில் அடைத்து வைப்பதற்காக இந்தக் கைதிகள் விடுவிக்கப்பட்டனர் போலும்.

24. புனித நீரில் நீராடி தூய வெண்பட்டுடுத்து, அந்தணர்களுக்கு அளவற்ற தானங்களை அளித்த பிறகு, புக்கர் தன் மகனின் மலர்ந்த முகத்தைப் பார்ப்பதற்கு வருகை தந்தான்.

25. இலையுதிர் காலத்தில் ஓடும் ஆற்றில் நீந்திச் செல்லும் அன்னப் பறவையின் பிடிப்பில் இருக்கும் குட்டி அன்னம் போல தேவாயியின் மடியில் தவழும் வீரகம்பண்ணராகிய குழந்தையைக் கண்டான்.

26 - 30. அந்த அறையில் வீசிடும் ஒளிக்கற்றைகள் கற்பூரத்தின் வெண்மை கொண்டு விளங்கின. தன் இரண்டு சிவந்த கைகளை கொட்டி விளையாடும் போது எதிரிகளின் செல்வத்தை தன் இருகைகளால் பிடித்து விளையாடுவது போலத் தோன்றியது. அந்தக் குழந்தையின் இருபாதங்களிலும் சங்கு, சக்கரம், குடை, தாமரைமலர், தோரணம் மற்றும் மீன் ஆகியவற்றின் வடிவங்கள் காணப்பட்டன. அந்தக் குழந்தையின் பிஞ்சு விரல்கள் சிவந்து காணப்பட்டன. அவை செந்தளிர் இலைகளை ஒத்திருந்தன. அந்தக் குழந்தையின் மார்பில் ஸ்ரீவத்ஸம் என்னும் மறு காணப்பட்டது. இந்தக் குழந்தை மகாவிஷ்ணுவின் ஓர்அவதாரம் எனக் கொள்ளலாம்படி இந்தச் சின்னங்கள் காணப்பட்டன. அவனுடைய நெற்றியில் காணப்பட்ட சுருண்ட கேசங்கள் எழில் தோற்றத்தை வெளிப்படுத்தின. அவனுடைய கண்கள் அப்போது அலர்ந்த தாமரை



மலர்களை ஒத்திருந்தன. எடுப்பான நாசியுடனும், புன்னகை தவழும் முறுவலுடன் காணப்பட்டான். அனைவரையும் வசீகரிக்கும் எழில் தோற்றம் கொண்டவனாய் அந்தக் குழந்தை விளங்கிற்று.

ச்லோகம் 31. அழகிய தேவதைபோல் காணப்பட்ட வீரகம்பண்ணனாகிய அந்தக் குழந்தையைக் கண்டபோது புக்கரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது.

ச்லோகம் 32. தன் கண்களால் குழந்தையை ஆரப்பருகிய மன்னன் உள்ளத்தில் பெருமிதம் கொண்டான்.

ச்லோகம். 33. ஓர் நன்னாளில் குருமார்கள் குறிப்பிட்டவண்ணம் குழந்தைக்கு ஜாதகர்மம் என்னும் சடங்கினைச் செய்தான் மன்னன். யாகாக்னியில் நெய்யை வார்த்திட அப்போது எழும்பும் தீப்பிழம்பு போல வளர்ந்து வந்தான் வீரகம்பண்ணனாகிய அந்தக் குழந்தை.

ச்லோகம். 34. எதிர்காலத்தில் ஈடு இணையற்ற வீரத்திருமகனாய் இவன் விளங்குவதோடு மட்டுமல்லாமல் தன்னை எதிர்த்து வரும் பகையரசர்களை இனிவரும் காலங்களில் வெற்றிகொள்வான் என்பதைக் கருத்தில் கொண்டு எதிர்காலத்தை நன்குணர்ந்த புக்க மன்னன் அந்தக் குழந்தைக்கு வீரகம்பண்ணன் என்று பெயர் இட்டனன் போலும்.

ச்லோகம் 35. யாகத்தில் அக்னிக்கு இடைவிடாது நெய்யைச் சொரிந்து அதனை வளர்க்கும் செயல்போலவும், பயிர்களை மேகமானது மழையைப் பொழிந்து காத்து வருவது போலவும் தகுதி வாய்ந்த தாதிமார்களைக் கொண்டு வீரகம்பண்ணனை வளர்த்து வரச் செய்தான் மன்னன்.

ச்லோகம் 36. வளர்ந்துவரும் அக்குழந்தையின்

மழலைச் சொல்லையும் இளம் பருவச் செயல்களையும் கண்டு மகிழ்ந்தான் மன்னன். நடைபயில்வதற்கும் பேசுவதற்கும் பயிற்சி அளித்து வரும் தாதிமார்கள் மன்னனின் செயல்கண்டு மகிழ்ந்தனர்.

ச்லோகம் 37. பற்கள் எழாத நிலையில் பால் மணம் வீசும் அப்பாலகனை ஓயாது முத்தமிட்டு மகிழ்ந்தனன் மன்னன். இது தாமரை ஓடையில் சஞ்சரிக்கும் அன்னங்கள் பூத்திருக்கும் அத்தாமரை மலர்களில் உராய்ந்து செல்லும் செயலை ஒத்து இருந்தது.

ச்லோகம் 38. வீரகம்பண்ணனாகிய, தேவதைக்கு ஒப்பான அச்சிறுவனை தன் மார்போடு அணைத்துக் கொஞ்சு கின்ற வேளையில் நிலவொளியோ, சந்தனக் குழம்போ அல்லது முத்துமாலையை அணிந்து கொள்ளும் போது ஏற்படும் உணர்வோ உடலுக்கு இத்தனை இன்பம் அளித் திடவில்லை என்பதை மன்னன் உணர்ந்தான்.

ச்லோகம் 39. இடையில் அணிவிக்கப்பட்ட பொன் மணிகள் ஒலிப்ப வீரகம்பண்ணனாகிய குழந்தை அரண் மனையில் தவழ்ந்து வரும்போது அமிர்தம் உண்டது போன்ற உணர்வினை அவன் தாய் தந்தையினர் பெற்றனர்.

ச்லோகம் 40. திருப்பாற்கடலை கடைந்தபோது அதில் தோன்றிய பாரிஜாதம் மற்றும் சிந்தாமணி போல் ராஜ மகிஷியான தேவாயி, வீரகம்பண்ணனை ஈன்றெடுத்தாள். (தேவாயிக்கு சில ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாம் கம்பண்ணன் மற்றும் சங்கமன் ஆகிய இருவர்களும் பிறந்தனர்.)

ச்லோகம் 41. வீரகம்பண்ணனையும் அவனுடைய



இரு சகோதரர்களையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்த போது அவர்கள் வளர்பிறைச் சந்திரனைப் போல தோற்ற மளித்தனர். இதுகண்டு குடிமக்கள் அளவிட இயலா இன்ப உணர்வு கொண்டனர்.

ச்லோகம் 42. புக்கர் தனது மூன்று மகன்ளோடு இருந்தது சந்திரன் சூரியன் மற்றும் அக்னி ஆகிய மூன்று கண்களைக் கொண்ட சிவன் போல தோற்றமளித்தது. சக்தி, துணிவு, அண்டினோர்க்குப் புகலிடம் தருவது ஆகிய உயர்ப்பண்புகளை கொண்டவனாகக் காணப்பட்டான் அவன். நற்பண்புகள் செல்வம், மனமகிழ்வு கொள்ளுதல், வாழ்க் கைக்கு மூன்று ஆதாரங்களாக அமைந்துள்ளதுபோல் அவன், தன்னுடைய மூன்று மகன்களோடு காட்சியளித்தான்.

**மதுராவிஜயத்தில் 2 -ஆம் காண்டம் முற்றிற்று.**

## மூன்றாம் காண்டம்

**ஒன்றுமுதல் இருபதாம் ச்லோகம் முடிய வீரகம்ப ண்ணன் பெற்ற போர்ப் பயிற்சிகள் விவரிக்கப்படுகின்றன. வீரகம்பண்ணன் கங்காதேவியை பட்ட மகிஷியாகவும் மற்றைய இளவரசிகளை அந்தப்புர நாயகிகளாகக் கொண்டமையும் இதில் விவரிக்கப் படுகின்றன.**

ச்லோகம் 1. 'தலையை மழுங்க சரைத்தல்' என்னும் அரசர்க்குரிய சடங்கு முடிந்தபிறகு தகுந்த குருமார்களைக் கொண்டு கல்வி புகட்டும் பணியை மேற்கொண்டான் மன்னன். நல்லறிவினைப் பெற்ற வீரகம்பண்ணன் அனைத்து கலைகளிலும் தேர்ச்சி பெற்றவனாக விளங்கினான். பெயரள விற்கே பாடம் போதிக்கும் ஆசிரியர்கள் இருந்து வந்தனர்.

ச்லோகம் 2. தந்தையாகிய புக்கரிடமிருந்து போர்ப் பயிற்சியினைக் கசடறக் கற்றான் வீரகம்பண்ணன். மிகச் சிறந்த ஆசிரியர்களிடம் போர்ப்பயிற்சியினைப் பெற்ற புக்கருக்கு இது மிகுந்த மகிழ்ச்சியினைத் தந்தது. வாளும் வில்லும் ஏந்திப் போரிடும் வீரகம்பண்ணனைக் கண்டு உள்ளம் பூரித்து நின்றான் புக்கர்.

ச்லோகம் 3. எப்போதும் உண்மைக்குப் புறம்பாக பேசாமல் அறவழியில் ஊன்றி நின்றான் வீரகம்பண்ணன். அம்பெய்வதிலும், குதிரைச்சவாரி செய்வதிலும், வாள் வீசுவதிலும் பஞ்சபாண்டவர்கள் தனித்தனியே தம் திறமையைக் காட்டியதுபோல் அல்லாது வீரகம்பண்ணன் பஞ்சபாண்டவர்களின் ஒருமித்த வீரத்தையும் விஞ்சி நின்றான்.

ச்லோகம் 4. வாலிபப்பருவம் எய்திய வீரகம்பண் ணன் யானைகள் அமிழ்ந்து நீராடும் மன்மதனாகிய ஏரி போல வும், காதலுக்கு அழைப்பு விடும் பூத்துக்குலுங்கும் மலர்கள் போலவும், நிலவொளியைக் கண்டு மகிழும் சகோரா பறவை போலவும் இளம் பெண்களுக்குக் காட்சி அளித்தான்.

ச்லோகம் 5. வாலிபப்பருவம் எய்திய வீரகம்ப ண்ணனின் உருவம் ஒளிபரப்பும் சூரியன் போலே காணப் பட்டது. பனிகாலத்திற்குப் பிறகு தோன்றும் சூரியன் போலே காணப்பட்டான் அவன்.

ச்லோகம் 6. அவனுடைய நடை யானையை ஒத்திருந்தது. காடுகளிலும், குகைகளிலும் வாழும் யானைகள் வீரகம்பண்ணனாலே தாங்கள் பிடிபடவேண்டும் என்பதற்கு முன்னோடியாக தங்கள் நடையினை அவனுக்குப் பரிசாக அளித்திருந்தது போல் தோன்றியது.



ச்லோகம் 7. வீரகம்பண்ணனுடைய உள்ளங்கையில் மீன் போன்றதொரு மறு காணப்பட்டது. காமதேவன் வீரகம்பண்ணனுடைய எழிலில் ஈடுபட்டு தன்னுடைய கொடியில் பதிக்கப்பட்டிருந்த மீன் சின்னத்தை பாத காணிக் கையாக கொடுத்துச் சென்றதுபோல் இது காணப்பட்டது.

ச்லோகம் 8. வீரகம்பண்ணனுடைய இடுப்புத் துணியில் ஒளிவீசிக்கொண்டிருக்கும் ரத்தினங்களைக் காணும்போது அஞ்சனக்குன்றினைச் சுற்றி வளைத்துக் கட்டப்பட்ட மணியாரம் போலே அது காட்சியளித்தது.

ச்லோகம் 9. அழகுற அமைந்த அவனுடைய இடை, சிங்கங்கள் அவனால் வேட்டையாடப்படுவதற்கு அஞ்சி தங்களுக்கே சொந்தமான இடையழகை கையூட்டுப்பணம் போலே வீரகம்பண்ணனுக்குத் தந்தனவோ என்று எண்ணும் படியாக இருந்தது.

ச்லோகம் 10. எழில்கொண்ட மாதர் தமக்கு அடைக் கலம் இந்த இடம்தான் என்று கொள்வதற்கு ஏற்ப அவனுடைய மார்பு விரிந்து அகன்று காணப்பட்டது.

ச்லோகம் 11. அவனுடைய நீண்டகரங்களின் முடிவில் செந்நிறம் கொண்ட விரல்கள் அமைந்திருந்தன. வலிமை மிக்க மன்னனின் கரங்களைக் கண்ட மக்கள் இவை நம்மைக் காப்பாற்ற உதவும் என்ற எண்ணம் கொண்டனர்.

ச்லோகம் 12. ஒளி பொருந்திய சந்திரனில் எவ்வாறு களங்கம் காணப்படுகிறதோ அவ்வாறே ஒளி பொருந்திய வீரகம்பண்ணனின் முகத்தில் அரும்பிய மயிர்க்கற்றைகள் காணப்பட்டன.

ச்லோகம் 13. தாமரையையொத்த அவனுடைய

கண்களின் ஓரத்தில் காணப்பட்ட செம்மை, பரந்து விரிந்த கண்களின் ஓட்டத்தைத் தடை செய்யும் காதுகள்மீது கொண்ட சினத்தை வெளிப் படுத்துவதுபோலத் தோன்றியது.

ச்லோகம்14. அவனுடைய நீண்ட நாசியானது இரு கண்களுக்கு இடையே அமைந்துள்ள தடுப்புச் சுவர் போலக் காணப் பட்டது.

ச்லோகம் 15. இளவரசனாகிய வீரகம்பண்ணன் நீண்ட தலை முடியினைப் பெற்றிருந்தான். அந்த முடியினை அவன் ஒழுங்கு படுத்தி அதிலே சிவந்த மலர்களைச் சூடியிருந்த கோலமானது அழகான மகளிரது இதயங்களைப் பறித்து தன் குழலிலே சூட்டிக்கொண்டதைப் போலக் காணப்பட்டது.

ச்லோகம் 16. இளவரசனின் மேனி எழிலும், அவனுடைய தீர, வீரச் செயல்களும் ஒன்றுக்கொன்று போட்டியிட்டுக் கொண்டு வளர்ந்து வந்தன. அவ்வாறே அவனுடைய கண்களும், புகழும் கூர்மை பெற்றன. அவனுடைய கழுத்து அவன் எண்ணங்களைப் போலே பெருத்து வந்தது. அவனுடைய மனமும், வாக்கும் தெளிவு பெற்றன.

ச்லோகம் 17. புக்க மன்னன் தன்னுடைய இளவரசன் யௌவன பிராயத்தை அடைந்ததால் பலநாட்டு இளவரசிகளை மணம் செய்வித்தான். மழைக்காலத்தில் பெருகி வரும் வெள்ளப் பெருக்கோடு கடலரசனோடு கலக்கும் நதிகள் போலே, காதலிமார் அவனோடு கலந்து இன்பம் துய்த்தனர்.

ச்லோகம் 18. இந்திரனுக்கு சசி போலவும், வில்லேந்திய விஷ்ணுவிற்கு ராமாவான லக்ஷ்மி போலவும் , சிவனுக்கு பார்வதியைப் போலவும் ---- (இந்த ச்லோகம் முழுமையான வடிவில் கிடைக்கவில்லை.)



ச்லோகம் 19. இளவரசனும், அவனுடைய அழகான மனைவி மார்களும் மகிழ்ச்சி மிகுந்ததொரு இல்லற வாழ்வினை மேற்கொண்டு வந்தனர். இவர்களுக்கு இடையே இருந்த காதலைக் கண்டு தேவர்களும் பொறாமை கொண்டனர்.

ச்லோகம் 20. "வீரத்தின் உருவமாய்த் திகழ்ந்து நின்ற வீரகம்பண்ணனிடம் மன்னனாகிய புக்கர் சில அறிவுரைகளைக் கூறினார். வீரகம்பண்ணனின் புகழ் நிலைத்து நிற்பதற்கான செயல்களை அவன் மேற்கொள்ள வேண்டும் என்று அவர் அறிவுறித்தினார்".

**ச்லோகங்கள் 21 தொடங்கி 48 ஈறாக தென் தமிழ் நாட்டின்மீது படையெடுத்து வீரகம்பண்ணன் மேற்கொள்ள வேண்டிய பணிகளைக் குறிப்பிடுகின்றன. காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சம்புவராயர்களை தோற்கடிப்பது அவருடைய முதன்மைச் செயலாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுவதை இந்தப் பகுதியில் காணலாம்.**

ச்லோகம் 21. "வீரகம்பண்ணரே! இளம் வயதில் வீரம் மிக்க இளைஞர்களை இருள் சூழ்ந்திருக்கும். அந்த இருள் நீங்க வேண்டுமானால் சான்றோர்கள் ஏற்றும் அறிவு என்னும் சுடரின் ஒளி பரவ வேண்டும். நீர் நான் சொல்வதைக் கவனத்துடன் செவி மடுக்க வேண்டும்" என்று புக்கர் நல்லுரைகளைக் கூறத் தொடங்கினார்.

ச்லோகம் 22. "அறிவுமிக்க சான்றோர்கள் குருவின் உபதேசத்தை விலைமதிப்பற்ற, அதேசமயம் சுமையற்றதொரு காதுவளையம் போலே ஏற்றுக்கொள்வர். குருவின் உபதேசத்தை நிறமற்ற, ஆனால் விரைந்து நிவாரணம்

அளிக்கக்கூடிய மருந்து போலக் கொள்வர். தன் புலன்களை அடக்கிச் செய்யும் தவத்தை விட பயனளிக்க வல்லது குருவின் உபதேசம் என்பதை ஆன்றோர்கள் நன்கறிவர்"

ச்லோகம் 23. "மூர்க்கர்கள் ஆன்றோர்களின் நற்சொற்களை மதித்து நடப்பதில்லை. மமதை என்னும் போதை ஏறியிருப்பதால் அவர்கள் கண்கள் மயக்கமுறுகின்றன. அவர்கள்மீது பாவம் என்னும் தூசிப்படலம் படிந்திருப்பதால் அழுக்குடம் போடு காணப்படுகின்றனர். உறுதியாக நடப்பட்ட கம்பத்தில் கட்டப்பட்டவர்கள் போல் அவர்கள் காணப்படுகின்றனர். மொத்தத்தில் இவர்கள் மதம் பிடித்த யானைகள் போல் காணப்படுவர்".

ச்லோகம் 24. "இளமை என்னும் இருள் சூழப்பெற்ற இளைஞன் நட்சத்திரங்கள் இல்லாத வானம்போலே காணப்படுவான். இவ்வாறு இருக்கும் இளைஞர்களின் வாழ்வில் சந்திரனின் ஒளிக்கதிர்கள் எவ்வாறு தோன்றும்? இளமைப் பருவத்தில் அழகு மங்கையரின் புணர்ச்சியை விரும்பும் நிலையைத் தாண்டி வாழ்வது இயலாததொன்றாகும்".

ச்லோகம் 25. "யான் எனது என்றிருப்பானுடைய மமதை ஆகிற மரத்திலிருந்து உதிரும் நச்சுக்கனிகள் கருணை என்னும் ஊற்றுகளால் அழிக்கப்படுகின்றன. யௌவனப் பிராயத்தை ஒருவன் அடையும்போது அறிவு என்னும் சுடர் மங்கத் தொடங்குகின்றது. இருள் மெல்ல மெல்ல அவன் எண்ணங்களை மூடுகின்றது. அந்நிலையில் அவன் நல்லது எது தீயது எது? என்பதை அறிய இயலாமல் போகின்றான்".

ச்லோகம் 26. "விவேகமற்ற இளைஞர்களும், செல்வச் செருக்குற்ற மன்னர்களும் தங்கள் மனம் போன வழியே செயல்களைச் செய்ய முற்படுவர். இவ்வாறு இவர்கள் செயல்படுவதால் ஆபத்தின் பிடியில் சிக்கிக்கொள்வர். முழு சந்திர க்ரஹணத்தின் போது அவனை விழுங்கும் ராகுபோலே இவர்கள் ஆபத்தின் பிடியில் சிக்கிக்கொள்வர்".



ச்லோகம் 27. "அறிவுசான்ற பெருமக்கள் இழுக்குற்ற பெண்களின் சொற்களில் மயக்கம் கொள்ளார். அத்தகைய தொரு செயல் துள்ளி ஓடும் மான்கள் தாமே சென்று வலையில் அகப்படும் செயலை ஒத்ததாகும்".

ச்லோகம் 28. "சூதாட்டத்தில் ஈடுபட்டவனின் நிலம், ஆபர ணங்கள், விலைமதிப்பற்ற பொருள்கள், அவன் உடம்பு, மனைவி மக்கள் ஆகிய அனைத்தும் அவனது உடைமைகளாக இருப்பதில்லை. சூதாட்டத்தில் அவன் இவற்றைப் பணயம் வைத்துத் தோற்கக்கூடும்".

29. "அறிவுடைய எவனும் ஆக்ரோஷங்கொண்ட வனவிலங்குகளை வேட்டையாடச் சென்று தன் உயிரை மாய்த்துக் கொள்ள மாட்டான். ஒரு புதைகுழியில் வீழ்ந்து சிறைபடும் மதயானை போல துன்பப்படாமல் மன்னர்கள் விழிப்புடன் எப்போதும் செயல்பட வேண்டும்."

ச்லோகம் 30. "இளமை என்னும் போதை தலைக்கேற செல்வம் என்னும் பெண்ணின் மயக்கத்தில் மதி கலங்கி இருப்பவன், மேலும் போதையை அளிக்கக்கூடிய மதுவை விரும்புவானா? விஷ ஜுரத்தால் பாதிக்கப்பட்ட ஒருவனை இன்னொரு வகை ஜுரம் தாக்கினால் என்ன கேடு விளையுமோ? அதை இவன் அடைவான்".

ச்லோகம் 31. "ஒருவன் எத்தகைய நற்செயல்களைச் செய்திடினும் அவனுக்கு நாவடக்கம் தேவை. இன்சொற்களையே எப்போதும் ஒருவன் கூற முற்பட வேண்டும்.

கருணைமிக்க மேகமானது நீர்த் துளிகளைச் சொரிவது வரவேற்கத் தகுந்த செயலே ஆயினும், அப்போது வெளிப்படும் மின்னலையும் இடியோசையையும் கண்டு அஞ்சுவது போல இவன் செயல் அமைந்திடும்''.

ச்லோகம் 32. ''குடிமக்கள் மன்னனுடைய விலை மதிப்பற்ற செல்வங்களாவர். அத்தகையதொரு நிலையில் அவர்களுக்கு நீதியற்ற முறையில் தண்ட னைகளை அளித்திடக் கூடாது. ஒரு மரத்தின் மேலேறி அதன் அடிப்பாகத்தை வெட்ட முற்பட்டால் என்ன விளையுமோ? அதைப் போலத்தான் நீதியற்ற முறையில் நாட்டை ஆள்வது''.

ச்லோகம் 33. ''அறிவற்ற ஒருவன்தான் அஞ்ஞானத் தால் கண்கள் மூடப்பெற்றுத் தகுதியற்றோர்க்கு தன் செல்வத்தைத் தானமாக அளித்திடுவான். தர்மத்தைக் காப்பதற்கு செல்வம் இன்றியமையாததொரு சாதனமாகும். ஆனால் அத்தகைய செல்வத்தைக் கொண்டு யாகங்களைச் செய்யவேண்டுமே ஒழிய சுடுகாட்டில் இறந்த பிணத்தின் மீது பரவியிருக்கும் நெருப்பை வளர்ப்பதற்கு வார்க்கும் நெய் போல அதனைப் பயன்படுத்தக் கூடாது''.

ச்லோகம் 34. ''அறியாமையால் சூழப்பட்ட மன்னர்கள் எதிரிகளின் ஏச்சுக்கு இலக்காவர். அறியாமையின் விளைவால் இவர்களைப் பற்றிக்கொள்ளும் தீய ஒழுக்கங்கள் அவர் களுடைய அரசியல் வாழ்வை சூன்யமாக்கும்''.

ச்லோகம் 35. ''முற்பிறவியில் செய்த நற்தவத்தின் பயனாக இப்பிறவியில் இவர்களுக்கு ஏற்பட்டுள்ள நற்குணங் களையும் செல்வத்தினையும் தீய ஒழுக்கம் கொண்டோர் இழந்து விடுவர். ஒரு குரங்கின் கையில் கொடுக்கப்பட்ட



பூமாலையை அதன் பெருமை தெரியாத குரங்கு அதிலுள்ள பூக்களைக் கிள்ளி எறிவது போல தீய ஒழுக்கம் கொண்டோர் நிலையற்ற மனநிலையைக் கொண்டோராக விளங்குவதால் தாங்கள் பெற்றுள்ள செல்வத்தை அழித்திடுவர்''.

ச்லோகம் 36. ''வீரகம்பண்ணரே! நீர் உம்முடைய இளமைக் காலத்தில் நல்லொழுக்கம் கொண்ட குருமார்களால் வழிகாட்டப் பட்டதால் தீய ஒழுக்கங்களினின்றும் உம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் வலிமை கொண்டவராக விளங்கு கிறீர். எக்காலத்திலும் நன்னெறிகளின் வழிநின்று செயல் படுவீராக''.

ச்லோகம்37. ''அறிவுசால் ஆசிரியர்களால் உருவாக்கப் பட்ட நீர் வீரத்தைக் கைக்கொள்ளுமுன் அந்தச் செயலால் விளையக் கூடிய சாதக, பாதகங்களை நன்றாக ஆராய்ந்து செயல்படவேண்டும். வீரச் செழுமையை அளிக்கக்கூடிய தேவதையானவள் அவளுக்கே உரிய சலன புத்தியால் உம்மைவிட்டு அகலா வண்ணம் நீர் உம்முடைய வீரச் செயல்களை மேற்கொள்ள வேண்டும்''.

ச்லோகம் 38. ''எனது அன்புக்குரிய குமாரரே! வீரத்திற்குப் பெயர்போன மன்னர்களும் நம்முடைய மூதாதை யர்களுக்கு நெருக்கமுடையவர்களாகவும், உள்ளத்தில் தூய எண்ணம் கொண்டவர்களாகவும், அடக்கமே உருக் கொண்ட வர்களாகவும் விளங்கியோர் உன் அருகில் நம் எதிரிகளை பழிவாங்குவதற்காக என்னுடைய வேண்டு கோளின்படி உதவி செய்ய வந்துள்ளனர்''.

ச்லோகம் 39. ''வீரகம்பண்ணரே! உம்மைச் சூழ்ந்து உள்ள காலாட்படை கடல்போல் காட்சியளிக்கின்றது. ஆயிரக்

கணக்கான குதிரைகள் அந்தக் கடலில் காணப்படும் அலைகள்போல் காட்சி அளிக்கின்றன. மதம்பிடித்த யானை களின் கூட்டம் அந்தக் கடலில் ஆங்காங்கே காணப்படும் தீவுகள்போல் காணப்படுகின்றன. எதிரிகளின் படையை அழிக்க வல்ல ஆயுதங்கள் அந்தக் கடலில் நிறைந்திருக்கும் சுறாமீன்கள் போன்று காணப்படுகின்றன''.

ச்லோகம் 40. ''இந்திரன் சிறகுகள் கொண்ட மலை களின் செருக்கை அடக்கியதுபோல் நீரும் உமது ஆண்மை மற்றும் வீரத்தின் துணைகொண்டு எதிரிகளை வென்றிடு வீராக''.

ச்லோகம் 41. ''வீரகம்பண்ணரே! பெரும் படையோடு புறப் பட்டு நம்மீது படையெடுப்பதற்கான ஆயத்தங்களை மேற் கொண்டு வரும் தொண்டை மண்டல சம்பு வராயர்களை போரில் வென்றிடுவீராக! காஞ்சீபுரத்தில் நமது ஆட்சியை நிலைநாட்டி அங்கு வாழும் மக்கள் நம்மை ஏற்றுக் கொள்ளும் வண்ணம் நீர் ஆட்சி புரிய வேண்டும். அழகாபுரி நகரத்தை ஆட்சி செய்து வரும் குபேரனைப் போல நீர் தொண்டை மண்டலத்தில் விளங்க வேண்டும்''.

ச்லோகம் 42. ''அதன்பிறகு குறுநில மன்னர்களான வன்னியர்களை உம்முடைய கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தால் துலுக்கர்களின் ஆட்சியை அகற்றிடலாம். ஒரு மரத்தின் அனைத்துக் கிளைகளிலும் பரவிய தீ அந்த மரத்தின் அடிப் பகுதியை எளிதாக எரித்திடும் தன்மை கொண்டத ன்றோ!''

ச்லோகம் 43. ''மதுரை சுல்தான்கள் இராவணனுக்கு ஒப்பாவர். நீர் இராமராகத் திகழ்ந்து மக்களைத் துன்பத்



திலிருந்து விடுவிக்கவேண்டும். உலக நன்மைக்காக இந்தச் செயலை நீர் மேற் கொள்ளவேண்டும்''.

ச்லோகம் 44. இவ்வாறு வீரகம்பண்ணருக்கு அவரு டைய தந்தையான புக்கர் நன்மை பயக்கக்கூடிய உபதேச த்தைச் செய்த பிறகு அவர் மழை பொழிந்தபிறகு காணப்படும் மேகத்தைப் போன்று காணப்பட்டார். இளவரசரான வீரகம்பண்ணரும் தந்தையார் கூறிய நீதிகளை தம் உள்ளத்தில் கொண்டு தலை வணங்கி நின்றார்.

ச்லோகம் 45. இவ்வாறு தனது குமாரனுக்கு நன்னெறி களை எடுத்துக்கூறிய புக்கர் தாம் அணிந்திருந்த விலை மதிப்பற்ற ஆபரணங்களை வீரகம்பண்ணனுக்கு சூட்டி மகிழ்ந்தார். நாளையே காஞ்சியை நோக்கி பெரும் படையோடு புறப்பட்டுச் செல்லவேண்டும் என்று ஆணையிட்டார். நெஞ்சில் நிறைந்த மகிழ்ச்சி பொங்க தனது அரண்மனைக்குச் சென்று சேர்ந்தார் புக்கர்.

ச்லோகம் 46. இவ்வுலகத்தைத் தாங்கும் ஆதி சேஷனுக்கு, உன்னுடைய சுமையைக் குறைப்பதற்கு அதாவது அதர்மத்தின் வழி நின்றோரை அழிப்பதற்கு வீரகம்பண்ணர் பெரும்படையோடு புறப்பட்டுவிட்டார் என்பதைச் சொல்லுவதற்கு விரைவாகச் சென்றது போல் காணப்பட்டது சூரியன் மேற்கு திசையில் மறைந்த நிகழ்ச்சி.

ச்லோகம் 47. வீரகம்பண்ணர் தம்முடைய ஸாயங்கால வழிபாடான ஸந்த்யாவந்தனத்தை முடித்துக்கொண்டு படைத் தலைவர்களுக்கு உரிய ஆணைகளைப் பிறப்பித்து விட்டு அந்தப்புரத்திற்கு விரைந்து சென்றார்.

**மதுரா விஜயத்தில் மூன்றாம் காண்டம் முடிவுற்றது.**

## நான்காம் காண்டம்

**ச்லோகங்கள் 1 முதல் 16 வரை காஞ்சியை ஆண்டுவந்த சம்புவரையர்மீது படையெடுப் பதற்கான ஆயத்தங்களைக் கூறுவதாக அமைந்து உள்ளன.**

ச்லோகங்கள் 1 மற்றும் 2. மறுநாள் தாமரை மலரை அலர்த்துபவனும், இந்த அண்டத்தில் விளங்கும் ஒப்பற்ற ஒளிவிளக்காகத் திகழுமவனான சூரியன் கிழக்கு திசையில் உதித்தான். உறக்கத்திலிருந்து எழுந்த வீரகம்பண்ணர் தம்முடைய காலை வழிபாடுகளை முடித்துக் கொண்டு படைத்தலைவர்களைப் போருக்குப் புறப்படுவதற்காக அணி வகுத்து நின்றிடுமாறு கட்டளையிட்டார்.

ச்லோகம் 3. முரசங்கள் எழுப்பிய ஒசையானது திருப் பாற்கடலை மந்திர மலைகொண்டு கடைந்தபோது எழுந்த ஓசையைப் போல அனைவர் செவிகளிலும் ஒலித்தது.

ச்லோகம் 4. மஹாப்ரளயத்தின் போது **சண்டிசாவின் முரசிலிருந்து** வெளிப்பட்ட ஊழிகாலத்தின் பெருத்த ஒலிபோல் அமைந்திருந்தது படைகளின் ஆரவாரம். நிமிடத்திற்கு நிமிடம் சேனைகள் படையெடுத்துச் செல்லும் ஒலி பெருகிக் கொண்டே இருந்தது.

ச்லோகம் 5. வளர்ந்துகொண்டே சென்ற இந்த ஒலியானது மலைகளில் பட்டு எதிரொலித்தன. ஆங்காங்கே குகைகளில் பாதுகாப்பாக ஒளிந்து கொள்ளலாம் என்று எண்ணியிருந்த பகை மன்னர்கள் மனதில் அச்சத்தை அந்த ஒலி தோற்றுவித்தது.

ச்லோகம் 6. வீரமுரசுகளிலிருந்து வெளிப்பட்ட



ஒலியானது பூமியை ஊடுருவிச் சென்றது. இந்த உலகத்தைத் தாங்கி நிற்கும் ஆதிசேஷன் கண்களை மூடிக் கொண்டான். அதனால் அவன் காதும் செயலிழந்தது. (பாம்பினத்திற்கு கண்களே பார்ப்பதற்கும், கேட்பதற்கும் பயன்படும் அவயவமாகும்.)

ச்லோகம் 7. அம்பாரியால் அலங்கரிக்கப்பட்ட யானை களும், சேணம் பூட்டப்பட்ட குதிரைகளும், கவச உடை யணிந்த காலாட் படையினரும் அணி வகுத்து நின்றனர்.

ச்லோகம் 8. போரில் பயிற்சி பெற்ற நூற்றுக் கணக்கான யானைகள் தங்கள் கன்னப் பொறியிலிருந்து மதநீர் ஒழுக அணி வகுத்து நின்றிருந்தன.

ச்லோகம் 9. குதிரைகள் தங்கள் வாயிலிருந்து நுரை கக்க நின்று கொண்டிருந்தன. காற்றின் வேகத்தை விஞ்சக் கூடிய அளவிற்கு செல்லக்கூடிய அவைகள் அசைந்து நிற்பது சேனையாகிய பெருங்கடலின் அலைகள் போல தோற்றம் அளித்தன.

ச்லோகம் 10. பல்வேறு நாட்டைச் சார்ந்த காலாட் படை வீரர்கள் இடையில் வாட்களையும், கையில் கேடய ங்களையும் வில்லும் அம்புகளையும் தரித்து நின்றிருந்தனர்.

ச்லோகம் 11. வீரத்தில் புகழ்மிக்க குறுநில மன்னர்கள் தக்க உடையணிந்து வீரகம்பண்ணரின் வருகையை நோக்கி அரண்மனை வாயிலில் காத்திருந்தனர்.

ச்லோகம் 12. சேனைப் பெரு வெள்ளத்தில் காணப் பட்ட வெண்குடைகள் பேராற்றில் காணப்படும் வெண் தாமரைகளை ஒத்திருந்தன. எங்கும் சேனை வெள்ளம் போல் நிரம்பியிருந்தது. வெற்றித் திருமகளுக்கு கண்ணாடி

காண்பிப்பதுபோல் வெண் கொற்றக் குடைகள் காணப் பட்டன.

ச்லோகம் 13. அணிவகுத்துச் சென்ற படைவீரர்களின் நடையை இலையுதிர் காலத்துச் சூழலுக்கு ஒப்பிட்டால் மன்னர்கள் யானைகள் மீது செல்லும் போது இரு மருங்கிலும் வீசப்படும் வெண் சாமரங்கள், அன்னங்கள் இலையுதிர் காலத்தில் சஞ்சரிப்பது போல் காணப்பட்டன.

ச்லோகம் 14. சூரியனின் ஒளிக்கற்றைகளின் ஒரு பகுதியான சிவப்பு நிறத்தின் ஒளிக்கற்றைகளோடு மன்னர் களின் மணிமுடிகளில் இருந்த இரத்தினங்கள் மீது பட்டுத் தெறித்து ஒளிக்கற்றைகள் ஒன்று சேர்ந்தன. மலர்கள் ஒன்றோடு ஒன்று பிணைந்து கொத்துக் கொத்தாகக் காட்சியளிப்பது போன்று இந்த ஒளிக்கற்றைகள் காணப்பட்டன.

ச்லோகம் 15. அணிவகுத்துச் சென்ற படைவீரர்கள் கையில் ஏந்திய கொடிக்ககம்பங்கள் வானை முட்டுமளவு உயரத்திற்கு ஏந்திச் செல்லப்பட்டன. இதனால் சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தன் தேரை வானில் செலுத்துவதற்கு பெரிதும் இடர்ப்பட்டான்.

ச்லோகம் 16. குதிரைகளின் கனைப்பும், யானைகளின் பிளிறலும் படையெடுத்துச் செல்லும் வீரர்கள் கொட்டிய முரசின் ஒலியும் ஒன்றோடொன்று கலந்து புதியதொரு ஒலி எங்கும் நிறைந்திருந்தது.

**ச்லோகங்கள் 17 முதல் 35 வரை சோழ, சேர, பாண்டிய மன்னர்கள் பின் தொடர இளவரசர் வீரகம்பண்ணர் படையெடுப்பதற்கு புறப்பட்டுச் சென்ற வைபவத்தைப் பகர்கின்றன.**



ச்லோகம் 17. சோதிடக் கலையில் ஆழ்ந்த பயிற்சி கொண்ட வனாய் விளங்கிய போதிலும், படையெடுத்துச் செல்வதற்குத் தகுந்ததொரு நேரத்தை சோதிட வல்லுநர்கள் குறிப்பிட்டுச் சொல் வதற்காகத் தன் படையுடன் காத்திருந்தான் வீரகம்பண்ணன்.

ச்லோகம் 18. அனைவருக்கும் முன்பாக வீரலக்ஷ்மியை தழுவத் துடிக்கும் தனது வலது கரம் நிலை கொள்ளாமல் இருப்பதை உணர்ந்தான் வீரகம்பண்ணன்.

ச்லோகம் 19. வேள்விக்குண்டத்தில் அக்னியின் மீது நெய்யைச் சொரியும் போது மந்த்ரங்களை உச்சரிப்பது போல், வேதம் வல்ல அந்தணர்கள் அதர்வண வேதத்தை ஓதிக் கொண்டிருந்தனர். இவர்களின் இந்தச் செயல் எதிரிகளை வெல்வது உறுதி என்ற எண்ணத்தைத் அனைவர் உள்ளத் திலும் தோற்றுவித்தது.

ச்லோகம் 20. வீரகம்பண்ணன் தன்னுடைய அரண்மனையை விட்டு வெளியே வந்தான். அங்கே அவன் வருகைக்காக உயர் சாதிக் குதிரை ஒன்று தயார்நிலையில் நிற்பதைக் கண்டான்.

ச்லோகம் 21. கருடனுக்கு இணையான வேகம் கொண்டவன் போலேயும், மனோ வேகத்தின் உறவினன் போலேயும், வாயுவிற்குத் தோழன் போலேயும் காணப்பட்ட அந்த குதிரை "**வேகம்**" என்னும் தேவதையோடு கூட்டுச் சேர்ந்தது போலக் காணப்பட்டது.

ச்லோகம் 22. இந்த நிலவுலகின் பரப்பளவு தன்னுடைய வேகத்தை வெளிப்படுத்துவதற்கு எந்த வகையிலும் உரிய இடம் இல்லை என்று எண்ணியிருந்த

அந்த குதிரையின் மேல் அமர்ந்தான் வீரகம்பண்ணன். தன் கால்களால் அதை உதைத்து மேலும் விரைவுடன் செல்லுமாறு செய்தான் மன்னன்.

ச்லோகம் 23. இந்திரனுடைய குதிரையின் வேகத்தையும் விஞ்சி செல்லக்கூடிய அந்தக் குதிரையானது பளிங்குபோல் தெளிந்த சுவர்களில் தன் நிழலுருவைக் கண்டு அதைத் தாக்குவதற்காக விரைந்தோடிச் சென்றது.

ச்லோகம் 24. வாயில் நுரையுடன் கனைத்துச் சென்ற அந்தக் குதிரையின் வேகம் உப்புக்கடலைக் கடந்த ஹனுமானின் செயலைப் பழிப்பது போன்று காணப்பட்டது.

ச்லோகம் 25. வாயில் கடிவாளத்துடனும், இளம் தளிர் இலைகளின் நிறத்தை ஒத்த இருக்கைகள் அதன் முதுகிலும் இருந்த தோற்றமானது கருடன் வாயில் காணப்படும் பாம்பு போலேயும் பறந்து செல்ல உதவும் இறக்கைகள் போலேயும் காணப்பட்டன.

ச்லோகம் 26. ஓடும் அந்த குதிரையின் வால் அங்குமிங்கும் அசைந்தது, வேகம் என்னும் குருவிடம் பணிந்து பாடம் கேட்கும் சிஷ்யன் போலே காணப்பட்டது.

ச்லோகம் 27. தன் வேகத்தைக் கட்டுக்குள் வைத்துக் கொள்ள அந்தக் குதிரையானது தன் தலையை அவ்வப்போது நிமிர்த்திடும் போதும் சாய்த்திடும்போதும் தன்முன் தோன்றிய வீரலக்ஷ்மிக்கு வணக்கம் செலுத்துவது போல் காணப்பட்டது.

ச்லோகம் 28. அந்தக் குதிரை தன் கால் குளம்புகளைக் கொண்டு பூமியைக் கீறியதால் வானில் ஓர் புழுதி மண்டலம் எழுந்தது. இதன் விளைவாக வானில் ஓர் சாலையமைக்கப் பட்டது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியது. சூரியனின்



குதிரைகள் காற்று மண்டலத்தில் திக்கு முக்காடிச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது என்றதொரு பொய்யைச் சொல்லிச் சமாளித்தன.

ச்லோகம் 29. இந்தக் குதிரையின் மேல் அமர்ந்து சென்ற வீரகம்பண்ணன் சக்தியின் வடிவே போல் தோன்றினான். அவன் முகத்தில் தோன்றிய மந்தஹாஸம் படையெடுத்துச் செல்வதற்கு முன்பே இந்நிலவுலகு அவன் கை புகுந்ததை வெளிப்படுத்தியது.

ச்லோகம் 30. பல்வேறு தேசங்களிலிருந்தும் கணக்கில் அடங்கா படைகள் வந்து குவிய அவை முன்னே செல்ல அனைத்துப் படைகளையும் நோக்கிக் கொண்டு ஊரின் எல்லைப் புறத்தை அடைந்தான் மன்னன்.

ச்லோகம் 31. இவன் குதிரையில் செல்லும் போது மணிமுடி தரித்த மன்னர்கள் தலையைத் தாழ்த்தி கைகளைக் கூப்பி அவனுக்குத் தம் வணக்கத்தைத் தெரிவித்தனர்.

ச்லோகம் 32. எங்கும் மங்கல ஒலி கேட்க, சோழ, சேர, பாண்டிய மன்னர்கள் தங்கள் கைகளில் கொடியேந்தி அவன் முன் சென்றனர்.

ச்லோகம் 33. மேகங்கள் மலை உச்சி மீது பட்டு மழை நீரைச் சொரிவதுபோல வீரகம்பண்ணன் செல்லும் இடமெல்லாம் முதுமைப் பிராயம் அடைந்த மணமான பெண்மணிகள் நன்கு முதிர்ந்த தானியங்களை அவன் மீது இறைத்து அவன் வரவைக் கொண்டாடினர்.

ச்லோகம் 34. இவ்வாறு வீரகம்பண்ணன் படையோடு புறப்பட்டு வருகிறான் என்ற செய்தி கேட்ட எதிரிகள் நடுக்கமுற்றனர். அதனால் மால்யப் பர்வத்தின் ஒரு பகுதிக்கு ஓடிச் சென்று ஒளிந்து கொண்டனர்.

**ச்லோகங்கள் 35 தொடங்கி 46 ஈறாக கர்நாடகப் படை அணிவகுத்துச் சென்ற வைபவத்தைத் தெரிவிக்கின்றன.**

ச்லோகம் 35. பலம் பொருந்திய மாபெரும் சைன்யத்தை நடத்திச் செல்லும் வீரகம்பண்ணன் கீழைக் காற்றானது தன்னுடன் இருண்ட மேகங்களை இழுத்துச் செல்வது போல் காணப்பட்டான்.

ச்லோகம் 36. இந்தப் படைகளின் அணிவகுப்பால் எழுந்த புழுதி மண்டலம் ஆதிசேஷனுடைய சுமையை ஓரளவு குறைத்தது. இந்த சுமைக்குறைவால் வீரகம்பண்ணருடைய படை வீரர்களின் சுமையை அவன் தாங்க முடிந்தது.

ச்லோகம் 37. இவ்வாறு எழுந்த இந்தப் புழுதி மண்டலம் ஒரே சமயத்தில் இரண்டு கிரஹணங்களைத் தோற்றுவித்தது போன்றதோர் உணர்வினை ஏற்படுத்தியது. எதிரிகளின் புகழுக்கு ஒப்பான சந்திரனின் கிரணங்கள் இந்தப் புழுதி மண்டலத்தால் தடுத்து நிறுத்தப்பட்டன. அதனால் சந்திரகிரஹணம் நிகழ்வது போன்ற தோற்றம் ஏற்பட்டது. எதிரிகளின் தீரமாகிய சூரியனின் கதிர்கள் உலகின் மீது படாததால் அதே சமயத்தில் சூரிய கிரஹணமும் ஏற்பட்டது போல் மக்கள் உணர்ந்தனர்.

ச்லோகம் 38. வானில் எழுந்த புழுதி வீரகம்பண்ணரின் புகழாகிய கொடி படர்ந்து செல்லும் இடங்களில் எல்லாம் உரமிட்டு வளர்ப்பது போல் தோன்றியது.

ச்லோகம் 39. வானில் எழுந்த புழுதி மண்டலத்தின் காரணமாக சூரியன் காணப்படவில்லை என்று பலர் கூறியபோதும் உண்மையில் சூரியன் வீரமரணம் அடையும்



படை வீரர்கள் தன்னை சிதைத்து வீர சொர்க்கத்திற்குச் செல்வர்கள் என்று அஞ்சி எங்கேயோ போய் ஒளிந்து கொண்டான். *(போரில் வீர மரணம் எய்தும் படை வீரர்கள் வீர சொர்க்கத்தை அடைவர்கள். அவ்வாறு அவர்கள் செல்லும் போது சூரிய மண்டலத்தைத் தாண்டிச் செல்வர்கள் என்று நூல்கள் பகர்கின்றன.)*

ச்லோகம் 40. வானில் பறந்து சென்ற புழுதித் துகள்கள் எங்கே தாங்கள் உருக்குலைந்து போய்விடுவோமோ என்று அஞ்சி தேவலோகத்து யானைகளின் உடலில் தஞ்சமடைந்தன. இவ்வாறு புழுதிகள் தங்களிடம் தஞ்சமடைந்ததால் அந்த யானைகளின் கண்களிலிருந்து மதநீர் ஒழுகியது.

ச்லோகம் 41. ஆதவனின் வெப்பத்தைத் தாங்க இயலாத புழுதி மண்டலம் ஏழ் கடலுக்குள் தஞ்சம் புகுந்தது.

ச்லோகம் 42. பெண் யானைகள் துதிக்கையிலிருந்து பொழிந்த நீரானது புழுதி மண்டலத்தின்மீது படிந்து ஆலங்கட்டி மழை பொழிவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியது.

ச்லோகம் 43. போர் யானைகளின் அகன்ற காதுகள் மெதுவாக அசைந்துக் கொண்டிருந்ததால் புழுதி மண்டலம் வான் வெளியில் நிலை கொண்டிருந்தது. அவற்றின் மீது பெண் யானைகள் துதிக்கைகள் வழியாகப் பொழிந்த நீர் சூழ்ந்திருந்தது.

ச்லோகம் 44. வீரகம்பண்ணரின் படை, ப்ரளய காலத்தில் ஒன்று சேர்ந்த ஏழு சமுத்ரங்களின் திரளோ என்னும்படியாகத் தோன்றியது.

ச்லோகம் 45. போர் யானைகளின் கண்களிலிருந்து வழிந்த மதநீர் புழுதிகளை மேலெழா வண்ணம் செய்து

விட்டது. கூரிய குளம்பை உடைய போர்க்குதிரைகள் தம் கால்களை பூமியின் மீது அழுந்தப் பதித்ததால் ஏற்பட்ட புழுதித்திரள், மதங்கொண்ட யானைகளின் மதநீரால் மேலெழா வண்ணம் தடுத்து நிறுத்தப்பட்டது.

ச்லோகம் 46. காற்று துங்கபத்ரை ஆற்றின் நீரில் தோய்ந்ததால் குளிர்ந்து எங்கும் வீசியது. படைவீரர்களும், யானைகளும், குதிரை களும் படையெடுத்துச் செல்வதற்கு இந்தக் குளிர்காற்று உதவியது.

**ச்லோகம் 47 முதல் 50 வரை படை வீரர்களுடன் புறப்பட்ட வீரகம்பண்ணர் முலுபாகலு என்னும் ஊரில் தம்முடைய முதல் படை வீட்டை அமைத்ததும், அதன்பிறகு அங்கிருந்து புறப்பட்டு விரிஞ்சிபுரம் என்ற ஊரை வந்தடைந்ததும் விவரிக்கப்படுகின்றன.**

ச்லோகம் 47. ஐந்தாறு நாள் தன் படைவீரர்களுடன் புறப்பட்ட வீரகம்பண்ணர் கர்நாடக எல்லையைக் கடந்து முலுவாயிப்பட்டினம் என்னும் ஊரை சென்றடைந்தார்.

ச்லோகம் 48. அந்த நகரத்தில் சம்புவராயர்கள் மீது படை யெடுப்பதற்கான தகுந்த தருணத்தை எதிர் நோக்கிச் சில நாட்கள் காத்திருந்தார்.

ச்லோகம் 49. சேனைகள் எழுப்பிய புழுதி மண்டலம் பாலாற்றையும், காஞ்சிப்பகுதியை ஆண்டுவந்த சம்பு வராயரின் புகழையும் தூய்மையற்றதாக ஆக்கின.

ச்லோகம் 50. சுழியிட்டுக் கொண்டு ஓடுகின்ற நீரின் ஓட்டத்தால் அதன் கரையிலிருந்த மரங்களின் வேர்களும், கிளைகளும் ஆட்டம் காணும் அளவிற்கு நீர் வளப்பம் கொண்ட பாலாற்றின் கரையில் அமைந்திருந்த விரிஞ்சி



புரத்தைத் தம் படை வீரர்களுடன் சென்றடைந்தார் வீரகம்பண்ணர்.

**ச்லோகம் 51 முதல் 66 வரை சம்புவ ராயர்களின் வலிமை மிக்க கோட்டையாகிய படைவீட்டைக் கைப் பற்றியதும், சம்புவராயர்களுடைய படையை முறியடித்ததும் விவரிக்கப் படுகின்றன.**

ச்லோகம் 51. வீரகம்பண்ணர் தமிழகச் சிற்றரசனான சம்புவராயரின் வலிமை மிக்க கோட்டையை முற்றுகை யிட்டார். பனிகாலத்தில் ஆதவனின் ஒளிக்கதிர்களைப் பனித்துளிகள் மறைத்து நிற்பதுபோல் இந்தச் செயல் காணப்பட்டது.

ச்லோகம் 52. ப்ரளய காலத்தில் வீசிய பெருங்காற்றால் இரண்டு கடல்கள் பொங்கியெழுந்து ஒன்றை ஒன்று விழுங்க நினைப்பது போல் வீரகம்பண்ணரின் படை வீரர்களும், சம்புவராயரின் படைவீரர்களும் ஒருவருக்கொருவர் மோதிக் கொண்டனர்.

ச்லோகம் 53. வீரகம்பண்ணரின் காலாட்படை வீரர்களை சம்புவராயரின் காலாட்படை வீரர்களும், வீரகம்பண்ணரின் யானைப் படைகள் மற்றும் குதிரைப் படைகள் சம்புவராயரின் யானைப் படைகள் மற்றும் குதிரைப் படைகள் ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொண்டனர்.

ச்லோகம் 54. சிங்கத்தின் கர்ஜனை போல இரு மன்னர்களின் படைவீரர்களும் மிக்க சினத்துடன் போரிட்டுக் கொண்டபோது எங்கே சிங்கங்கள் வந்து தம்மைக் கொன்று விடுமோ என்று அஞ்சி யானைகள் துதிக்கையை உயர்த்திக் குரலிடுவதைத் தவிர்த்துக் கொண்டன. அவைகளில் பெரும்பாலானவை தம் சுயநினைவை இழந்தன.

ச்லோகம் 55. படைவீரர்கள் ஒருவருக்கொருவர் தத்தமக்குரிய ஆயுதங்களுடன் போரிடும்போது எழுந்த ஒளியானது அடர்ந்த வானில் தோன்றும் ஒளியை வெளிப் படுத்தும் பூச்சிகள் போன்ற தோற்றத்தை ஏற்படுத்தின.

ச்லோகம் 56. வில்வித்தையில் தேர்ந்த வீரர்கள் ஒருவருக் கொருவர் சினத்துடன் போரிட்டுக் கொண்டதால் போர்த் தேவதையின் கடைக்கண் நோக்கு போல தோற்றமளித்த சில அம்புகள் பூமியில் விழுந்து நொறுங்கின.

ச்லோகம் 57. வாளேந்திய படை வீரர்கள் ஒருவருக் கொருவர் போரிட்டபோது வாட்களில் தோய்ந்திருந்த இரத்தத்தோடு அவர்கள் வாளை வீசியபோது பசி மிகுந்த யமன் தன் நீண்ட நாக்கினை வெளியே நீட்டி இரத்தம் தோய்ந்த உடல்களை விழுங்குவதுபோல் காணப்பட்டது.

ச்லோகம் 58. இவ்வாறு வெட்டிச்சாய்க்கப்பட்ட படை வீரர்களின் தலைகள் நாலா பக்கமும் பெருகி ஓடிய இரத்த ஆற்றில் பூத்த தாமரை மலர்கள் போலக் காணப்பட்டன.

ச்லோகம் 59. மன்னர்களின் வெட்டப்பட்ட கைகள் யானையின் துதிக்கைகள் போல அவற்றில் மிதந்து சென்றன. ஆனால் கழுகுகள் இவ்வாறு மிதந்து சென்ற கைகளை நாகப்பாம்பு என்று எண்ணி அவற்றைத் தூக்கிச் சென்றன.

ச்லோகம் 60. யானைகளின் துதிக்கைகள் மீது அமர்ந்திருந்த ராக்ஷஸிகள் இரத்த வெள்ளத்தில் வெட்டப் பட்ட உடலுறுப்புகள் மிதந்து செல்வதைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி கொண்டனர்.

ச்லோகம் 61. யானைகள்மீது அமர்ந்து போர் புரிந்தவர்கள் எதிர்ப்படையினர் யானைகளின் மீது விடுத்த



அம்புகளால் வீரமரணம் அடைந்தனர். அவர்கள் கண் விழித்தபோது வீர சொர்க்கத்தில் பெருத்த மார்பகங்களைக் கொண்ட தேவமங்கையர் தம்மை ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கும் நிலையில் தம்மைக் கண்டனர்.

ச்லோகம் 62. கடுமையான போருக்குப் பின்னர் சம்புவ ராயருடைய படை அழிக்கப்பட்டது. எஞ்சியிருந்த வீரர்கள் பல திசைகளில் தப்பிச் சென்றோடினர்.

ச்லோகம் 63. போரில் தோற்றோடிய சம்புவராயரின் படை வீரர்களில் சிலர் தம்மிடமிருந்த போர் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு தாம் இனி எந்தப் போரிலும் ஈடுபடப் போவதில்லை என்று கூறிச் சென்றனர்.

ச்லோகம் 64. இன்னும் சில படைவீரர்கள் மரணத்திற்கு அஞ்சி இறந்த படைவீரர்களோடு அடையாளம் தெரியாதவாறு படுத்துக் கிடந்தனர். ஆனால் பிணம் தின்னும் நரிகள் ஊளையிட்டுக் கொண்டு வந்தபோது அவற்றிற்கு அஞ்சி நான்கு திசையிலும் ஒருவருக்கொருவர் மேல் விழுந் தடித்துக் கொண்டு ஓடினர். இவ்வாறு இவர்கள் ஓடிய தால் அவர்களையும் கொன்று குவிக்க முடிய வில்லையே என்று வருந்தி நின்றனர் வீரகம்பண்ணரின் படை வீரர்கள்.

ச்லோகம் 65. இன்னும் சில படை வீரர்கள் கானல் நீரை ஆற்று நீர் என்று மருள் கொண்டு தம்மிடம் இருந்த போர்க் கவசங்களையும் கேடயங்களையும் கொண்டு படகு ஒன்றினைத் தயாரிக்க முற்பட்டனர்.

ச்லோகம் 66. சம்புவராயரின் படைவீரர்களில் மேலும் சிலர் தம்முடைய நிழலைக் கண்டு எதிரி என நினைத்து போரிட்டனர். தாம் தோற்றுவிட்டதாக நினைத்துக் கீழே விழுந்து மன்னிப்பும் கேட்டனர்.

**ச்லோகம் 67 முதல் 83 வரை ராஜகம்பீரன் மலைப் பகுதியில் நடந்த போரை விவரிக்கின்றது. இந்தப் போரின் இறுதியில் சம்புவராயர்கள் தோல்வி யடைந்ததும், அவர்கள் அழிக்கப்பட்டதும் மேலும் விவரிக்கப்படுகின்றது.**

ச்லோகம் 67. வீரகம்பண்ணர் காஞ்சிபுரத்தை தமது படை வீடாக மாற்றிக் கொண்டார். அதன்பிறகு சம்புவராயர் அடைக்கலம் கொண்டிருந்த ராஜகம்பீர மலையை முற்றுகையிட்டார்.

ச்லோகம் 68. வீரகம்பண்ணரின் படைவீரர்கள் எழுப்பிய முரசொலி ராஜகம்பீர மலையில் அமைந்திருந்த குகைகளுக்குள் சென்று எதிரொலிக்கத் தொடங்கியது. இந்த ஒலியானது ராஜகம்பீர மலையே அச்சத்தில் அலறுவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியது.

ச்லோகம் 69. ராஜகம்பீர மலையின் உச்சியில் காணப்பட்ட சம்புவராயர்களது கொடி காற்றிலே அசைந்து கொடுக்கும்போது அவை வீரகம்பண்ணரின் படைகளுக்கு வரவேற்பளிப்பது போன்று காணப்பட்டது. மலை உச்சியில் அனைத்துக் கொடிகளும் காற்றில் அசையும்போது அவை மலையுச்சிக்கு விஜயநகரப் படைகளை இரு கைகளையும் கொண்டு வரவேற்பது போல் தோன்றியது.

ச்லோகம் 70. சம்புவராயர்களது படைவீரர்கள் மலை யுச்சியில் இருந்து கீழேயும், வீரகம்பண்ணரின் படைவீரர்கள் மலையடி வாரத்தில் இருந்து மேலேயும் ஒருவர் மேல் ஒருவர் எறிந்து கொண்ட ஆயுதங்களின் மேல் ஆதவனின் ஒளிக் கற்றைகள் வீழ்ந்ததால் கண்ணைக் கூசும் ஒளியை அவை வெளிப்படுத்தின. இவ்வாறு தோன்றிய ஒளி வானும்



மண்ணும் தீப்பிடித்து எரிவதுபோல் காணப்பட்டது.

ச்லோகம் 71. படைவீரர்களின் தலைகள் வாளால் சீவி எறியப் பட்ட போதும், அம்புகளால் கொய்யப்பட்ட போதும் அவை பனை மரத்திலிருந்து விழும் பழங்கள் போல உருண்டு விழுந்தன. போர்த் தேவதையின் கையில் பந்துகள் போல அவை காணப்பட்டன.

ச்லோகம் 72. சுங்கச் சாவடியில் பொற்காசுகளைச் செலுத்தி விட்டு மேலே பயணத்தை மேற்கொள்வாரைப் போல ராஜ கம்பீர மலையிலிருந்து இயந்திரங்களால் பேர்த்தெடுக்கப்பட்ட பாறைகள் உருண்டு வீழ்ந்தன.

ச்லோகம் 73. மலையுச்சியில் இருந்த வீடுகள், விஜயநகரப் படையினரால் தீப்பந்தங்களைச் சொருகி மலையுச்சியை நோக்கி அம்புகள் விடப்பட்டதால் தீப்பற்றி யெரிந்தன. இவ்வாறு தீப்பிடித்து எரிந்த வீடுகள், வீரகம்ப ண்ணர் போரில் வெற்றி கொண்டதைக் கொண்டாடுவதற்காக எடுக்கப்பட்ட ஆரத்தி போல காணப்பட்டது.

ச்லோகம் 74. விஜயநகரப் படைவீரர்கள் நீண்ட உறுதியான ஈட்டிகளைக் கொண்டு, மலையில் ஏறுவதற்கு ஏணி போன்ற அமைப்பை ஏற்படுத்தினர். சில இடங்களில் நெடிது உயர்ந்து வளர்ந்து காணப்பட்ட சால மரங்களின் கிளைகளில் ஏறி மலையுச்சியை அடைந்தனர்.

ச்லோகம் 75 மற்றும் 76. மலையில் இருந்து சம்புவராயரது படைவீரர்கள் தப்பிச் செல்ல முடியாதபடி அந்த மலையை நாலா பக்கத்திலும் விஜயநகரப்படைவீரர்கள் சூழ்ந்து கொண்டனர். கர்ப்பிணிப்பெண்களும் குழந்தைகளும் விஜயநகரப் படைவீரர்கள் எங்கே நம்மைத் தாக்க முற்படு வார்களோ என்று அச்சம் கொண்டிருந்தனர். ஒருசில

குடிமக்கள் ஓடிக் கொண்டிருந்த இரத்த ஆற்றில் வீழ்ந்து மாண்டனர். சிலர் உயிர்ப்பிச்சை வேண்டிச் சரணடைந்தனர்.

ச்லோகம் 77. புற்றிலிருந்து தன் நாக்குகளை நீட்டிக் கொண்டு சினத்தோடு வெளிவரும் நல்ல பாம்பைப் போன்று சம்புவராயன் உருவிய வாளுடன் அரண்மனையிலிருந்து வெளியே வந்தான்.

ச்லோகம் 78. சேனைத்தலைவர்கள் மற்றும் வீரம்மிக்க படை வீரர்கள் ஒவ்வொருவரும் நான், நீ என்று போட்டி போட்டிக் கொண்டு சம்புவராயருடன் போர் செய்வதற்கு முன்வந்தபோதிலும் வீரகம் பண்ணர் சம்புவராயருடன் தானே போரிட விரும்புவதாகக் கூறி அவனை எதிர்கொள்ளப் புறப்பட்டார்.

ச்லோகம் 79. வாள் வீசுவதால் வளைந்த மேனி யோடும், குத்திட்டு நின்ற கண்களோடும் இருவரும் வீரப் போர் புரிந்தனர்.

ச்லோகம் 80. இரு மாபெரும் வீரர்கள் ஒருவருக் கொருவர் சளைக்காமல் போரிடும் இந்தக் காட்சியை இமை கொட்டாது பார்த்துக் கொண்டிருந்த தெய்வங்கள், தமக்கு இமை கொட்டாத தன்மையை அளித்த இறைவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டிருந்தனர்.

ச்லோகம் 81. வீரகம்பண்ணர் தன் வாளைச் சுழற்றியபோது சம்புவராயர் கர்ப்பிணி ஒருத்தி அழகானதொரு கன்னிகைக்கு அமையப் போகும் கணவனாகிய சிசுவை ஈன்றெடுப்பவள் போல் காணப்பட்டார். *(சம்புவராயர் வீரகம்பண்ணரின் வாளால் மரணமெய்தி வீரசொர்க்கம் அடைந்து அங்கே தேவகன்னி ஒருத்திக்கு மணாளனாக ஆகும் தகுதியைப் பெறப் போகிறார் என்பதை இவ்வாறு கவி குறிப்பிடுகிறார்.)*



ச்லோகம் 82. இந்திரனின் ஆளுகைக்குட்பட்டவீர சொர்க் கத்திற்கு சம்புவராயரைத் தன் வாள் கொண்டு வீழ்த்தி வீரகம்பண்ணர் அனுப்பி வைத்தார்.

ச்லோகம் 83. தனது தந்தையாரான புக்கரின் ஆணையைப் போர்க்களத்தில் நிறைவேற்றிய வீரகம்பண்ணர் காஞ்சிமாநகரையும் சம்புவராயரின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளையும் மக்கள் மனம் மகிழும்படி ஆண்டு வந்தார். நேர்மை தவறாது ஆண்டு வந்ததோடு மட்டுமல்லாமல் பல்வேறு மதத்தைச் சார்ந்தவர்கள், இனத்தைச் சார்ந்தவர்கள் இடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்தினார்.

நான்காம் காண்டம் முற்றிற்று.

## ஐந்தாம் காண்டம்

**ச்லோகங்கள் 1 முதல் 11: வீரகம்பண்ணர் விஜயநகர மன்னனான புக்கரின் பிரதிநிதியாகக் காஞ்சியை ஆண்டு வந்ததும், நல்லாட்சியை ஏற்படுத்தியதும் விவரிக்கப் படுகிறது.**

ச்லோகம் 1. பூமித்தாயின் ஆபரணம் போல் விளங்கும் மரதக நாடு என்று பெயர் பெற்ற காஞ்சிப்பகுதியை, வீரகம்பண்ணர் நாட்டில் எங்கும் அமைதி தவழ்ந்திட ஆட்சி புரிந்து வந்தார்.

ச்லோகம் 2. குடிமக்கள் வீரகம்பண்ணர் விஷ்ணுவின் ஓர் அவதாரமோ என்று கூறும்படி அவர்களைக் காத்துவந்தார். வீரத்தில் சிறந்து விளங்குபவரான வீரகம்பண்ணர் கற்றோர் களால் பெரிதும் போற்றப்பட்டு வந்தார்.

ச்லோகம் 3. அவருடைய வீரம் அனைவராலும் போற்றப் பட்டு வந்தது. அவர் எந்தச் செயலை மேற் கொண் டாலும் அதில் முழு வெற்றி கண்டார். மற்றைய அரசர்களோடு நல்லுறவு கொண்டிருந்தார். ராஜ தந்திரங்களை நன்கறிந்த வராக விளங்கினார். எல்லாவற்றிற்கும் மேலாகக் கல்வி கேள்விகளில் சிறந்தவராய் விளங்கி வந்தார்.

ச்லோகம் 4.ஆதவனின் ஒளிக்கற்றைகள் உலகெங்கும் ஊடுருவி இருளைப் போக்கி மறைத்து வைக்கப் பட்டவற்றை வெளிக் கொணர்வதுபோல் திறமை மிக்க ஒற்றர் படையைக் கொண்ட வீரகம்பண்ணரும் எதிரிகளும் நண்பர் களும் என்னென்ன செயல்களில் ஈடுபட்டு வருகிறார்கள் என்பதை அறிந்து வந்தார்.

ச்லோகம் 5. தனது எளிய வரிவிதிப்புக் கொள்கை களால் மக்கள் மனதிலே நீங்காத இடத்தைப் பெற்றார் வீரகம்பண்ணர். பூமித்தாயும் வீரகம்பண்ணரின் நல்லா ட்சியை அனைவருக்கும் வெளிப்படுத்துவது போலத் தானியங்களையும் எண்ணெய் வித்துக்களையும் அதிக அளவில் விளையும்படி கருணை புரிந்தாள்.

ச்லோகம் 6. உறுதி படைத்த வீரகம்பண்ணரின் கரங்களால் இந்த உலகம் அணைக்கப்பட்டு வந்ததைக் கண்டு மகிழ்ந்த ஆதிசேஷன் தன்னுடைய சுமை ஓரளவிற்கு நீங்கிற்று என்று மகிழ்ச்சி கொண்டான்.

ச்லோகம் 7. அவனுடைய அரண்மனை வாசலில் மன்னர்கள் பலர் தத்தம் பட்டத்து யானைகளுடனும், பெருத்த பரிசுப் பொருள் களுடனும் நீண்ட வரிசையில் காத்திருந்தனர். காத்துநின்ற யானைகளின் கண்களிலிருந்து வடிந்த மதநீர் அந்த இடத்தை சேறும் சகதியுமாக ஆக்கியது. அதே சமயம் மன்னர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு அரண் மனைக்குள் நுழைய முற்பட்ட போது அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களில் இருந்து சிதறிய நவரத்ன கற்களின் பொடிகளால் அந்த சேற்றுப்பகுதியிலிருந்த ஈரம் உறிஞ்சப்பட்டு உறுதியான கடினபூமியாக அவை தோற்றம் அளித்தன.



ச்லோகம் 8. ஒவ்வொரு நாளும், பகைமையை மறந்த மன்னர்கள் வீரகம்பண்ணரின் வீரக்கழல்களைத் தாங்கிக் கொண்டு இருக்கும் ஆசனத்தில் தத்தம் தலைகளைப் பதிப்பதினால் பிரஹ்ம தேவனால் எழுதப்பட்ட எழுத்துக்கள் (தலையெழுத்து) மாற்றம் பெற்று அந்த மன்னர்களுடைய நெற்றியிலே வளப்பமான வாழ்விற்கு உரிய எழுத்துக்கள் பதிக்கப்பெற்றன.

ச்லோகம் 9. வீரகம்பண்ணரின் அரண்மனை வாசலில் மகத, மாளவ, சிங்கள, த்ரமிட, கேரள, கௌட தேச மன்னர் களின் பெருங்கூட்டம் எப்போதும் காணப்பட்டது. வீரகம்பண் ணரை நேரில் கண்டு தம்முடைய வணக்கத்தைத் தெரிவிப்பதற்காக அவர்கள் அங்கே பல நாட்கள் காத்திருந்தனர்.

ச்லோகம்10. வீரகம்பண்ணர் அமர்ந்திருந்த அரியா சனத்தின் இருமருங்கிலும் அழகிய நங்கையர் சாமரங்களை வீசிக் கொண்டு இருந்தனர். அவ்வாறு அவர்கள் சாமரம் வீசும்போது கையில் அணிந்திருந்த வளையல்களும், கங்க ணங்களும் ஒன்றோடொன்று உரசிக் கொண்டதால் எழுந்த ஒலியானது அரசவையில் கவிஞர்கள் மன்னனின் புகழைப் போற்றிப் பாடிய பாடல்களின் ஒலியையும் மீதூர்ந்திருந்தது.

ச்லோகம் 11. வீரகம்பண்ணர், சரஸ்வதிதேவி ஒய்யார

நடையிட்டு நடக்கும்போது அவளுடைய கால்களில் அணிந்துள்ள ஆபரணங்களிலிருந்து எழும் ஒலியையொத்த, கற்றறிந்த கவிஞர்கள் கவிதைகளை இயற்றி, இசையோடு பாடும் பாடல்களைக் கேட்கப் பெருவிருப்பம் கொண்டு இருந்தார்.

**ச்லோகம் 12லிருந்து ச்லோகம் 76 வரை பருவகால வர்ணனையும், வீரகம்பண்ணரின் பாலியல் ஈர்ப்பும், காதலின் வெளிப்பாடும் வர்ணிக்கப் படுகின்றன.**

ச்லோகம் 12. அழகிய நங்கையர் அந்தப்புரத்தில் வீணையின் நரம்புகள்மீது தம் மெல்லிய விரலைப் பதித்து வீரகம்பண்ணரின் வெற்றிகளை இசையமைத்துப் பாடிக் கொண்டிருந்தனர். இசை நுணுக்கங்களை நன்கறிந்தவர் களான அவர்கள் வீணையை மீட்டிடும் போது அதிலிருந்து வெளிப்பட்ட ஒலி அனைவர் கவனத்தையும் ஈர்த்தது.

ச்லோகம் 13. அந்தப்புரத்தில் எழில்கொண்ட நங்கையர் நாட்டியமாடி மன்னனை மகிழ்வித்துக் கொண்டிருந்தனர். நேரம் சென்றதையும் பொருட்படுத்தாமல் நாட்டியத்தின் மூலம் அவர்கள் வெளிப்படுத்திய அங்க அசைவுகளையும், முத்திரைகளையும் கண்டு மகிழ்ந்தான் மன்னன்.

ச்லோகம் 14. வீரகம்பண்ணர் கொடிய வன விலங்குகள் நிறைந்த காட்டில் தஞ்சம் கொண்டிருந்த கழுதைப்புலிகளை விரட்டி அடித்தார், காட்டெருமைகளை வேட்டையாடினார், மான் கூட்டங் களைச் சிதறச்செய்தார், கொடிய கரடிகளை வெட்டி வீழ்த்தினார், யானைகளை உயிரோடு பிடித்தார், காண்டா மிருகங்களை அடக்கினார்.



ச்லோகம் 15. கோடைகாலம் வந்தது. அந்தப்புரத்து மாதர்கள் வாசனைமிக்க அழகுப் பொருள்களை நாடிச் சென்றனர். சந்தனக் குழம்புகளைப் பூசிக்கொண்டனர். இரவில் நீண்டநேரம் நில வொளியில் அமர்ந்திருப்பதையே விரும்பினர்.

ச்லோகம் 16. பகலில் சூரிய ஒளி நீண்டநேரம் காணப்பட்டது. இரவு நேரம் குறைந்து காணப்பட்டது. அந்தப்புரத்து நங்கையர் நாள் முழுதும் ஜலக்ரீடையில் ஈடுபட்டிருந்தனர். மணமிக்க அழகிய மலர்கள் மலர்ந்ததால் எங்கும் பரவியிருந்த நறுமணத்தை இரவிலே வீசிய மெல்லிய காற்று அரண்மனைக்கு எடுத்துச் சென்றது.

ச்லோகம் 17. காலதேவன் விதித்தபடி சூரியன் தென் மேற்குப் பகுதியை விட்டு நகர்ந்து வடகிழக்கு திக்கை நோக்கி பனி படர்ந்த ஹிமாலய மலைச் சிகரங்களில் தம் வெப்பத்தை ஆற்றிக் கொள் வதற்காக தஞ்சம் புகுந்ததுபோல் ஒவ்வொரு நாளும் சூரியன் மறைந்தான்.

ச்லோகம் 18. சக்ரவாக பட்சிகள் பகற்பொழுது நீண்டு காணப்படுவதை விரும்பிக் குரல் கொடுத்தன. சூரியனை இழுத்துச் செல்லும் குதிரைகள் கடும் வெப்பத்தைத் தாங்கமுடியாமல் மெதுவாக நகர்ந்து சென்று உலகை வலம் வந்தன.

ச்லோகம் 19. மதயானையாகிய மன்மதன் ஆதவனின் வெப்பத்தைத் தாங்க இயலாமல் அழகிய மாதர்களின் மார்பகங்களில் தஞ்சம் புகுந்தான். சந்தனக்குழம்பால் ஈரப்பசை கொண்டிருந்த அவர்கள் மார்பில் முத்துச்சரங்கள் படுதலால் மேலும் குளிர்ச்சியுற்று இருந்தது.

ச்லோகம் 20. நாளுக்குநாள் மங்கையர் நீராடும் குளங்களில் தேங்கியிருந்த நீர் குறையத் தொடங்கின. அழகிய மாதர்கள் நீராடும் போது ஒருவருக்கொருவர் கட்டித்தழுவி இன்பம் அனுபவித்து வந்ததால் அவர்களுடைய செயல்களை இனியும் தாங்கமுடியாது என்று குளங்கள் தம் நீரின் அளவைக் குறைத்துக்கொண்டதுபோல் அந்தச் செயல் காணப்பட்டது.

ச்லோகம் 21. அழகிய மாதர்தம் செவிப்பூ ஆபரணத்தில் ஒட்டிக் கொண்டிருந்த நீர்த்துளிகளையும், அவர்களுடைய முகங்களில் முத்துப் போல் காணப்பட்ட நீர்த்துளிகளையும் கண்டு மகிழ்ந்தான் மன்னன்.

ச்லோகம் 22. அழகிய மாதர் தம் அலைபாயும் கூந்தல்களில் சூட்டப்பட்ட 'குதாஜா' மலர்களிலிருந்து எழுந்த நறுமணமானது மன்னனின் உள்ளத்தை அலைபாயச் செய்தது. வைத்த கண் வாங்காமல் அவர்களுடைய அழகை அவன் ரசித்துக் கொண்டு இருந்தான்.

ச்லோகம் 23. கோடையின் வெப்பம் தாக்காமல் இருப்ப தற்காக நாள் முழுதும் நீர் சொரிந்து கொண்டிருக்கின்ற நீராழி மண்டபத்தில் இளமையும் அழகும் நிறைந்த நங்கையரோடு காமக் களியாட்டத்தில் ஈடுபட்டிருந்தான் வீரகம்பண்ணன்.

ச்லோகம் 24. கோடைகாலம் முடிந்து குளிர்காலம் தொடங்கியது. சாதகப்பட்சிகள் மகிழ்ச்சி பொங்க காணப்பட்டன. நிகுளமர பூக்கள் மலர்ந்து காற்றில் அசையும்போது அவை சாமரங்கள் வீசுவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தின.

ச்லோகம் 25. கறுத்த, இருண்ட மேகங்கள் இங்கும் அங்குமாக வானில் தோன்றின. அப்போது தோன்றிய மின்னல்கள் நங்கையர்கள் தம் விழியாகிய வேல் கொண்டு வீசுவது போலவும், வெளிப்பட்ட இடிமுழக்கம் அவர்கள் கரங்களில் இருந்து வெளிப்பட்ட மிருதங்கத்தின் ஓலியையும் ஒத்திருந்தன.



ச்லோகம் 26. தேனீயின் வண்ணத்தை ஒத்த கருமேகங்கள் மங்கையர் அணிந்திருந்த உள்ளாடைகளைப் போன்ற தோற்றத்தை அளித்தன. அவ்வப்போது தோன்றிய மின்னலின் ஒலி அவர்கள் இடுப்பில் அணிந்திருந்த தங்க ஒட்டியாணத்தின் நிறத்தை ஒத்து இருந்தன. பூமியில் விழுந்த மழைத்துளிகள் வானத்திலிருந்து கீழே வீழ்ந்த முத்துக்களைப் போல் காட்சியளித்தன.

ச்லோகம் 27. வானத்துத் தேவதையின் அழகிய இடுப்பில் கோர்த்துக் கட்டப்பட்டிருந்த பச்சைக்கல் மரகதம், பவளம், முத்து ஆகியவற்றைப் போல் தோற்றமளித்தன. வானத்தில் தோன்றிய வானவில்லில் காணப்பட்ட பச்சை, சிவப்பு, மற்றும் வெள்ளை வண்ணங்கள்.

ச்லோகம் 28. சிவப்பு நிறம் கொண்ட பூச்சிகள் கூட்டம் கூட்டமாக பூமியில் காணப்பட்டன. இவை மேகங்கள் ஒன்றோ டொன்று பொருதிக் கொண்டபோது தோன்றிய மின்னல் பிளவுபட்டு அதன் துகள்கள் பூமியெங்கும் பரவியிருப்பது போன்று காணப் பட்டது.

ச்லோகம் 29. கிழக்கு திசையிலிருந்து வீசிய காற்றின் சுழற்சியின் மீது வானத்திலிருந்து பனிக்கட்டி மழை வீழ்ந்தது. கடலிலிருந்து காற்று சுழல ஆரம்பித்த போது அவற்றின் அடியில் புதைந்திருந்த முத்துக்களை இது அள்ளி வந்தனவோ என்று ஐயம் கொண்டனர்.

ச்லோகம் 30. மலையடிவாரங்களிலும், சமவெளி களிலும் வானத்தில் தோன்றிய மேகங்களைக் கண்டு மயில்கள் கூத்தாடின. அவை ஷட்ஜத்திற்கு ஆடிக் கொண்டிருந்தன.

ச்லோகம் 31. நெஞ்சில் உரம் கொண்ட ஒரு சிலர் மலை உச்சியை நோக்கி மேலே செல்லச் செல்ல பெருத்த ஒலியோடு வானம் முழங்கிடக் கண்டனர். அவை மன்மதன் மின்னல்கள் எனப்படும் நீண்ட குச்சிகளைக் கொண்டு முரசு இசைப்பது போல் தோன்றிற்று.

ச்லோகம் 32. வாழை மரங்கள் குலை ஈன்றன. அர்ச்சுன மரங்கள் பூத்துக் குலுங்கின. அவ்வாறே கதம்ப மரமும், கேடக மரமும் காணப்பட்டன. சாதகப் பட்சிகள் பெரு மகிழ்ச்சியோடு காணப் பட்டன. மயில்கள் தோகை விரித்து ஆடிக் கொண்டிருந்தன.

ச்லோகம் 33. காற்றடிப்பதால் மேகங்கள் கேடக மரத்து விதைகளை ஆங்காங்கே எடுத்துச் சென்றன. அந்தச் செயல் ஒருவர் இரு கைகளையும் கொண்டு விபூதியை அள்ளித் தெளிப்பதுபோல் தோன்றிற்று. இடியோசை எங்கும் ஹம் என்ற ஒலியை எழுப் பியது. அந்தப்புரத்து மகளிர் சிலரிடையே காதல் வயப்பட்டு,அதனால் ஊடல் கொண்டுள்ள மகளிரைச் சூழ்ந்திருந்த அந்தப் பேயை ஹம் என்ற மந்திரம் சொல்லி விரட்டுவது போல் இது காணப்பட்டது.

ச்லோகம் 34. வீரகம்பண்ணன் இன்பவிளை யாட்டு களில் தன் பொழுதைச் செலவிட்டான். தோகை விரித்தாடும் மயில்களின் ஆட்டத்தைக் கண்டு களித்தான். அவ்வாறு அவை ஆடும்போது அவற்றின் உடம்பிலிருந்து வெளிப்பட்ட கற்பூரத்தை ஒத்த நறுமணம் அவன் உள்ளத்திற்கு



உவகையை அளித்தது. கணக்கற்ற கதம்ப மரங்கள் பூத்துக் குலுங்கி நின்றன.

ச்லோகம் 35. வீரகம்பண்ணன் அந்தப்புரத்து நாயகிகளின் சுருண்ட கூந்தலில் சூடப்பட்டிருந்த மாலதி மலர்களின் அழகைக் கண்டு ஆனந்தித்தான். அவர்கள் அணிந்திருந்த ஆடைகள் அகாரு புகை கொண்டு மணமூட்டப்பட்டதைப் போல் காணப்பட்டது. அதன் விளைவாக அவர்கள் அண்மையில் வரும்போது கஸ்தூரி மெழுகினை தங்கள் உடலில் பூசிக் கொண்டதுபோல் தோன்றிற்று.

ச்லோகம் 36. வான்முகிலைக் கண்டு தமது காதலியை ஆடி மகிழ வைக்க விரும்பும் மயில்கள் ஆடும்போது எழுந்த இசை ஒலியும், குதாஜா மற்றும் கேடக மரங்களில் இருந்த மலர்கள் அசைவதால் பரவும் நறுமணமும் மன்னனின் உள்ளத்தில் காதலையும், காமத்தையும் பெருக்கெடுத்தோடச் செய்தன.

ச்லோகம் 37. மழை காலத்து முகில்கள் மன்னனின் உள்ளத்தில் காமக் கிளர்ச்சியை உண்டு பண்ணின. இடியோசை கேட்ட போதெல்லாம் சிறிது நாணங்கொண்ட புதிதாக மணம் முடிக்கப்பட்ட நாயகிகளும் அவனை ஆரத்தழுவி நின்றனர்.

ச்லோகம் 38. இலையுதிர் காலம் தொடங்கிற்று. தாமரை மலரையும் மலரச் செய்யக்கூடிய விதூஷகனின் வார்த்தைகளும், ஏழு வண்ணங்கள் கொண்ட இந்திரனுடைய வில்லாகிய வான வில்லையும், மயில்களின் ஆட்டத்தையும் இனிக் காணமுடியாது.

ச்லோகம் 39. ஒரு சிங்கம் பல யானைகளை விரட்டி அடிப்பது போல் இலையுதிர் காலம் தோற்றமளித்தது. அந்தச் சிங்கம்தான் ஆதவன். கசா மரங்களின் மலர்கள் சூரியனின் பிடரி மயிர்களைப் போல் காணப்பட்டன. செந்நிறம் கொண்ட ரோஜாக்கள் மலர்ந்து சூரியனின் கண்களைப் போல் தோற்றமளித்தன.

ச்லோகம் 40. சூரியனும் சந்திரனும் மஹாவிஷ்ணுவின் இரு கண்கள் எனப் போற்றப்படுகின்றனர். அவன் உறக்கத்திலிருந்து விடுபட்டு தற்போது காணப்படுவதால் சூரியனும் சந்திரனும் ஒளி மிக்கவர்களாகத் தோற்றமளித்தனர்.

ச்லோகம் 41. ஒளி பொருந்திய அகஸ்திய நக்ஷத்ரம் வானத்தில் காணப்பட்டதால் நீர் புனிதத்தன்மை பெற்றது. அதில் தேங்கியிருந்த மாசு காணாமற் போய்விட்டது. கருணைமிக்க குருவின் பார்வையால் நல்ஞானம் பெற்றதொரு சீடன் போல நீர் நிலைகள் தெளிவுற்று காணப்பட்டன.

ச்லோகம் 42. வானில் ஆங்காங்கே வெள்ளை நிற மேகங்கள் காணப்பட்டன. அவற்றின் ஊடே மின்னல்கள் தோன்றவில்லை. கடல்நீர் ஆவியாகும்போது அதன் அடியில் தேங்கியிருந்த முத்துக் களும், ஆவியாகி வான்வெளியில் நுரையைப் கக்கிக் கொண்டு படிந் திருப்பது போன்ற தோற்றத்தை வெளிப்படுத்தின.

ச்லோகம் 43. குளிர்காலத்து மேகங்கள் சூரியனையும் சந்திரனையும் ஒளி பொருந்தியதாகச் செய்யும் சாணைக்கல் போல் அமைந்திருந்தன போலும். அதனால்தான் இலையுதிர் காலத்துச் சூரியனும் சந்திரனும் மிக்க ஒளி பொருந்திய வர்களாகக் காணப் பட்டனர்.



ச்லோகம் 44. ஆற்றில் மாசற்று தெள்ளிய நீர் ஓடத் தொடங் கியது. குறைந்த அளவில் ஓடிய ஆற்றுநீர் தன் உடல் எடையை தேகப் பயிற்சிகள் செய்து குறைத்துக் கொண்ட பெண் போல் காணப்பட்டது. வெள்ளப் பெருக்கு குறைந்ததால் பிரிந்து போன அன்னங்களை அவை ஒன்று சேர்த்தன. இந்தச் செயல் ஊடல் கொண்ட ஆணையும் பெண்ணையும் ஒன்று சேர்க்க முயலும் தோழிபோல் ஆறுகள் காணப்பட்டன.

ச்லோகம் 45. அன்னங்கள் நீர் நிலைகளில் நீந்திச் செல்லும் போது எழுந்த ஓசையானது மன்மதனின் வாத்தியத் திலிருந்து எழும் ஓசைபோன்றதும், மஹாலக்ஷ்மி தாமரைப் பூக்கள்மீது நடந்து செல்லு கின்றபோது எழும் ஒலியையும் ஒத்து நின்றது .

ச்லோகம் 46. இலையுதிர் காலமானது அழகான தாமரை மலரைப் போன்ற கண்களையுடைய பெண்ணொருத்தி அவ்வப் போது கண்ணாடியில் தன் அழகைக் கண்டு ரசிப்பதுபோல் சூரியன் அவ்வப்போது வெண்மை பொருந்திய மேகங்கள் ஊடே காணப் பட்டான்.

ச்லோகம் 47. வீரகம்பண்ணர் இலையுதிர் கால இரவு நேரங் களைப் பெரிதும் ரசித்தார். ஏனெனில் அந்த இரவுகள் பெண்களின் அவயவங்களைப் பல்வகையிலும் ஒத்திருந்தன. இரவில் பூத்த நீலோற்பல மலர்கள் அழகிய பெண்களின் கண்களை ஒத்து இருந்தன. வானில் தோன்றிய மதி, மடந்தையரின் முகத்தை ஒத்து இருந்தது. இரவில் பூத்த வெள்ளை நிற அல்லி மலர்கள் பெண்களின் முறுவலை வெளிப்படுத்தின. வானில் தோன்றிய விண்மீன்கள் மங்கை யரின் கண்களுக்குள் உள்ள ஒளிவட்டம் போலத் திகழ்ந்தன.

ச்லோகம் 48. வயல்வெளிகளில் புனங்காத்து நின்ற மங்கையர் வீரகம்பண்ணரின் புகழைப் பாடிக் கொண்டிருந்தனர். முதிர்ந்த செங்கரும்புகளிலிருந்து வெடித்துச்சிதறிய முத்துக்களை ஆடவர்கள் மாலையாகக் கோர்த்து அணிந்திருந்தனர்.

ச்லோகம் 49. காலில் இரும்புச் சங்கிலியால் பிணைக்கப் பட்டிருந்த யானைகள் அந்தத் தளையிலிருந்து விடுபடுவதற்காக முயற்சி செய்து கொண்டிருந்தன. அப்போது அந்த யானைகள்மீது வீசிய காற்று ஸப்தாவர்ணா மரங்களின்மீது பட்டு வந்ததால் அவை மீது அந்த நறுமணம் படிந்திருந்தது.

ச்லோகம் 50. காட்டுப்பகுதிகளில் அப்போது மலர்ந்த ரோஜாப் பூக்களின் மணம் படிந்திருந்தது. அவற்றிலிருந்து வெளிப்பட்ட நறுமணமானது ஒன்று திரண்டு அரசனின் ஆணைப்படி குதிரைகள் புறப்படுவதற்கு முன்பு காட்டப்படும் தீவர்த்திகளின் தீப்பிழம்பு போலத் தோற்றமளித்தன.

ச்லோகம் 51. இலையுதிர் காலத்தில் இரவு நேரம் நீண்டு இருந்தது. அது அரசன் அந்தப்புரத்தில் தன் மனைவிமார்களுடன் நீண்ட நேரம் இன்பம் அனுபவிப்பதற்காக நீண்டிருந்தது போல் காணப்பட்டது. இலையுதிர் காலம் முடிந்து பனிகாலம் தொடங்கிற்று.

ச்லோகம் 52. தாமரை மலர்கள் மீது பனிபடர்ந்து காணப் பட்டது. சந்திரன் நிறமழிந்து காணப்பட்டான். ஆனால் மன்னரின் மனைவிமார்கள் முகத்தில் ஒளி பரவி நின்றது. அதற்கு இணையாக உவமை சொல்ல இயலவில்லை.



ச்லோகம் 53. அந்தப்புரத்து நாயகிகள் குளிரால் உடலில் நடுக்கம் ஏற்பட்டு நின்றனர். ஆனால் மன்னனை ஆரத் தழுவி இன்பம் துய்க்க வேண்டும் என்ற வேட்கை கொண்டவர்களாய் காணப்பட்டனர். அவரவர்களுடைய வாய் எதைஎதையோ முணுமுணுத்துக் கொண்டு இருந்தன. அவர்களுடைய மார்பகங்கள் அரசனை ஆரத் தழுவ வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தன.

ச்லோகம் 54. மன்னனின் அந்தப்புரத்துநாயகிகள் தங்கள் முடிகளில் அந்தந்த காலத்திற்கேற்ப முத்துக்கள் கோர்த்த சரத்தினை அணிந்திருந்தனர். ஆனால் பனி காலத்தில் தம் சுருண்ட கூந்தலில் அப்போதலர்ந்த மல்லிகைப் பூக்களைச் சூடியிருந்தனர்.

ச்லோகம் 55. வீரகம்பண்ணர் அந்தப்புரத்தை விட்டகன்று வெளியே செல்லாமல் உயர்ந்த நறுமணம் தரும் மலர்களையும், வாசனைப் பொருள்களையும் சூடிக்கொண்ட குங்குமப்பூவின் குழம்பு பூசப்பெற்ற தனங்களைஉடைய மாதர் தம் அரவணைப்பில் இருந்து வந்தார்.

ச்லோகம் 56. மன்மதனின் மறுஅவதாரமோ என்று கூறக் கூடிய அளவிற்கு ஒளி பொருந்திய முகத்தை உடையவனான மன்னன் குளிர்கால இரவில் அழகிய மாதர் தம்மோடு புல்கிக் கிடந்தான்.

ச்லோகம் 57. மன்னனின் கட்டில்மீது, இலைகளுடன் கூடிய கிராம்புச் செடிகள் பரப்பப்பட்டிருந்தன. மன்னனின் காம விளை யாட்டுகளின் விளைவாக மங்கையர் தம் கூந்தலில் சூடியிருந்த 'அகரு' மரத்தின் பூக்கள் கட்டிலின்மீது எங்கும் சிதறிக் கிடந்தன.

ச்லோகம் 58. மன்னனின் அந்தப்புரத்துக் காமக் கிழத்திகள் மிகுந்த அழகுடன் காணப்பட்டனர். தங்களது நெற்றியில் அணிந் திருந்த கஸ்தூரியின் மணத்தோடு ஒப்பனை செய்து கொள்வதற்காக முகத்திலே பூசிக் கொண்ட 'லோத்ரா' மலரின் துகள்கள் நறுமணத்தை எங்கும் பரப்பிக் கொண்டிருந்தன.

ச்லோகம் 59. இளம் பெண்கள் மன்னனின் அருகில் இருந்த போது மயிர்கூச்செறிந்த நிலையில் காணப்பட்டனர். அப்போது அவர்கள் நெற்றியில் தோன்றிய வியர்வைத் துளிகளைத் துடைத்துக் கொண்டனர்.

ச்லோகம் 60. ஊடல் கொண்ட மகளிர் மன்னன் தங்கள் தலைமயிரைப் பிடித்து இழுத்து உதடுகளிலும், அங்கங்கள் எல்லாம் முத்தமிட்டு மகிழ்ந்தபோது களிப்புற்றனர்.

ச்லோகம் 61. மன்னனின் காமக்களியாட்டத்தில் சிக்கித் தவித்த இளம் பெண்கள் நிலைகுலைந்த ஆடையுடன் காணப்பட்ட போதிலும் அழகுற விளங்கினர். அவர்கள் மார்பில் அணிந்திருந்த முத்து மாலையிலிருந்து முத்துக்கள் சிதறி ஓடின. மாதர்கள் தங்கள் மார்பில் பதிந்திருந்த மன்னனின் நகக்குறிகளைக் கண்டு மகிழ்ச்சி கொண்டனர். மாதர்தம் அரவணைப்பில் மயங்கிக் கிடந்த மன்னன் குளிர் காலத்தில் வெப்பத்தை உணர்ந்தான்.

ச்லோகம் 62. குளிர்காலம் முடிந்து வசந்தகாலத்தில் மரங்கள் அனைத்தும் பூத்துக் குலுங்கி நின்றன. இருகைகளைக் கூப்பி வரவேற்பது போல் மரங்களின் கிளைகள் தோற்றமளித்தன. மரக் கிளையினின்றும் குயில்கள் கூவுவது மன்னனை இன்னிசை முழக்கத்தோடு வரவேற்பது போல் தோற்றமளித்தன.



ச்லோகம் 63. தெற்கிலிருந்து வீசிய தென்றலானது மாமரக் கிளைகளில் பூத்துக் குலுங்கி நின்ற மலர்களிலிருந்து மகரந்தத்தை எங்கும் பரப்பிச் சென்றது. இந்தக் காட்சி காதலர்களை விட்டுப் பிரிந்த கோபம் கொண்ட மகளிர் மனம் திருந்தி காதலர்களுடன் மீண்டும் கூடுதற்கு ஒரு மந்திரவாதி திருநீற்றை இறைத்துச் செல்வது போல் காணப்பட்டது.

ச்லோகம் 64. ஹிம்சுகா மரத்தின் மொட்டுக்கள் சிவப்பு நிறத்தில் காட்சியளித்தன. அவை மான்களின் உடலைக் கிழித்த சிங்கத்தின் நகங்களைப் போலக் காணப்பட்டன.

ச்லோகம் 65. செண்பக மலர்களில் படிந்திருந்த தேனுண்ட வண்டுகள் வசந்த காலத்தில் மன்மதனுக்கு அளிக்கும் வரவேற்பில் ஏற்றப்பட்ட தீபங்கள் போல் காட்சியளித்தன.

ச்லோகம் 66. கண்ணழகு படைத்த மங்கையர் அருந்திய திராட்சைப் பழ சாற்றிலிருந்து புறப்பட்ட மணமானது வகுள மலர்கள் மீது படிந்திருந்தது. அவ்வாறு படிந்திருந்த மணத்தை தெற்குத் திசையிலிருந்து வீசிய தென்றல் சுமந்து சென்றது.

ச்லோகம் 67. அழகிய ஆபரணங்களை அணிந்த குந்தள மகளிர் (அழகிய கூந்தலையுடைய மகளிர்) தமது மெல்லிய பாதங்களால் அசோக மரங்களைத் தொட்டு நின்றதால் அவை அந்த மரத்திற்கு இட்ட அடியுரம் போல அமைந்து இருந்தது. இவ்வாறு உரமிடப்பட்ட அசோக மரத்தைச் சுற்றிக் கூட்டம் கூட்டமாக வண்டுகள் இசையைப் பரப்பிக் கொண்டு இருந்தன.

ச்லோகம் 68. காதலர்கள் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டிருந்த போது நிலை குலைந்த குழல்கள்

குறுவாகமரத்தின் இலைகளை ஒத்திருந்தன. அசித் பொருள் களிலும் காதலர்களுடைய இந்தச் செயல் காம உணர்ச்சியைத் தூண்டியது.

ச்லோகம் 69. மரங்களில் கூட்டம் கூட்டமாகக் காணப்பட்ட பறவைகள் எழுப்பிய ஒலி எங்கும் பரவி நின்றது. அந்த ஒலி கேட்போர் உள்ளத்தில் மகிழ்ச்சியை விளைவித்தது. காதலிகளைப் பிரிந்து வாழும் காதலர்களின் காதுகளில் மன்மதனின் பாணங்களில் இருந்து எழுந்த ஒலி போல பரவி நின்றது இந்த ஒலி.

ச்லோகம் 70. மலர்க்கொடிகளைச் சுற்றிக் கரிய நிறங் கொண்ட தேனீக்கள் கூட்டம் கூட்டமாகக் காணப்பட்டன. அவை பூத்துக்குலுங்கும் மலர்கள் போல் காணப்பட்டன. கொடிகளில் காணப்பட்ட இந்தக்காட்சி அழகிய மாதர்தம் தனங்கள் போல் காணப்பட்டன.

ச்லோகம் 71. மன்மதனின் அழகிய ஓவியங்களைத் தீட்ட முற்பட்ட கன்னிகையர் தம்மையறியாமல் வீரகம்ப ண்ணருடைய திருவுருவத்தை மனத்தில் எழுந்த கிளர்ச்சி யால் எழுதினர். அவர்கள் நெஞ்சு நிறைய வீரகம்பண்ணன் நிறைந்து நின்றதால் அவர்கள் ஓவியம் வரைவதில் தடுமாற்றம் அடைந்தனர்.

ச்லோகம் 72. மாதர்கள் சிலர் இவ்வாறு வரைந்த மன்மதனை ஒத்த வீரகம்பண்ணரின் ஓவியத்தின்மீது சந்தனக் குழம்பைத் தடவி நின்றனர். அப்போது அவர்கள் மயிர்க் கூச்செறிந்த நிலையை எய்தினர். அவர்கள் உடல்முழுவதும் வியர்வைத் துளிகள் மண்டி நின்றன.



ச்லோகம் 73. மாதர்கள் நீரில் ஒருவரோடு ஒருவர் தமக்குள்ளே விளையாடிக்கொண்டிருக்கும்போது வளை யோசையும் இடுப்பில் அணிந்திருந்த ஒட்டியாணத்து மணிகளிலிருந்து எழுந்த ஓசையும் எங்கும் பரவி நின்றது. நீரில் அவர்கள் அணிந்திருந்த மாலைகள் மிதந்து சென்றன. சுருண்ட கூந்தலிலிருந்து நீர் வடிந்து கொண்டிருந்தது. இவையெல்லாம் அவர்கள் தம் காதலருடன் நீரில் விளையாடும் விளையாட்டிற்கு ஒத்திகை போல அமைந்தி ருந்தன.

ச்லோகம் 74. மாதர்கள் சிலர் தம்மை ஒத்த பெண்கள் முன்பே வெட்கத்தால் தலை குனிந்து நின்றனர். மன்மதனைப் புகழ்ந்து பாடும் பாட்டுக்களைப் பாட முற்பட்டபோது அவர் களையும் அறியாமல் மன்மதனுக்குப் பதிலாக வீரகம்ப ண்ணரைப் புகழ்ந்து பாடி நின்றனர்.

ச்லோகம் 75. மன்னர்மீது குங்குமப்பூக் குழம்பினை அள்ளி எறிந்திட முற்பட்ட மாதர்கள் அவர்கள் கையில் தோன்றிய வியர்வை யால் அந்தக் குழம்பு கரைந்து போனதை அறியாதவர்களாகக் காணப்பட்டனர்.

ச்லோகம் 76. அந்தப்புரத்து மாதர்களோடு அவர்களை விட்டுப் பிரியாது இருந்த வீரகம்பண்ணர்மீது அவர்கள் கொண்ட இச்சை தணியவில்லை. காமனின் பாணங்களால் வீழ்த்தப்பட்ட மாதர் பலர் வீரகம்பண்ணனுடன் எப்போதும் உறவு கொண்டிட எண்ணம் கொண்டிருந்தனர்.

ஐந்தாம் காண்டம்

முற்றிற்று.

## ஆறாம் காண்டம்.

**ச்லோகங்கள் 1 முதல் 69 ஈறாக வீரகம்பண்ணர் அந்தப் புரத்து மாதர்களுடன் நீர் விளையாட்டில் ஈடுபட்டதை விவரிக்கும் பகுதி.**

ச்லோகம் 1. தேவமாதர்கள் புடைசூழ எங்கும் திரியும் இந்திரனைப் போல வீரகம்பண்ணர் தன் உள்ளங்கவர்ந்த கன்னிகையரோடு மணம் வீசும் மலர்கள் நிறைந்த நந்த வனத்தில் வலம் வந்து கொண்டிருந்தான்.

ச்லோகம் 2. மலர்ச்சோலைகளின் ஊடே சென்று கொண்டிருந்த வீரகம்பண்ணரைச் சுற்றி மிகுந்த ஆபரண ங்கள் அணிந்த மாதர்கள் சென்றபோது வளையோசையின் ஒலி எங்கும் பரவி நின்றது. இவ்வாறு கன்னிகையர்கள் அரசரின் பின் கூட்டம் கூட்டமாகச் சென்ற காட்சி தெற்குத் திக்கிலிருந்து வீசும் புயலின் போது இசைபாடும் வண்டுகள் கூட்டம் கூட்டமாகப் பறந்து செல்வதுபோலக் காணப்பட்டது.

ச்லோகம் 3. மாதர்கள் காலில் தீட்டப்பட்டிருந்த செம்பஞ்சுக் குழம்பின் சாற்றினால் பதிந்த அடிச்சுவடுகள் அரசன் சென்ற இடமெல்லாம் மெல்லிய இலைகளைப் பரப்பியது போல காணப்பட்டன.

ச்லோகம் 4. அழகிய மாதர்தம் கடைக் கண்களிலிருந்து புறப் பட்ட நீலம், வெள்ளை, மற்றும் சிவப்பு வண்ணக் கதிர்களின் பிரதி பலிப்பால் வானத்தில் நீல நிறம், வெள்ளைநிறம், சிவப்பு நிறம் கொண்ட அல்லிமலர்கள் பூத்துக் குலுங்குவதுபோல் காணப்பட்டன.

ச்லோகம் 5. அழகு நிரம்பிய பெண்களின் காலில்



அணிந்திருந்த ரத்னங்கள் பதிக்கப்பெற்றிருந்த காற் சலங்கையின் ஒலி மன்னனின் காதுகளில் ஒலித்தன. அந்த ஒலியைக் கேட்ட மன்னனின் மனம் மன்மதனின் பாணங்கள் தன்னைத் தாக்குவதுபோன்றதொரு உணர்வினைப் பெற்றான்.

ச்லோகம் 6. மன்னனைப் பின்தொடர்ந்த மாதர்கள் ஒருவ ரோடு ஒருவர் உரையாடிக் கொண்டிருந்தபோது எழுந்த ஒலி கீழ்க்கண்டவாறு மன்னனின் காதுகளில் இனிமையாக ஒலித்தன.

ச்லோகம் 7. அவர்களில் ஒருத்தி மற்றொருத்தியிடம், “ஏ பெண்ணே! உன் கால்களை கவனத்துடன் தரையில் ஊன்றி நடப்பாயாக. அவ்வாறு செய்யாவிடில் மாதர்கள் அணிந்திருந்த மாலைகளிலிருந்து சிதறிய முத்துக்களின்மீது உன் கால்கள் படக்கூடுமானால் நீ கீழே விழுந்து துன்பப்படக் கூடும்”.

ச்லோகம் 8. “தாமரையை யொத்த முகம் படைத்தவளே! நீ நடக்கும்போது உன்னுடைய கால்களில் அணிந்திருக்கும் சலங்கைகளில் உள்ள முத்துக்களின் ஒலியால் உறங்குகின்ற அன்னங்கள் எழுந்து சஞ்சரிக்கக் கூடும். அவ்வாறு துயில் எழுந்த அன்னங்கள் தாமரை மலரோ எனக் கருதி உன்னைச்சுற்றிக் கூட்டமாக வந்தடையும்”.

ச்லோகம் 9. “ஏ அழகிய பெண்ணே! உன்னுடைய கை நகங் களில் இருந்து எழும் மணத்தை நுகரப் பெற்ற தண்ணீர் தாகம் கொண்ட மான்கள் உன்னை வந்தடையும். அங்கு நீர் சுரவாத உன் கைகளைக் கண்டு அவை வெட்கித்தலை குனிந்து ஓடத் தொடங்கும்”.

ச்லோகம் 10. "பௌர்ணமி நிலவைப் போன்ற முகவொளி படைத்த பெண்ணே. நீ மேலே ஓரடி வைக்க முயலாதே. அவ்வாறு நீ முயன்றால் ஒளி பொருந்திய சுவற்றின்மீது மோதிக் கொள்வாய். தாமரை மலர் போன்ற உன் முகத்திலிருந்து புறப்பட்ட ஒளிக் கற்றைகள் அந்தச் சுவற்றிலே பதிந்துள்ளன".

ச்லோகம் 11. "அறிவொன்றுமில்லாத அழகிய பெண்ணே. நீ ஏன் இவ்வளவு மெதுவாக அடிமேல் அடி வைத்து நடக்கின்றாய். நீ இவ்வாறு மெதுவாக நடந்தால் உன் காதலன் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி இன்னொருத் தியோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டு இருப்பான். அழகிய மலர்கள் நிறைந்த இந்த நந்தவனத்தில் அவை அனைத்தும் பூத்துக் குலுங்குவதாலும் மரங்களும் செடி கொடிகளும் எங்கும் அடர்த்தியாகக் காணப்படுவதாலும் பகல் இரவுபோல் காட்சி அளிக்கின்றது. தான் இன்னொரு பெண்ணோடு கொஞ்சிக் குலாவுவதற்கு இந்தச்சூழல் உன் காதலனுக்கு உதவி செய்கின்றது என்ற உண்மையை நீ உணர்ந்து கொள்ளவில்லையே".

ச்லோகம் 12. "ஏ பெண்ணே. நீ ஏன் இவ்வளவு விரைவாக நடக்கின்றாய். இவ்வாறு நடந்து சென்றால் உன் காதலனைத் தாண்டி அவனுக்கு முன்னே சென்று அவனைத் திரும்பிப்பார்த்தவண்ணம் மேலே நடந்து செல்லலாம் என்ற எண்ணம் கொண்டுள்ளாயா? ஆனால் பெண்கள் தம் காதலர்தம் முகத்தை தமக்கு முன்னே எப்போதும் பார்த்துக் கொண்டே யிருக்கிறார்கள் அல்லவா!".

ச்லோகம் 13. "அழகிய ஸ்தனங்கள் படைத்த பெண்ணே. அதன் சுமையால் நீ வேகமாக நடக்க இயல



வில்லைபோலும். காதலனுடன் செல்லவேண்டுமானால் உன் நடையை நீ துரிதப்படுத்த வேண்டும்".

**ச்லோகங்கள் 14 முதல் 56 வரை கிடைக்கவில்லை.**

ச்லோகம் 57. மாதர் தம்மோடு நீர் விளையாட்டில் ஈடு பட்டிருந்த மன்னன் ஏரியில் பூத்திருந்த தாமரை மலர்மீது நீரைச் சொரிந்தான். அப்போது அவன் அணைப்பிலிருந்த பெண்ணின் கண்களில் நீர் வழிந்தது. அவன்மீது ஒரு பொய்யான கோபத்தோடு கடும் சுட்டெரிக்கும் பார்வையை (ஏறிட்டுக் கொண்டு) வீசினாள்.

ச்லோகம் 58. மன்னனின் நீர் விளையாட்டின்போது அவன் கை விரல்கள் அவன் அணைத்துக் கொண்டிருந்த பெண்ணின்மேல் தொடைகளில் கொஞ்சி விளையாட ஏதோ ஒரு மீன் தன்னைக் கடித்துவிட்டது போன்ற உணர்வுடன் மற்றைய பெண்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மன்னனை கட்டித் தழுவினாள் அவள்.

ச்லோகம் 59. நீரில் விளையாடிக் கொண்டிருக்கும் போது எழுந்த அலைகளைக் கண்டு அச்சம் கொண்ட மற்றொரு பெண் நீண்ட தன் சுருண்டமுடியை தன் முகத்தின் முன்னே தொங்க விட்டு இருந்தாள். இதைக் கடைக்கண் கொண்டு நோக்கிய மன்னன் அவை மன்மதன் கட்டிய காதல்படிகளோ என்ற எண்ணம் கொண்டான்.

ச்லோகம் 60. அழகிய பெண்கள் நீர் நிலையில் இறங்கிய போது அவர்களுடைய கால்கள், தொடை, உடுத்தி யிருந்த ஆடை, இடுப்பு, மார்பகங்கள் ஆகியவை மெல்ல மெல்ல நீரில் நனையத் தொடங்கின.

ச்லோகம் 61. பெண் ஒருத்தி தன் கைகளில் ஏந்திய

நீர் கொண்டு மன்னனின் முகத்தை நோக்கி எறிந்தாள். அவன் அப்போது தன் கண்களை மூடிக்கொண்டான். இந்த நிகழ்ச்சியின் போது பெண்கள் ஒருவரோடு ஒருவர் மற்றொரு பெண்ணின் மார்பில் உள்ள நகக்குறிகளை எண்ணத் தொடங்கினர்.

ச்லோகம் 62. இந்த நீர் விளையாட்டு பெண்களுக்கு எல்லை யில்லா மகிழ்ச்சியைத் தந்தது. கலவியின் உச்ச கட்டத்தை அடைந்தது போன்ற உணர்வினைப் பெற்றனர். சாயம் பூசிய அவர்தம் உதடுகள் வெளுத்துக் காணப்பட்டன. அவர்கள் கண்களில் தீட்டியிருந்த மை கரைந்த நிலையில் காணப்பட்டன. நெற்றியில் அணிந்திருந்த குங்குமம் சிதைந்து காணப்பட்டது. இவர்களுடைய இந்தக் கோலம் மன்னனைப் பெருமகிழ்ச்சி கொள்ளச் செய்தது.

ச்லோகம் 63. குந்தளப் பெண்கள் மார்பில் பூசியிருந்த மணம் மிக்க சந்தனக்குழம்பு நீரில் கரைந்தது. நீர் நிலையில் பூத்திருந்த தாமரை மலர்களிலிருந்து உதிர்ந்த மகரந்தத்தூள் பெண்களின் கை நகங்களில் ஒட்டிக் கொண்டன.

ச்லோகம் 64. மாதர்கள் அணிந்திருந்த செவிப்பூக்கள் நீரின் வேகத்தால் இழுத்துச் செல்லப்பட்டன. ஆனால் இதையறியாத மன்னன் அவர்களோடு குலாவிக் கொண்டி ருந்தான். ஆனால் செவிப்பூவையிழந்த (ச்ருதிகளில்) காதுகளோடு உறவு கொண்டி ருந்தான் என்று ச்லோகமிட்டு இருப்பது சிலேடையாகும். (இங்கு கவி ச்ருதி என்ற சொல்லை சிலேடையில் கையாண்டுள்ளார்.) ச்ருதி யாகிய வேதத்தின் பாதையிலிருந்து தவறிச் சென்றவர்களுடன் உறவு வைத்துக் கொள்ளக்கூடாது என்பது முன்னோர் களுடைய அறிவுரை ஆகும்.

ச்லோகம் 65. மன்னன் தம் காதலிமார்களை நீர் நிலையை விட்டு வெளியேறுமாறு பலமுறை கூறியும்



அவர்கள் செவி சாய்க்க வில்லை. இந்த நீர்விளையாட்டு அவர்களுக்கு மிகுந்த இன்பத்தைத் தந்தது. மாதர்தம் ஆபரணங்களும், மாலைகளும் மற்றைய மங்கலப் பொருள்களும் நீரினால் அடித்துச் செல்லப்பட்டபிறகும் அந்த இடத்தி லிருந்து அவர்கள் வெளியேற விரும்பவில்லை.

ச்லோகம் 66. நீரில் விளையாடி சோர்வடைந்தபின் முடிவில் மன்னன் தன் காதலிமார்களுடன் அரண்மனையை நோக்கிப் புறப்பட்டான். அந்தக்காட்சி திருப்பாற்கடலை கடைந்தபோது அதில் இருந்து வெளிப்பட்ட அழகிய நதி தேவதைகள் கற்பகவிருக்ஷத்தின் பின் கூட்டமாகச் சென்றது போன்று காணப்பட்டது.

ச்லோகம் 67. நீர் நிலைகளிலிருந்து வெளிப்பட்ட தன் காதலிமாரின் தலைமுடிகளிலிருந்து நீர் சொட்டும் அழகையும், அவர்கள் மார்பில் பொதிந்திருந்த நகக்குறி களையும் ஈரமான ஆடைகளின் ஊடேவெளிப்படும் உடல் அழகையும் ரசனையோடு பார்த்துக்கொண்டிருந்தான் மன்னன்.

ச்லோகம் 68. மன்மதனைவிட தான் அதிர்ஷ்டம் பொருந்திய வனாக எண்ணம் கொண்டான் வீரகம்பண்ணன். அவன் கண்களுக்கு காதலிமார்கள் தங்கள் தலைமுடியை உலர்த்திக் காய வைக்கும் அழகும், உடைகள் மாற்றிக் கொள்ளும் போது வெளிப்படும் மேனி அழகும் பெரு விருந்தளித்தன.

ச்லோகம் 69. பணிப்பெண்கள் மன்னனுக்கு உரிய ஆடைகளை அணிவித்தனர். அந்தப்புரத்தை விட்டுப் புறப்பட்ட மன்னன் தம் குலதெய்வமான சிவபெருமானை வணங்கி அரச வைக்குச் சென்றான்.

**(6ஆம் காண்டம் முற்றிற்று)**

## ஏழாம் காண்டம்

**ச்லோகங்கள் 1 முதல் 50 வரை பகல் மற்றும் இரவு நேர வர்ணனைகளைக் கொண்டவை.**

ச்லோகம் 1. சூரியன் தனது ஒளிமிக்க கதிர்களால் தாமரை மலர்களை அலரச் செய்தான். மன்னனின் காதலிமார்கள் போன்ற முகத்தோற்றத்தை அவை ஏற்படுத்தியதால் அவர்களின் கோபத்திற்கு அஞ்சி மேற்குத் திசையில் மறைந்தான்.

ச்லோகம் 2. கீழைத்திசையிலிருந்து புறப்பட்ட சூரியன் மேலைப்பகுதி கடலில் அமிழ்ந்தான். வெப்பம் கொண்டிருந்த அந்த நீரானது சூரியனுக்கு மீண்டும் புத்துணர்ச்சியைத் தந்தது. தாமரை மலரை அலரச் செய்வதில் தனது வெப்பத்தை வீணாக்கிய சூரியன் இவ்வாறு மீண்டும் புத்துணர்ச்சி பெற்றான்.

ச்லோகம் 3. பகல் தேவதையின் காதுகளிலிருந்து கழன்று வீழ்ந்த குண்டலம்போலே சூரியன் காணப்பட்டான். வருணனின் அந்தப்புரத்து மாதர்கள் அந்த சூரியனது ஒளி வட்டத்தைத் தமது காதிற்கு ஆபரணமாக சூட்டிக் கொண்டனர்.

ச்லோகம் 4. வருணனின் அந்தப்புரத்து மாதர்தம் உதடுகள் அந்தி நேரத்து சூரியனின் செந்நிறத்தால் சிவந்து காணப்பட்டன. அவர்கள் உதடுகளில் ஏற்பட்ட இந்த நிறமாறுதல் எந்த மது வகைளையும் அருந்தாத நிலையில் சிவந்து காணப்பட்டன.

ச்லோகம் 5. அலர்ந்த தாமரைகளின்மீது படிந்திருந்த



மதுவை உண்ட சூரியன் அம்பரத்தைக் கைவிட்டான். (அம்பரம்- வானம்) மேல் திசையை நோக்கி வருணனின் அந்தப்புரத்தை அடைந்தான். மதுவைக் குடித்ததால் ஏற்படும் தடுமாற்றம் சூரியனைத் தடுமாறச் செய்ததில் வியப்பி ல்லையே.

ச்லோகம் 6. கீழைத் திசையாகிய ஆசைநாயகியை விட்டுப் பிரிந்த விரகம் தீர மேலைத்திசை ஆசைநாயகியுடன் கொஞ்சிக் கொண்டிருந்தான் சூரியன். அவளை அடைந்த வுடன் அவனது விரக தாபம் நீங்கிற்று.

ச்லோகம் 7. கூம்பிய தாமரை மலர்கள் தங்களது நாயகனாகிய சூரியன் தம்மை மீண்டும் வந்து அடைய வேண்டும் என்ற எண்ணத்தோடு கைகளைக் கூப்பிய வண்ணம் பிரார்த்தனை செய்வதுபோலத் தோன்றின.

ச்லோகம் 8. மாலைத் தென்றலின் விளைவாக ஆர்ப்பரித்து எழுந்த கடலலைகள் மேகங்களின் ஊடே மறைந்திருக்கும் சூரியன் இறங்கி வருவதற்கு அமைத்த படிக்கட்டுகள் போலக் காணப்பட்டன.

ச்லோகம் 9. மேலைக் கடற்கரையில் தஞ்சம் புகுந்த சூரியனது ஒளிவட்டம் சிவனுடைய நாட்டியத்திற்கு இசைவாக ஒலிக்கப்பட்ட வட்ட வடிவமுடைய இசைக்கருவி போலக் காணப் பட்டது.

ச்லோகம் 10. சக்ரவாக பட்சிகள் ஆணும் பெண்ணும் இரவு நேரம் வந்துவிட்டதே நாம் பிரிய வேண்டுமே என்று ஏங்கித் தவித்தன.

ச்லோகம் 11. சூரியன் மறைந்தபிறகும் வானத்தில் ஆங்காங்கே சில ஒளிக்கற்றைகள் காணப்பட்டன. அவை

காலம் எனும் யானை பகல் என்னும் மரத்தை வேரோடு பிடுங்கி எறிந்த போதும் அதன் கிளைகள் ஆங்காங்கே விரவிக் கிடப்பன போன்ற தோற்றத்தை அளித்தன.

ச்லோகம் 12. மாலை நேரத்தில் இளஞ்சிவப்பு நிறத்துடன் காணப்பட்ட சூரியன் மேலைக்கடலில் அமிழ்ந்தபோது செந்நிறம் எங்கும் பரந்து காணப்பட்டது. முன்பொரு காலத்தில் மது கைடபர்கள் உயிர் துறந்தபோது அவர்கள் உடலிலிருந்து வெளிப்பட்ட ரத்தம் கடலில் கலந்து செந்நிறம் உண்டானது போல் இந்த நிகழ்ச்சி காணப்பட்டது.

ச்லோகம் 13. ஒளியிழந்த சூரியன் மேல் திசையில் ஆர்ப்பரிக்கும் கடலலைகளால் அங்குமிங்கும் நகர்ந்தான். அப்போது கடல் மீன்கள் பழுத்த செந்நிறம் கொண்ட பழத்தின் பகுதிகளோ என நினைத்து உண்ணுவதற்காக எட்டிப் பாய்ந்தன.

ச்லோகம் 14. மரங்களின்மீது அந்தி நேரத்தில் பட்ட ஒளிக் கதிர்கள் கருமையான நிழலைத் தோற்றுவித்தன. இருட்டுக்கு அஞ்சி ஓடும் சூரியனை அவை மேலே துரத்துவது போலக் காணப்பட்டன.

ச்லோகம் 15. சூரியன் மறையும்போது தன்னுடைய பரிதாபத்தை எல்லாம் (வெப்பத்தையும் பிரிவினால் ஏற்படும் துன்பத்தையும்) காதலனைப் பிரிந்து வாடும் காதலிமார் உள்ளத்திலே வைத்துச் சென்றான். இரவிலே ஒளிவிடும் மூலிகைகள் பக்கலிலே தன்னுடைய தேஜஸ்ஸை விட்டுச் சென்றான் சூரியன்.

ச்லோகம் 16. விஷ்ணுவின் பாதமாகிய ஆகாசத்தை கடந்து சென்றதால் மேலைத் திசையில் வீழ்ந்த சூரியனாகிய பறவை அடைந்த துர்க்கதியைக் கண்டு மற்றைய பறவைகள் தத்தம் கூண்டு களிலும் மரங்களிலும் உறங்கிக் கிடந்தன.



ச்லோகம் 17. லக்ஷ்மியின் உறைவிடமான தாமரை மலர்கள் இரவு நேரத்தில் தம் இதழ்களை முடிக் கொண்டன. தேனுண்ணும் ஆசையால் அங்கே வந்த வண்டுகள் தாமரை மலரைச் சுற்றிச்சுற்றி ரீங்காரம் இட்டுக் கொண்டிருந்தன. அந்தச் செயல் இரவு நேரங்களில் ஒலி எழுப்பிக் கொண்டு வீட்டைச் சுற்றிவரும் காவலாளிகள் போன்ற தோற்றத்தை அளித்தது.

ச்லோகம் 18. பகல் தேவதை தாமரை மலரில் கண்ணுறங்க அதன் உள்ளே இருக்கும் மது வெள்ளத்தைக் காப்பாற்றுவது போல கரு வண்டுகள் அவற்றைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

ச்லோகம் 19. அந்திப் பொழுதின் மங்கிய ஒளியில் காலம் எனும் நாட்டிய நங்கை பகல் என்னும் தன் வேஷத்தைக் களைந்து விட்டு இரவு என்னும் வேஷமிட்டு நடிப்பதற்காகத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்தாள்.

ச்லோகம் 20. மேலைத் திக்கில் உள்ள செம்பொடிகள் மீது சூரியனது தேரில் பூட்டிய குதிரைகள் சென்றதால் எழுந்த செந்நிறப் பொடிகள் மேலைத் திசையில் உறைபவனாகிய வருணனின் ஆடைகள் மீது படிந்திருந்தன. அந்திநேர மங்கிய ஒளியில் இந்த ஆடைகள் செந்நிறத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன.

ச்லோகம் 21. அந்தி நேரத்தில் வானத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த செந்நிற மேகங்கள் இரவு என்னும் நங்கை தன் முகத்தில் பூசிக் கொள்வதற்கு சிவப்பு வண்ணத்தைத் தருவதற்காக வந்தனவோ என்று நினைக்கத் தோன்றியது.

ச்லோகம் 22. அந்தி நேரத்தின் மங்கிய ஒளியில் வெளிப் பட்ட செந்நிறம் இளந்தளிர்கள்மீது படிந்தன. அவை வேகமாக மேலைக் கடலில் வீழ்ந்த சூரியன் ஆழ்கடலின் அடிப்பகுதியில் அமைந்திருந்த செந்நிறங்கொண்ட பவளக் காடுகளைப் பெயர்த்து எடுத்து வெளிக் கொணர்ந்ததுபோலக் காணப்பட்டன.

ச்லோகம் 23 முதல் 25 வரை:- இரவின் கருமை ஊரெங்கும் பரவியிருந்தது. அதனால் மரங்கள் கண்களுக்குப் புலப்படவில்லை. நிலவென்னும் நங்கை தமலா மரத்தின் இளந்தளிர்களைக் காதுக்கு ஆபரணமாகப் பூட்டிக் கொண் டாள். இரவென்னும் நங்கை புனுகுக்காப்பினைத் தன் முகத்தில் பூசிக் கொண்டாள். ஆங்காங்கே பகல்நேர சூரியனின் வெப்பத்தால் பீடிக்கப்பட்ட மரங்களிலிருந்து புகை காணப்பட்டது. தாமரை மலர்கள் தம் இதழ்களை மூடிக் கொண்டதால் கறு வண்டுகள் எங்கும் ரீங்காரமிட்டுத் திரிந்து கொண்டிருந்தன. ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவால் அலைகள் போல் எழுந்த யமுனை நதியின் நீர் கிளர்ந்து எழுந்ததுபோல மரங்கள் உயர்ந்து காணப்பட்டன.

ச்லோகம் 26. மக்கள் பொருள்களைப் பார்க்க இயலாதவாறு எங்கும் இருள் சூழ்ந்து காணப்பட்டது. எரிந்து கொண்டிருந்த விளக்கு அணைக்கப்பட்டால் எப்படி எங்கும் இருள் சூழ்ந்திருக்குமோ அவ்வாறு காணப்பட்டது.

ச்லோகம் 27. இரவில் நக்ஷத்ரங்கள் ஆங்காங்கே வானில் காணப்பட்டன. தன்னுடைய நாட்டியம் முடிந்தபிறகு யானைத் தோலை தரித்திருந்த சிவன் அவற்றில் படிந்திருந்த ரத்தத் துளிகளுடன் வானத்தைப் போர்த்தியதுபோல் அந்தக் காட்சி அமைந்திருந்தது.



ச்லோகம் 28. நீல வானில் தோன்றிய நக்ஷத்ரங்கள் பகலின் வெப்பம் தாங்காது அவற்றிலிருந்து விடுதலை கிடைத்த தம் நிலைமையை எண்ணிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருப்பது போலக் காணப்பட்டன.

ச்லோகம் 29: காலம் என்னும் உழவன் நக்ஷத்ரங்கள் ஆகிய சுத்திகரிக்கப்பட்ட விதைகளை இருள் என்னும் வயற் காட்டில் விதைத்தான். அதன் விளைவாக சந்திரக்கிரணங்கள் என்னும் பயிர் எங்கும் மண்டியது.

ச்லோகம் 30: தொடுவானமாகிய மரத்தின் கிளைகளாக அந்தி மாலை ஒளி காணப்பட்டது. அதன்பிறகு அந்த மரத்தின் இலைகளாக இருள் தோற்றமளித்தது. பரந்தவெளியில் காணப் பட்ட தாரகைகள் அதன் கிளைகளாகக் காட்சியளித்தன.

ச்லோகம் 31: அந்த இருளில் இளம் பெண்கள் தம் காதலரைக் காண்பதற்காகச் சென்றனர். ஆனால் காதலனுடைய நண்பர்களோ அந்த இரவு நேரத்தில் மணம் சூழ்ந்த காதலிமாரின் மூச்சுக்காற்றினை அடையாளமாகக் கொண்டு அவர்களைத் தத்தம் காதலர்களிடம் அணுகவிடாமல் செய்தனர்.

ச்லோகம் 32:இரவுநேரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்குகள் இரவுத்தாயின் குழந்தைகள்போல் காணப்பட்டன. அந்தக் குழந்தை களை எண்ணெய் விட்டும், திரிகளைத் தூண்டியும் பராமரித்து வந்தனர் மக்கள்.

ச்லோகம் 33: இரவு என்னும் நங்கை தன் கருமையான நீண்ட கூந்தலில் தாரகைகளைப் பூக்கள் போல் சூட்டிக் கொண்டு மதி என்னும் காதலனின் வருகையை நோக்கி அல்லிமலர் பூக்களை மலரச் செய்து கொண்டு புன்முறுவல் பூத்து நின்றாள்.

ச்லோகம் 34: கீழைத்திக்கில் சந்திரனுடைய ஒளிக் கற்றையைக் கண்டு மகிழ்ச்சி கொண்ட கடல் அலைகள் ஆர்ப்பரித்து நின்றன.

ச்லோகம் 35: கீழைத்திக்கில் மறைந்திருந்த சந்திரன் வெளி வரத் தொடங்கினான். அந்தக் காட்சி கருவுற்றிருந்த பெண் ஒருத்தி தன் மகவை ஈன்றெடுக்கும் நிலையை நினைவு படுத்தியது.

ச்லோகம் 36: கீழைத்திக்கில் தோன்றிய சந்திரனின் வெளி வட்டத்தில் காணப்பட்ட சிவப்புநிறம் கீழைத்திக்காகிய பெண்ணின் நெற்றியில் அமைந்துள்ள திலகம்போல் காட்சியளித்தது.

ச்லோகம் 37: சந்திரனின் செந்நிறம் கொண்ட ஒளிவட்டம் "சந்த்யாகா மலர்களைக்" கொண்ட குடையை மன்மதன்மேல் விரிக்கப்பட்டது போல் காட்சியளித்தது.

ச்லோகம் 38: அரசன் இறந்தபிறகு பட்டமேற்ற இளவரசன் வரிச்சுமையைக் குறைத்து அனைவருடைய நன்மதிப்பைப் பெறுவதுபோல் வெப்பக்கதிர்களை வீசிக் கொண்டிருந்த ஆதவன் இவ்வுலகினைவிட்டு மறைந்தபின் தண்மைகொண்ட ஒளிக்கற்றைகளை வீசிக் கொண்டு சந்திரன் கீழைத் திசையில் தோன்றினான்.

ச்லோகம் 39: கடமை வீரனான வீரகம்பண்ணர் அந்தி வேளையில் செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களைச் செய்து விட்டு கங்காதேவியாகிய தன் மனைவியை அருகில் அழைத்து கீழ்க்கண்டவாறு கூறலுற்றான்.

ச்லோகம் 40: "தாமரை மலர்களையொத்த விழிகளைக் கொண்ட மங்கையே! உன்னுடைய இனிய சொற்கள் கொண்ட வர்ணனைகளை நான் கேட்க விரும்புகிறேன். உன் அடிமையாகிய நான் அமுதத்தைச் சொரியும் அழகான உன் சொற்களைக் காது கொடுத்துக் கேட்க விரும்புகிறேன்".



ச்லோகம் 41: இவ்வாறு வீரகம்பண்ணர் கூறக்கேட்ட கங்கா தேவி தாமரை போன்ற தன் முகத்தில் நாணம் வெளிப்பட மெல்லிய குரலில் பேசலுற்றாள்.

ச்லோகம் 42: "என் அன்புக்குரிய மன்னா! இந்த இரவுப் பொழுது எத்துணை இனிமை பயப்பதாய் அமைந்துள்ளது. மன்மதனின் உள்ளத்திற்கு மகிழ்ச்சி தரும் வகையில் சந்திரனின் ஒளிக்கற்றைகள் எங்கும் சூழ்ந்திருக்க இளந் தென்றல் வீசிக் கொண்டு இருக்கிறது".

ச்லோகம் 43: "இரவென்னும் நங்கை இவ்வுலகை ஆட்சி செய்கிறாள். அவள் கீழைத்திசையாகிய தன் காதலனை மார்போடு அணைத்திடும் போது சந்திரனின் ஒளிக்கற்றைகள் அவளுடைய இருளின் கருமையை ஒத்த கேசங்களை ஒன்று சேர்த்தன".

ச்லோகம் 44: "கீழைத்திக்கில் அமைந்துள்ள மலை களின்மீது கடந்து செல்லும்போது இருள் என்னும் நீரை வானம் என்னும் கோப்பையிலிருந்து தாமரைத்தண்டுகள் வழியாக நீர் உறிஞ்சப் படுவதுபோல் சந்திரன் பருகினான்".

ச்லோகம் 45: "மூலிகைகளின் அதி தேவதையான சந்திரன் இரும்பைப் பொன்னாக்கும் வித்தையைக் கற்றவன் போல் காணப்பட்டான். ஏனெனில் இருள் என்னும் இரும்பை வெள்ளியை ஒத்த சந்திர ஒளியாக மாற்றினான். உதயராகம் என்னும் உலையில் இருள் என்னும் இரும்பைக் கொடுத்து இந்த மாற்றத்தை அடையச் செய்தான் சந்திரன்".

ச்லோகம் 46: "கீழைத் திக்காகிய தேவதை இரவென்னும் நங்கையளித்த சந்திரனின் சங்கு போன்ற வெண்மை கொண்ட ஒளிக் கற்றைகளை உடலில் தரித்து வெண்பட்டாடையை உடுத்திக் கொண்டவள் போல் காணப்பட்டாள். இவ்வாறு உடுத்திக் கொண்ட கீழைத் திக்காகிய தேவதையின் அழகு அளவிடமுடியாத அளவிற்கு பொங்கி நின்றது".

ச்லோகம் 47: "கீழைத்திக்காகிய நங்கையோடு தழுவி நின்ற சந்திரன் அதே நேரத்தில் குமுதவதியையும் (அல்லி மலர்களாகிய குமுத மலர்களின் கூட்டம்) அணைத்துக் கொண்டிருந்தான். காமக் களியாட்டத்தில் ஈடுபட்டிருக்கும் ஆண்கள் நம்பத்தகுந்தவர்கள் அல்லர் என்பது இதனால் வெளிப்படுகிறது".

ச்லோகம் 48: "சந்திரன் தன்னுடைய குளிர்ந்த கிரணங்களை எத்தனைமுறை தாமரை மலர்கள்மேல் செலுத்திய போதும் அவைகள் மலர மறுத்தன. கற்புடை மாதர்கள் எத்துணை உறுதியுடன் இருப்பார்கள் என்பதை இந்தச் செயல் வெளிப்படுத்தியது".

ச்லோகம் 49: "சூரியனும் சந்திரனும் அமாவாசையன்று ஒருவரையொருவர் கடந்து செல்கின்றனர். அப்போது சூரியனிடமிருந்து பெற்ற வெப்பத்தைப் பிரிந்து நின்ற காதலர்களின் உள்ளங்களில் செலுத்தினான் சந்திரன்".

ச்லோகம் 50: "சந்திரனின் மத்தியில் வண்டின் உருவம் போல் காணப்படும் கருமையை மான் என்று சிலர் கூறுவர். அது உண்மை அல்ல. ருத்ரன் திரிபுர சம்ஹாரம் செய்தபோது அவனுடைய தேரின் சக்கரங்களில் ஒன்றாகச் சந்திரன் பணிபுரிந்தான். அப்போது கடை யாணியில் தடவப்பட்ட மையே சந்திரனில் காணப்படும் கரும்புள்ளி ஆகும்".



ச்லோகம் 51: "அல்லது சந்திரனின் மத்தியில் காணப் படுவது இந்திர நீலம் என்னும் மணியாகும் என்றும் கொள்ளலாம். சந்திரனின் மடியில் படுத்துறங்கும் இரவு என்னும் நங்கையின் நிறமும் அதுவே".

**ஏழாம் காண்டம் முற்றிற்று.**

## எட்டாம் காண்டம்

**இந்தக் காண்டத்தில் முகம்மதியர்களுடைய படையெடுப்பால் பாழ்பட்டிருந்த தமிழகத்தின் நிலைமை விவரிக்கப்படுகிறது.**

.......தன் பெயருக்கேற்ப எங்கும் புலிகள் உலாவிக் கொண்டு இருந்தன. (இந்த சொற்றொடரின் முன்பகுதி கிடைக்கவில்லை. வ்யாக்ரபுரியைக் குறிக்கும் சொற்றொடர்களாக இவற்றைக் கொள்ளலாம். வ்யாக்ரபுரி என்பது சிதம்பரத்தைக் குறிக்கும்.)

### திருவரங்கத்தின் சூழல் விவரிக்கப்படுகிறது.

திருவரங்கத்தில் ஸ்ரீரங்கநாதன் பள்ளிகொண்டிருந்த ப்ரணவாகார விமானம் சீரழிந்த நிலையில் காணப்பட்டது. ஸ்ரீரங்கநாதன்மீது தன் பணாமங்களைக் கொண்டு காத்து நிற்கும் ஆதிசேஷன், மேலே இருந்து விழும் கற்கள் ஸ்ரீரங்க நாதன்மேல் படாதவாறு தடுத்துக் கொண்டிருந்தான். கற்கள் ஸ்ரீரங்கநாதனின் மீது விழக்கூடுமானால் அது அவனுடைய யோகநித்திரையைக் கலைத்து விடும் என்று ஆதிசேஷன் இந்தப் பணியை மேற்கொண்டான். *(கி.பி.1323ஆம் ஆண்டு நிகழ்ந்த படையெடுப்பின் விளைவாகத் திருவரங்கத்தில் மண்டபங்களும் சிலைகளும் உடைத்தெறியப்பட்டன. உத்ஸவ*

*ரான அழகியமணவாளன் உபயநாச்சிமார்களோடு தெற்குநோக்கி பயணத்தை மேற்கொண்டார். அந்தக் கலகத்தின் போது பன்னீராயிரம் குடிமக்கள் கொல்லப்பட்டனர். எங்குநோக்கினும் பிணக்காடாகக் காட்சியளித்தது திருவரங்கம். முதலில் சமயபுரத்தைத் தலைநகராகக் கொண்டு உலூக்கானுடைய படைத்தலைவர்கள் கொடுங்கோலாட்சி புரிந்து வந்தனர். அதன்பிறகு மதுரைக்குத் தம் தலைநகரை மாற்றிக் கொண்டனர். கி.பி. 1371இல் வீரகம்பண்ணருடைய படையெடுப்பிற்கு முன்பு மதுரா விஜயத்தில் திருவரங்கத்தின் நிலைமை மேற்கண்டவாறு விவரிக்கப் படுகிறது.)*

தமிழகத் திருக்கோயில்களில் கோயில் கொண்டிருக்கும் மற்றைய தெய்வங்களின் நிலையும் அவ்வாறே இருந்தது. திருக்கோயில்களின் கதவுகள் கரையான் களால் அரிக்கப்பட்டு அழிவின் விளிம்பில் காணப்பட்டன. விமானங்களின்மேல் அடர்ந்த புதர்களும் செடி கொடிகளும் காணப்பட்டன.

மிருதங்கத்தின் ஒலி எங்கும் நிறைந்திருந்த இந்தத் திருக் கோயில்களில் நரிகளின் ஓலம் மிகுந்து காணப்பட்டது.

காவிரிநதி கரைபுரண்டு நீண்ட காலமாக ஓடிக் கொண்டிருந்த பாதையைவிட்டு விலகி விளை நிலங்களைப் பாழ்படுத்தி பல்வேறு திசைகளில் கிளைநதிகளாகப் பெருக் கெடுத்துச் சென்று கொண்டிருந்தது. முகம்மதியர்கள் தம் மனம்போன போக்கிலே நாட்டின் உட்பகுதியில் ஊடுருவி நாசத்தை விளைவித்தது போல இந்தக் காவிரியும் காணப் பட்டது.

திருவரங்கத்து அந்தணர்கள் குடியிருந்த வீதிகளில் வேத முழக்கத்தின் ஒலியோடு அவர்கள் மேற்கொண்ட



''வேள்வியுள் நெய்யழல் வான்புகை போய் திடவிசும்பில் அமரர் நாட்டை மறைத்துக் கொண்டிருந்த'' நிலைமாறி தற்போது முகம்மதியர்கள், தாங்கள் உண்பதற்காக மாமிசத்தைத் தீயிலிட்டு வாட்டுவதால் எழும் துர்நாற்றமும், மது மயக்கத்தினால் ஒருவருக்கொருவர் கூச்சலிட்டுக் கொண்டு திரியும் முகம்மதியர்களின் கூட்டமுமே காணப் பட்டது.

மதுரையின் அடர்ந்த காடுகளும் நந்தவனங்களும் அழிக்கப்பட்டன. தென்னை மரங்கள் வேரோடு அழிக்கப் பட்டு, இரும்புக் கம்பிகள் அவ்விடத்தில் ஊன்றப் பட்டிருந்தன. இரும்புக் கம்பிகளை இணைக்கும் முள் வேலிகளில் மனிதர்களின் மண்டைஓடு ஆங்காங்கே கட்டி தொங்கவிடப்பட்டிருந்தன.

நெடுஞ்சாலைகளில் பயணம் செய்வோர் முன் காலங்களில் அழகிய மாதர்கள் தத்தம் இல்லங்களில் நாட்டியம் பயிலும்போது எழும் ஓசையைக் கேட்டு மகிழ்ந்திருந்தனர். ஆனால் இப்போதோ இரும்புக்கம்பிகளால் பிணைக்கப்பட்டு தெருக்களிலே இழுத்துச் செல்லப்படும் அந்தணர்களின் காதைத் துளைக்கும் ஓலத்தையே அனைவரும் கேட்டனர்.

மதுரைப் புறநகரின் நுழைவாயில் கோபுரங்களில் பட்டுத் துணிகளை உடுத்தி அழகுபடுத்தப்பட்ட பதுமைகள் காணப்பட்ட இடத்தில் தற்போது சிலந்திகள் வலைகளைப் பின்னி வாழ்ந்து கொண்டிருக்கும் காட்சியைக் காண முடிந்தது.

தர்பாரின் சுவர்களில் பூசப்பட்ட சந்தனத்தின் மணம் வீசிக் கொண்டிருந்த நிலைமை மாறி, தர்பாருக்கு அழைத்து

வரப்பட்ட பிணைக்கைதிகளான அந்தணர்கள் சிந்திய கண்ணீரால் உலர்ந்து போயிருந்த சந்தனம் இளகிய நிலையில் காணப்பட்டது.

அழகிய மலர்ச்சோலைகளில் தற்போது ஆந்தைகளின் அலறல்தான் கேட்கப்படுகிறது. ஆனால் இதைவிட என் மனத்திற்கு (என் என்பது வீரகம்பண்ணனின் முன் தோன்றிய ஓர் தேவதையைக் குறிக்கும்) துன்பத்தைத் தந்த நிகழ்ச்சி யாதெனின், முகம்மதியர்கள் தம் இல்லங்களில் வளர்த்து வந்த கிளிகளுக்கு பாரசீக மொழியைக் கற்றுக் கொடுத்ததே.

தாமிரபரணி ஆற்றின் நீர் தெளிந்து அதிலே நீராடும் மங்கையர் தம் மார்பகங்களிலே பூசிக் கொண்டிருந்த சந்தனக் குழம்பைக் கரைத்து கரைபுரண்டு ஓடிய காட்சி மறைந்து, முகம்மதி யர்கள் தம் உணவிற்காகக் கொன்ற பசுமாடுகளின் ரத்தம் அந்த ஆற்றின் நீரிலே கலந்து சிவந்து காணப்பட்டது.

நிலத்திற்குரிய விளைபொருள்கள் பயிரிடப்பட வில்லை. இந்திரனும் உரிய காலங்களில் மழை பொழிவிக்க வில்லை. ஆனால் யமனுக்கோ அதிக வருவாய் கிட்டியது. முகம்மதியர்களால் கொலை செய்யப்படாது விடப்பட்ட சில குடிமக்கள் பட்டினியால் வாடி, உயிர் துறந்தனர். முகம்மதியர் படையெடுப்பால் அதிகமான பலனைப் பெற்றவன் யமனே.

தமிழக மக்களைக் கண்டு நான் பெரிதும் துன்பம் அடைந்தேன். அவர்களுடைய உதடுகள் வறண்டு காணப் பட்டன. பெரு மூச்செறிந்து கொண்டிருந்தனர். தலை முடியைக்கூட அவர்கள் பேணவில்லை.

கலிபுருஷன் தன்னுடைய முழுமையான ஆட்சியைச் செலுத்தி வருகிறான். அவனுக்கு என் பாராட்டுகள்



உரித்தாகுக. (இது வஞ்சப்புகழ்ச்சியின் பாற்படும்) தமிழகத் திலே நல்ல நூல்களைக் கற்பாரில்லை. தர்மத்தின் குரல்வளை நெறிக்கப்பட்டது. கட்டுப் பாடும், கண்ணியமும் அழிக்கப் பட்டன. உயர்குடிப் பிறப்பாளர்கள் பல துன்பங்களுக்கு ஆளானார்கள். பண்பாட்டைப் பற்றிய சிந்தனையே நாட்டில் காணப்படவில்லை.

**இவ்வாறு தமிழகத்தின் நிலைமையை வீரகம் பண்ணன் முன் தோன்றிய தேவதை கூறக்கேட்டான். அப்போது அவள் ஓர் வீர வாளை வீரகம்பண்ணனுக்கு அளித்தாள். இந்த வாளின் உதவி கொண்டு மதுரையை நோக்கிப் படையெடுத்துச் சென்று மதுரையை மீட்டிடுமாறு ஆணையிட்டாள் அந்தத் தேவதை.**

இவ்வாறு அளிக்கப்பட்ட அந்த வாளின் பெரு மையைக் கீழ்க்கண்டவாறு கூறலுற்றாள் அந்தத் தேவதை.

''வெள்ளியினாலான உறையுள் கைப்பிடியோடு கூடிய அந்த வாளானது ஒளிவிட்டுக் கொண்டிருந்தது. அந்த வாள் அப்போதுதான் தோலுரித்த பாம்பைப் போலக் காணப்பட்டது. பத்ரகாளியின் கோபத்தையொத்த அந்த வாளானது கருமை நிறத்தில் காணப்பட்டது. அது அகரு மரப்பசையையொத்த நிறத்தைக் கொண்டிருந்தது. சுற்றி எரிந்துகொண்டிருந்த விளக்குகளின் ஒளி அந்த வாளில் பிரதி பலித்தது. அதைக் காணும்போது இருண்ட மேகங்களின் இடையே தோன்றும் மின்னல்போலக் காணப்பட்டது, அந்த ஒளிப்பிழம்பு. போரிடும் எதிரிகளின் மனைவியர்கள் கண்ணீர் சிந்திடச் செய்யும் ஆற்றல் பெற்றது இந்த வாள்''. பாண்டி யர்கள் மற்றும் சோழர்கள் ஆகியோரின் செல்வச் செழிப்பிற்கு அதிபதியான அந்த தேவதையின் மறு உருவமோ என்று

கொள்ளத்தக்க அந்தத் தேவதை அந்த வாளை வீரகம்பண்ணனிடம் கொடுத்தாள்.

''மன்னனே! நீ கவனத்துடன் கேட்பாயாக. இந்த வாள் விச்வகர்மாவால் தேவர்களுடைய ஆயுதங்களை ஒன்று படுத்தி செய்யப்பட்டதொன்றாகும். அவன் அதை அசுரர் களை அழிப்பதற்காகச் சிவபெருமானிடம் கொடுத்தான்.

சிவபெருமான் அசுரர்களை அழித்தபிறகு, அந்த வாளைப் பாண்டிய மன்னனுக்கு அளித்தான். தலைமுறை தலைமுறையாக அந்த வாள் பாண்டிய மன்னர்களால் பாதுகாக்கப்பட்டு வந்தது.

அகஸ்த்யமுனி பாண்டியர்கள் இனி இந்த வாளை வைத்துக் கொள்ள வல்லமை படைத்தவர்கள் அல்லர் என்று கருதி அதனை உன்னிடம் கொடுக்கச் சொன்னார்.

இயற்கையிலேயே நீ ஆபத்தான எந்த நிலைமை யையும் எதிர் கொள்பவனாக விளங்குகிறாய். இந்த வாள் உன்னிடம் இருப்பதால் உன்னை யாரும் வீழ்த்திட இயலாது. காட்டுத்தீ பெரும் சேதத்தை விளைவிக்கக்கூடியது. அந்தக் காட்டுத்தீயோடு பெரும் காற்றும் இணைந்தால் அந்த நாசத்தை அளவிட முடியாது. அதைப்போன்ற இயற்கையான உன்னுடைய வீரமாகிய காட்டுத்தீயோடு பெருங் காற்றாகிய இந்தவாளும் சேரட்டும்.

இந்த வாள் உன்னிடம் இருப்பதால் போர்க்களத்தில் நீ வீழ்ச்சி யடையமாட்டாய். எதிரிகளின் ஆயுதங்களால் உனக்கு ஒரு தீங்கும் நேராது.

மின்னலின் ஒளியைக் கக்கிக்கொண்டு போரிடவல்ல இந்த வாள் உன் கரங்களில் இருக்கும்வரை யமனும்கூட உன்னிடம் வருவதற்கு அஞ்சுவான்.



வடமதுரையை நோக்கிச் சென்று கம்ஸனாகிய கொடி யோனை வீழ்த்திய கிருஷ்ணனைப் போன்ற நீ இப்போது இந்த வாளுடன் தென் மதுரையை நோக்கிச் செல்வாயாக. அங்கே உலகில் வாழும் அனைத்து மக்களுக்கும் தீமை புரிபவர்களாய் கொடுங்கோலர்களாகிய முகம்மதியர்களை வீழ்த்தித் தென்மதுரையை வெற்றி கொள்வாயாக.

மூவுலகங்களையும் காப்பதாகச் சபதம் செய்து அதற்கு அடையாளமாக உன் கைகளில் கங்கணங்களை அணிந்து ள்ளாய். இந்தக் கங்கணங்களை அணிந்து கொண்ட நாளிலிருந்து நீ மக்களைக் காப்பாற்றி வருகிறாய். அந்தப் பணி தொடரட்டும்.

''ரத்தச்சிவப்பு நிறம் கொண்ட கண்களையும், அச்சத்தை அளித்திடும் குறுந்தாடியையும் கடுகடுப்பான முகத் தோற்றத்தையும் கொண்ட முகம்மதியப் படை வீரர்களின் தலையை இந்த வாளினால் கொய்திடுவாயாக'' .

''மது அருந்திய மயக்கத்தில் காணப்படும் யவனப் பெண் மணிகளின் புன்னகையாகிய 'மதியொளி', போர்க் களத்தில் நீ வெளிப்படுத்தும் தீரமாகிய சூரியனால் மறைக்கப் படட்டும்''.

''இந்த நாட்டில் 'தர்மம்' தீய எண்ணம் கொண்ட முகம்மதியர்களால் பெருந்துன்பத்துக்கு ஆளாக்கப் பட்டுள்ளது. அதன் விளை வாகப் பூமி வறண்டு போயிற்று. அந்த வறண்ட பூமியில் தர்மமாகிய பயிர் தழைத்திட எதிரிகளின் ரத்தமாகிய மழை பொழிய வேண்டும். அப்போது தான் நாட்டில் தர்மம் தழைக்கும்''.

''இந்த வாளைக்கொண்டு பூதகணங்களும் பேய்

களும் பிசாசுகளும் தலையறுக்கப்பட்ட எதிரிகளின் உடல் களிலிருந்து வெளிப்படும் ரத்தத்தைப் பருகி, கூத்தாடச் செய்வாயாக''.

''கொடுஞ்செயல்கள் பல புரிந்து வரும் முகம்மதி யர்களின் தலைவனை வெற்றி கொண்டு ராம சேதுவில் உன்னுடைய வெற்றித் தூணை நாட்டுவாயாக. மூவுலகங் களையும் சூழ்ந்து நிற்கும் முட்புதர் களான முகம்மதியர்களை நீ வெற்றி வாகை சூடிடுவாயாக''.

''நீ இந்த நாட்டின் மன்னன். உன்னுடைய ஆட்சியில் காவிரி நதியானது நன்றாகப் பழக்கப்பட்ட பெண் யானை போல் நடையிட்டு வருவாள். முகம்மதியர்களின் ஆட்சியின் போது காவிரி நதியானது தறிகெட்டு ஓடி நாட்டைப் பாழ்படுத்தியது. அந்த நிலை மாற வேண்டும். ஏனெனில் தாயான காவிரி தன் மக்களுக்கு நன்மை செய்வதையே விரும்பிடுவாள்''.

**எட்டாம் காண்டம் முற்றிற்று.**

## மதுரா விஜயத்தின் இறுதிக் காண்டம் (ஒன்பதாவது காண்டம்)

**இந்தக் காண்டத்தில் ஒன்று முதல் 20 ச்லோகங்கள் வரை வீரகம்பண்ணர் முகம்மதியப் படைவீரர்களுடன் நடத்திய போரினை வர்ணிக்கின்றன.**

**21முதல் 40ஆவது ச்லோகம் ஈறாக வீரகம்பண்ணர் முகம்மதிய மன்னனுடன் நேருக்கு நேர் போரிட்டு, அவனை வீழ்த்தி மதுரையைக் கைப்பற்றிய நிகழ்ச்சிகள் வர்ணிக்கப் பட்டுள்ளன.**



ச்லோகம். 1. வீரகம்பண்ணருடைய விற்படை வீரர்கள் யானைமீது போரிட்டுக் கொண்டிருந்த முகம்மதியப் படைவீரர்களின் கரங்களை 'அர்த்த சந்த்ர' என்ற பெயர் கொண்ட அம்பினால் வெட்டி வீழ்த்தினர். அவ்வாறு துண்டிக்கப்பட்ட கைகள் ரத்த வெள்ளத்தில் ஒன்றன்பின் ஒன்றாக வீழ்ந்தன.

பரீக்ஷித்தின் மைந்தனான ஜனமேஜயன் செய்த ஸர்ப்ப யாகத்தில் நாகப்பாம்புகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து விழுந்த நிகழ்ச்சியை இந்தக் காட்சி நினைவூட்டியது.

ச்லோகம். 2. வரிசையாக ஊர்ந்து வந்த யானைகளின் தலைகள் வீரகம்பண்ணரின் படைவீரர்களால் பிளக்கப் பட்டன. அதன் விளைவாக அவற்றின் நெற்றியில் அணி விக்கப்பட்டிருந்த முத்துக்கள் ரத்தத்தில் தோய்ந்தி ருந்ததால் திடீரெனத் தோன்றிய சிகப்பு ஒளியை வெளிப்படுத்தின.

ச்லோகம். 3. முகம்மதியர்களுடைய குதிரைப்படை வீரர்கள் தம்முடைய வாள் கொண்டு வீரகம்பண்ணருடைய படையில் உள்ள யானைகளின் முகத்தில் பாய்ச்சிட, அந்த யானைகளானது குதிரை களையும், படை வீரர்களையும் தம் கால்களில் இட்டுத் துவைத்தன.

ச்லோகம். 4. இவ்வாறு துன்புறுத்தப்பட்ட யானை களின் முகத்திலிருந்து வெளிப்பட்ட குருதியைக் கண்டு மகிழ்ச்சி கொண்டன பூத கணங்களும் பிசாசுகளும். இரவில் அங்கு நடமாடிய பேய்களும் பிசாசுகளும் ரத்தம் தோய்ந்த முத்துக்களை தன்னகத்தே கொண்டுள்ள ரத்த ஆற்றிலிருந்து ரத்தத்தைப் பருகிக் களித்தன.

ச்லோகம். 5. சில பறவைகள் இறக்கும் தருவாயில் உள்ள யானைகளின் மாமிசங்களை உண்பதற்காக அவற்றைக்

கொத்திக் கொண்டிருந்தன. அத்தகைய செயல்களால் நடுக்கமுற்று, செயல் இழந்திருந்தன அந்த யானைகள். அப்போது அந்தப் போர்க்களத்தைச் சுற்றித் திரிந்த குள்ள நரிகள் யானைகளுக்கு உயிர் வந்து விட்டனவோ என்று அஞ்சி, போர்க்களத்தைவிட்டு அகன்றன.

ச்லோகம்.6. தேர்ச்சக்கரங்களின் இடையே அகப்பட்ட முகம்மதியப்படையினரின் தலைகள் பூமியில் விழுவதற்கு முன் பாகவே ராக்ஷஸ பெண்கள் அவற்றைத் தம் கைகளில் ஏந்தி தம் காதுகளில் ஆபரணமாகப் பூட்டிக்கொண்டனர்.

ச்லோகம்.7. ஒரு யானையானது தன் கால்களை நன்றாக ஊன்றி துதிக்கையால் முகம்மதியப்படைவீரனை மேலே எறிந்தது. கீழே விழுந்த அவனைத் தன் தந்தங்களால் ஏந்திக் கொண்டது. இவ்வாறு அவனைப் பலமுறைப் பந்தாடியது.

ச்லோகம்.8. தீரமிக்க படைவீரன் ஒருவன் எதிரிப் படையின் யானையின் பின்புறமாக ஏறி அதில் வீற்றிருந்த எதிரியை வெட்டிச் சாய்த்தான். அந்த யானையை தன் வசமாக்கிக் கொண்டான்.

ச்லோகம்.9. படைவீரன் ஒருவன் எதிரியின் அம்பு களால் யுத்த களத்தில் வீரமரணம் அடைந்து, வீரசொர்க்கத்தை அடைந்தான். வீர சொர்க்கத்தை அடைந்ததால் அவன் தேவர்களில் ஒருவனாக ஆகி விட்டான். சொர்க்கத்திலிருந்து தன்னைக் கொன்ற வீரன்மேல் மலர்களைத் தூவினான். அவனுடைய வீரத்தைக் கொண்டாடினான்.

ச்லோகம்.10. படைவீரன் ஒருவன் இரு முனைகள் கூர்மை கொண்ட ஈட்டியால் தாக்கினான். அந்தப் படைவீரன்



அதைப் பிடுங்கி ஈட்டியை எறிந்தவன்மேல் வீசினான். இதனால் அவன் படுகாய முற்றான். உண்மையான வீரர்கள் போரிடும் போது இதுபோன்ற நிகழ்ச்சிகளை நினைத்து மகிழ்ச்சி கொள்ளாதவர்கள் உண்டோ?

ச்லோகம்.11. இரு படைவீரர்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டு, தத்தம் தலைகளை இழந்தனர். அதனால் மரணமுற்ற இருவரும் கைகோர்த்துக் கொண்டு வீரசொர்க்கம் எய்தினர்.

ச்லோகம்.12. சில படைவீரர்கள் சிங்கங்களைப் போல் அந்தப் போர்க்களத்தில் உலாவிவந்தனர். எதிர்த்துவந்த யானைகளைச், சிங்கங்கள் எவ்வாறு தம்கூரிய நகங்களால் காயப்படுத்திடுமோ அவ்வாறு இந்தப் படைவீரர்கள் எதிரி களின் உடல்களைத் தம் கைகளில் உள்ள கூரிய நகங்களைக் கொண்டு காயப்படுத்தினர்.

ச்லோகம்.13. வீரகம்பண்ணன் தன்னுடைய வாளைக் கொண்டு இரு யானைகளை இருகூறாகப் பிளந்தான். அவைகளின் மேல் அமர்ந்து போரிட்ட வீரர்களும் தம்முடைய கவசங்களோடு இறந்துபட்டனர். மற்றைய வீரர்களிடமிருந்து அடையாளம் காண்பிக்கக்கூடிய அவர்கள் அணிந்திருந்த சின்னங்களும் உருக் குலைந்தன. அதனால் யானைப்படை வீரர்களுக்கும், காலாட்படை வீரர்களுக்கும் இடையேயான வேறுபாட்டினைக் காண இயலவில்லை.

ச்லோகம்.14. வீரகம்பண்ணன் யானைகளை அவற்றின் முகங்களிலே அம்புகளை விட்டுக் கொன்றதால் எங்கும் ரத்த ஆறு ஓடியது. ஆற்றின் அடிப்பகுதியிலே தேங்கி நிற்கும் மணல்கள் போலக் காணப்பட்டன, யானையின் நெற்றிப்பகுதியிலிருந்து உதிர்ந்த முத்துக்கள்.

ச்லோகம்.15. இவ்வாறு ஓடிய ரத்த ஆற்றினைக் கண்ட போது, பூமியில் ஒரு தாமிரபரணி ஆறு மட்டும் ஓடவில்லை. பல தாமிரபரணி ஆறுகள் ஓடிக்கொண்டிருப்பது போன்ற தோற்றத்தை உண்டு பண்ணியது.

ச்லோகம்.16. மன்னனால் எறியப்பட்ட ஈட்டிகள் யானையின் முகத்திலே ஆழமாகப் பதிந்திட அதன் நெற்றியில் இருந்த முத்துக்கள் பூமியின்மேல் உதிர்ந்தன. இந்தக் காட்சியானது அன்றொரு நாள் சுப்ரமண்யன் க்ரௌஞ்ச மலையைத் துளையிட்ட போது அதிலிருந்து வெளிப்பட்ட அன்னங்களைப்போல் காட்சியளித்தன.

ச்லோகம்.17. போர்க்களத்தில் அயராது போரிட்டுக் கொண்டி ருந்த மன்னன், எதிரிகள் பலரின் உடல்களின் பல பாகங்களை வெட்டிச் சாய்த்தான். காட்டில் தன்னிடம் அகப்பட்ட மான்களைக் கழுதைப்புலியானது தன் கூரிய நகங்களால் காயப்படுத்துவதை நினைவூட்டியது இந்தச் செயல்.

ச்லோகம்.18. வீரமிக்க மன்னன் தலைப் பாகையணிந்திருந்த எதிரிகளைத் தன் கைகளிலிருந்த வெள்ளித்தடிக்கொண்டு, அவர்தம் தலைகளில் ஓங்கிய டித்திட அந்த எதிரிகளின் விழிதிரைகளில் பொருந்தி யிருந்த கண்கள் தம் இடத்தை விட்டு பெயர்ந்தபோதிலும் மீண்டும் அவை விழித்திரைகளில் ஒட்டிக்கொண்டன.

ச்லோகம்.19.இவ்வாறு மன்னனும் படைவீரர்களும் பற்பல ஆயுதங்களைக் கொண்டு எதிரிகளின் படைகளை நாசம் செய்தனர். எதிரியின் படைவீரர்கள் உயிருக்கு அஞ்சி எங்கேயோ சென்று ஒளிந்து கொண்டனர். பிரளய காலத்தில் எங்கும் காணப்படும் தீயானது இடை விடாது பொழியும்



மழையினால் அணைக்கப்படுவது போன்றதை ஒத்திருந்தது இந்த நிகழ்ச்சி.

ச்லோகம்.20. பரசுராமன், ராமன், பீமன், அர்ச்சுனன் ஆகி யோரையும் மிஞ்சிடும் அளவில் போர்புரிந்த வீரகம்பண்ணனின் போர்த்திறனைக் கண்டு யுத்தகளத்திற்கு வருகை தந்த நாரதர் வியப்புற்றார்.

ச்லோகம்.21. நிகழ்ந்தபோரில் தன்படைவீரர்கள் அஞ்சி ஓடிடும் காட்சியைக் கண்ட முகம்மதிய மன்னன் தானே வீர கம்பண்ணனுடன் போரிட முற்பட்டான். இந்தப் போரானது விருத் தாசுரனுக்கும், இந்திரனுக்கும் நடந்த போரை நினைவூட்டியது.

ச்லோகம்.22. கண்களின் இமைகளில் உள்ள மயிர் முடியானது பின்னப்பட்டு, கண்கள் சிவந்து கோபமே வடிவெடுத் தவனாய், பெருமளவில் மது அருந்தியவனாய், அச்சமூட்டும் தோற்றத்தைக் கொண்ட முகம்மதிய மன்னன் போர்க்களத்திற்கு வருகை தந்தான்.

ச்லோகம்.23. அவன் கொண்ட கோபத்தை மறைத்து காண்பிப்பதுபோல் அமைந்திருந்தது அவன்முடியில் சாற்றிக் கொண்டிருந்த மணிகளால் ஆன தலைப்பாகை. பறந்து செல்லும் ஆற்றலைக் கொண்ட குதிரையின்மேல் அமர்ந்து போர்க்களத்திற்கு வருகை தந்தான் அந்த முகம்மதிய மன்னன்.

ச்லோகம்.24. அந்த முகம்மதிய மன்னன் வில்லை வளைத்து அம்புகளை எய்திட முற்பட்டபோது எழுந்த ஓசையானது வெற்றித்திருமகளின் கால்களில் அணிந்திருந்த சிலம்புகளிலிருந்து எழுந்த ஓசையை ஒத்திருந்தது. நீண்ட நாட்களாக முகம்மதிய மன்னனைவிட்டு நீங்கியிருந்த

வெற்றித்திருமகள் விரைந்தோடி வந்தபோது அவள் காலில் அணிந்திருந்த சிலம்புகளின் ஒலியை நினைவூட்டியது இந்தச் செயல்.

ச்லோகம்.25. ஹொய்சாள மூன்றாம் வீரவல்லாள னையும் சோழ, பாண்டிய மன்னர்களையும் போரிலே வென்ற சுல்தானின் வீரத்தைக்கண்டு வியந்த வீரகம்பண்ணன் தனக்கு நிகரான வலிமை கொண்ட ஒரு மன்னனிடம் போரிடுவதை எண்ணி மகிழ்ச்சியில் திளைத்தான்.

ச்லோகம்.26. வலிமைமிக்க வீரகம்பண்ணரும், மதுரை சுல்தானும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் அம்புகளை ஒருவர்மேல் ஒருவர் எய்திக்கொண்டனர்.

ச்லோகம்.27. வீரகம்பண்ணர் எய்த அம்புகளை தடுத்து நிறுத்திய முகம்மதிய மன்னன் வீரலக்ஷ்மியின் கடைக்கண் பார் வையைப் பெற்றிருந்தான். முகம்மதிய மன்னன் எய்த அம்புகள், யமனின் சகோதரியின் பார்வையை ஒத்திருந்தன. ஆனால் வீரகம்பண்ணரோ அந்த அம்புகளைத் தடுத்து நிறுத்தினார்.

ச்லோகம்.28. வீரகம்பண்ணரின் வில்லில் இருந்து புறப்பட்ட அம்புகள் ஸர்ப்பங்களைப்போல் சீறிக்கொண்டு பாய்ந்து வந்தன. அவ்வாறு அவை பாய்ந்து சென்றபோது கேரள மக்களின் மூச்சுக் காற்றையும், வன்னிய மன்னர்களின் நாட்டை நாசம் செய்த தீயைப் போலவும், ஆந்திர தேசத்தை தகிக்கும் சூரியன் போலவும் காணப்பட்டன.

ச்லோகம்.29. முகம்மதிய மன்னனின் படைவீரர்களின் வில்லில் இருந்து புறப்பட்ட அம்புகள் வீரகம்பண்ணருடைய படை வீரர்களின் மார்புகளில் காயங்களை உண்டுபண்ணின.



வீரலக்ஷ்மியானவள் தனது கணவனுடன் அந்தரங்கமாக உறவாடும்போது நகங்களால் ஏற்படுத்திய காயங்களைப் போன்றிருந்தன அவை.

ச்லோகம்.30. காக்கையைக் கொடியிலே சின்னமாகக் கொண்ட முகம்மதிய மன்னன் கலி புருஷனைப் போல் காணப் பட்டான். வீரகம்பண்ணர் அவனைப் போர்க் களத்திலே வீழ்த்தி, தான் இந்தப் போரில் வெற்றி பெறலாம் என்ற எண்ணம் கொண்டிருந்த முகம்மதிய மன்னனின் எண்ணங்களை அடியோடு அழித்தார்.

ச்லோகம்.31. வீரகம்பண்ணர் தம்முடைய வில்லின் வலிமை யால் முகம்மதிய மன்னனது வில்லின் நாணை அறுத்தார். ராஜ்ய லக்ஷ்மியின் கழுத்தில் முகம்மதிய மன்ன னால் அணிவிக்கப் பட்டிருந்த மங்கலநாண் அறுபட்டு விழப்போவதை முன்கூட்டி அறிவித்தது இந்தச் செயல்.

ச்லோகம்.32. வில் அறுபட்டதால் பெரும் சினம் கொண்ட முகம்மதிய மன்னன் அந்த அறுபட்ட வில்லை வீசியெறிந்தான். குதிரையின் பக்கவாட்டில் வைக்கப் பட்டிருந்த வாளினை தன்கையில் ஏந்திக்கொண்டான்.

ச்லோகம்.33. முகம்மதிய மன்னனின் இந்தச் செயலைக் கண்ட வீரகம்பண்ணர், அகஸ்தியரால் அவருக்கு அளிக்கப்பட்ட தன் வாளைக் கையில் ஏந்தினான். அப்போது அவன் யமனைப்போன்ற தோற்றத்தைப் பெற்றான்.

ச்லோகம்.34. வீரகம்பண்ணரின் கையில் காணப்பட்ட சாம்பல் நிறங்கொண்ட அந்த வாளானது நச்சுப்புகையை கக்கிக் கொண்டிருந்தது. முகம்மதியர்களுடைய உயிரைக் குடிக்க முற்பட்ட கொடிய நாகம்போல் அந்த வாளானது காணப்பட்டது.

ச்லோகம்.35. தனது பட்டத்து குதிரைமேல் வீற்றிருந்து போர் புரிந்த வீரகம்பண்ணரின் ஒளிமிக்க வாளானது, அவன் தலையைக் கொய்தது.

ச்லோகம்.36. சுல்தானின் தலை யுத்த பூமியிலே உருண் டோடியது. தலை வணங்குதல் என்பதை அறியாத முகம்மதிய மன்னனின் தலை கடவுளைக்கூட வணங்கிய தில்லை. அப்படிப்பட்ட தலையானது பூமியில் வீழ்ந்தது. அவனுடைய மேன்மையும் மண்ணோடு மண்ணாய் புதைந்தது.

ச்லோகம்.37. சுல்தானின் தலை பூமியிலே வீழ்ந்த போதிலும் அவனது தலையற்ற உடலின் ஓர் அங்கமான ஒரு கையானது குதிரையின் கடிவாளத்தை விடாமல் பிடித்துக் கொண்டு அதன் வேகத்தைக் கட்டுப் படுத்துவதையும், மற்றொரு கை எதிரிகளை வெட்டி வீழ்த்துவதற்காக ஓங்கிய தையும் கண்டு வியப்புற்றான் மன்னன்.

ச்லோகம்.38. வானுலகிலிருந்து பூமாரி பொழிந்தனர் தேவர்கள். நாடு நலம் பெறவும், மக்கள் நல்லதோர் ஆட்சி முறையைப் பெற்றிடவும் அவர்கள் அக்ஷதையை தூவி ஆசிர்வதித்தனர்.

ச்லோகம்.39. காட்டுத்தீயிலிருந்து விடுபட்ட வனப்பகுதியைப்போலவும், கிரஹணம் நிகழ்ந்தபின் காணப்படும் நிர்மலமான வான்வெளியைப்போலவும், காளிங்கன் விரட்டியடிக்கப்பட்ட பிறகு தெளிந்த நீரினால் சூழப்பட்ட யமுனை ஆற்றைப்போலவும் தென்னிந் தியப் பகுதி மதுரை சுல்தானின் வீழ்ச்சிக்குப்பிறகு காட்சியளித்தது.

ச்லோகம்.40. எதிரிகளின் படைவீரர்களுக்கும் அபயம்



அளித்தான் வீரகம்பண்ணன். அனைவரும் மகிழ்ந்திட நல்லாட்சி புரிந்தான் வீரகம்பண்ணன்.

கங்காதேவியினால் இயற்றப்பட்ட வீரகம்பராய சரித்திரம் என்று அழைக்கப்படும் **மதுராவிஜயம்** முற்றுப் பெற்றது. ***

**மதுரா விஜயம் முற்றும்.**

கோயிலொழுகில் காணப்படும் குறிப்புகளின்படி கோபண்ண உடையார் ஸ்ரீரங்கநாதனுக்கு 52 கிராமங் களைத் தானமாகக் கொடுத்தார் (A.R.No. 35/1948-49, ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்-289) என்றும், புக்கரின் மகனான (முதலாம் புக்கருக்கும், பட்ட மகிஷிகளில் ஒருவரான கௌரிக்கும் பிறந்தவன்.) 2ஆம் ஹரிஹரன் அவருடைய மகன் விருப்பண்ண உடையார் (இவருக்கு விரூபாக்ஷர் என்ற ஒரு பெயரும் உண்டு) ஆகியோர் திருவரங்கம் பெரியகோயிலில் துலாபாரம் ஏறி கி.பி. 1377ஆம் ஆண்டு பொற்காசுகளைக் காணிக்கையாக அளித்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வீரகம்பண்ண உடையாரை இரண்டாம் கம்பண்ணர் என்றும் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. அவருடைய மகனாக ஒம்மண உடையார் திருமலை கல்வெட்டுகளில் குறிப்பிடப் படுகிறார். மதுரையை வெற்றி கொண்டபின் காஞ்சிபுரம், மதுரைப் பகுதிகளை வீரகம்பண்ண உடையார் ஆண்டு வந்திருக்கக்கூடும். ஆயினும் முதலாம் புக்கரின் மறை விற்குப் பிறகு 2ஆம் ஹரிஹரரே விஜயநகர மன்னனாக முடிசூடப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. ***



"மின்னலின் ஒளியைக் கக்கிக்கொண்டு போரிடவல்ல இந்த வாள் உன் கரங்களில் இருக்கும்வரை யமனும்கூட உன்னிடம் வருவதற்கு அஞ்சுவான். வடமதுரையை நோக்கிச் சென்று கம்ஸனாகிய கொடியோனை வீழ்த்திய கிருஷ்ணனைப் போன்ற நீ இப்போது இந்த வாளுடன் தென்மதுரையை நோக்கிச் செல்வாயாக. அங்கே உலகில் வாழும் அனைத்து மக்களுக்கும் தீமை புரிபவர்களாய் கொடுங்கோலர்களாகிய முகம்மதியர்களை வீழ்த்தித் தென்மதுரையை வெற்றி கொள்வாயாக" – தர்மதேவதையின் ஆணை.